தொகுதி 2

# தமிழாய்வு

'திட்பமும் நுட்பமும்'

பொதுப் பதிப்பாசிரியர் :
பேராசிரியர், டாக்டர் ந. சஞ்சீவி,
எம். ஏ., எம். லிட்., பிஎச். டி.,
டிப். மானிடவியல், அரசியல் & ஆட்சியியல்,
தமிழ்த்துறைத் தலைவர்,
சென்னைப் பல்கலைக் கழகம்.

உதவி :
தமிழ்த்துறை ஆசிரியர்களும் மாணவர்களும்



சென்னைப் பல்கலைக் கழக வெளியீடு

1973

## சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறை வெளியீடுகள்

| வ. எண் | ஆசிரியர்/ப. ஆசிரியர் | நூலின் பெயர் | வெளியான ஆண்டு |
|---|---|---|---|
| 1 | Thiru K.N. Sivaraja Pillai | Agastiya in Tamil Land | |
| 2 | திரு. கெ. என். சிவராஜ பிள்ளை | 'உந்து' என்னும் இடைச் சொற் பிரயோகம் அல்லது புறநானூற்றின் பழைமை | 1929 |
| 3 | Thiru K. N. Sivaraja Pillai | The Chronology of the Early Tamils | 1932 |
| 4 | திரு. வே. வேங்கடராஜுலு ரெட்டியார் (4) | பரணர் | 1933 |
| 5 | டாக்டர் உ. வே. சாமிநாதையர் | சங்கத் தமிழும் பிற்காலத் தமிழும் | 1934 |
| 6 | திரு. வே. வேங்கடராஜுலு ரெட்டியார் (5) | கபிலர் | 1936 |
| 7 | எஸ். அநவரதவிநாயகம் பிள்ளை (ப. ஆ.) (6) | நாநார்த்த தீபிகை —முத்துசாமிப்பிள்ளை | 1936 |
| 8 | ,, (7) | சிவநெறிப்பிரகாசம் —சிவாக்கிரயோகி | 1936 |
| 9 | திருமதி. டி. என். தாணு அம்மாள் | பிற்காலச் சோழர் காலத் தமிழ் இலக்கியம் | 1936 |
| 10 | திரு வே. வேங்கடராஜுலு ரெட்டியார் (1) | இலக்கணக் கட்டுரைகள் | 1937 |
| 11 | திரு. எஸ். வையாபுரிப் பிள்ளை (2) | புறத்திரட்டு | 1938–39 |
| 12 | திரு. வே. வேங்கடராஜுலு ரெட்டியார் (3) | திராவிட மொழிகளின் மூவிடப் பெயர் | 1939 |
| 13 | திரு. எஸ். வையாபுரிப் பிள்ளை (ப. ஆ.) (4) | கயாதரம்-கயாதரர் | 1939 |
| 14 | திரு. கி. வா. ஜகந்நாதன், (4) | தமிழ்க்காப்பியங்கள் | 1940 |
| 15 | திரு. வே. வேங்கடராஜுலு ரெட்டியார். (ப. ஆ.) (14) | ஸ்ரீபுராணம் | 1943 |
| 16 | திரு. எஸ். வையாபுரிப் பிள்ளை (ப. ஆ.) (15) | திரிகடுகமும் சிறுபஞ்ச மூலமும் | 1944 |
| 17 | திரு. வே. வேங்கடராஜுலு ரெட்டியார். (16) | தொல்காப்பியம் எழுத்ததி காரவாராய்ச்சி | 1934 |

5/-

தொகுதி 2

# தமிழாய்வு

'திட்பமும் நுட்பமும்'




பொதுப் பதிப்பாசிரியர் :
பேராசிரியர், டாக்டர் ந. சஞ்சீவி,
எம். ஏ., எம். லிட்., பிஎச். டி.,
டிப். மானிடவியல், அரசியல் & ஆட்சியியல்,
தமிழ்த்துறைத் தலைவர்,
சென்னைப் பல்கலைக் கழகம்.

உதவி :
தமிழ்த்துறை ஆசிரியர்களும் மாணவர்களும்




சென்னைப் பல்கலைக் கழக வெளியீடு

1973

# TAMIḺĀYVU

## (Annals of Tamil Research)

**" CLARITY AND PRECISION "**

*General Editor :*

Dr. N. SANJEEVI, M.A., M.Litt., Ph.D.,
Dip. in Anthro., Pol. & Pub. Admn.,
Professor & Head of the Department of Tamil, University of Madra .

*Assistance :*

STAFF & STUDENTS OF THE DEPARTMENT OF TAMIL

**DEPARTMENT OF TAMIL**

UNIVERSITY OF MADRAS

1973

# பதிப்புரை

சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறை செய்துவரும் புதுப் பணிகளுள் ஒன்று 'தமிழாய்வு' என்னும் ஆய்வு இதழ் வெளியீடு. முதல் தொகுதியின் முதல் இதழ் 1972-ஆம் ஆண்டு ஆகஸ்டுத் திங்களில் வெளிவந்தது. அதனைத் தமிழுலகம் விரும்பி வரவேற்றதன் பயனாக அவ்விதழ்கள் சில மாதங்களில் தீர்ந்துவிட்டன. பல இடங் களிலிருந்தும் அதன்படிகளை வேண்டிக் கடிதங்கள் வந்தவண்ண மாயிருக்கவே அதனை மறுபதிப்பிடவும் பல்கலைக் கழகம் முன் வந்துள்ளது.

இப்பொழுது தமிழாய்வின் இரண்டாவது தொகுதி 328 பக்கங் களில் உருப்பெற்று வெளிவருகின்றது. இதன் முதற்பகுதியாக இடம் பெறுவன ஆசிரியர்-மாணவர் கருத்தரங்கில் ஆராயப்பட்ட மூன்று கட்டுரைகள். இவற்றுள் முதற் கட்டுரையாகிய 'திராவிட இனத்தின் தோற்றம்' பற்றிய மறு ஆய்வுக் கட்டுரை, திராவிட இனம்பற்றிய கருத்துகளை நாளது வரையில் தொகுத்துத்தரும் வரலாற்றுச் சிறப்புக் கட்டுரையாகும். அடுத்துவரும் இரண்டும் 'பெருங்கதை மாண்பு'களையும், 'தமிழில் அணியிலக்கண நூல்களை'யும் முறையே விளக்குவன.

அடுத்த பகுதி, **'கப்பலோட்டிய தமிழர் வ. உ. சிதம்பரனாரின் நூற்றாண்டுவிழாக் கருத்தரங்கில்'** பேராசிரியப் பெருமக்களால் படிக்கப்பெற்ற கட்டுரைகளின் தொகுப்பு. ஐந்து பெருந் தலைப்பு களில் பேராசிரியர் ஐவர் நிகழ்த்திய உரைகளும் கப்பலோட்டிய தமிழரின் பல்திறத் தொண்டுகளையும் பாங்குற எடுத்து மொழி வனவாகும். மேலும், இப் பகுதியில் வ. உ. சியின் வாழ்க்கைக் குறிப்புகளும், அவர் காந்தியடிகளுக்கு எழுதிய ஆங்கிலக் கடிதத்தின் தமிழாக்கமும் இடம்பெற்றுள்ளன. வ. உ. சியின் உருவப்படத்துடன் அவர் அந்நாளில் வாழ்ந்த தேசத்தொண்டர் சிலருடன் வீற்றிருக்கும் படமும், கோவைச் சிறையில் அவர் இழுத்த செக்கின் உருவமும், அவர் காந்தியடிகளுக்கு எழுதிய கடிதத்தின் உண்மைப்படியும் கொடுக்கப்பட்டுள்ளன. இவ்வாறாக, இக் கருத்தரங்கப்பகுதி கப்பலோட்டிய தமிழரின் நினைவைப் போற்றும் ஒரு நினைவு மலராகவும் திகழ்கின்றமை காணலாம்.

*

'மதிப்புரை மாலை' சில தமிழ் வெளியீடுகளைக் குறித்த மதிப்புரைகள் அடங்கிய பகுதி. நூல் வரலாற்று நோக்கில் இதுவும் ஓர் இலக்கிய வரலாற்றுப் பகுதியாய் அமைந்துள்ளது.

முந்திய ஆண்டில் தமிழ்த்துறையில் நிகழ்ந்த சிறப்புச் செய்திகளையும், இப்பொழுது தமிழ்த்துறையில் பணிபுரிவோரைப் பற்றிய குறிப்புகளையும் பிறசெய்திகளையும் 'செய்தித் திரட்டு' என்னும் இறுதிப்பகுதியில் காணலாம்.

'அச்சில் வாரா அருந்தமிழ்' நூல் வெளியீட்டு வரிசையில் இரண்டாவதாக, ஐஞ்சிறு காவியங்களுள் ஒன்றான 'நாககுமார காவியம்' என்னும் பழைய நூல் ஏட்டுப் பிரதியிலிருந்து அச்சுருப் பெற்றுள்ளது. சிதைவு நிலையில் கிடைத்த பிரதியைச் சீர்செய்து உரையுடன் வெளியிட்டிருப்பதோடு சிறப்புப்பெயர் அகராதியும் தெளிவாகத் தரப்பட்டிருக்கிறது.

இந் நாககுமார காவியத்தைத் தனி நூலாகவும் பல்கலைக் கழகம் வெளியிட்டுள்ளது. எனவே, இதனைக் காவிய நூல் வரிசையில் சேர்த்துக்கொள்ளவும் வாய்ப்பு நேர்ந்துள்ளது.

முதல் தொகுதி போலவே இத்தொகுதியும் செம்மையுற அமைய அரும்பெரும் உதவி புரிந்த புலவர்மணி மு. சண்முகம் பிள்ளை அவர்கட்குத் தமிழ்த்துறையின் சார்பில் உளமார்ந்த நன்றியறிதலைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

சென்னை
31-12-'73

ந. சஞ்சீவி

# பொருளடக்கம்

மூக்குதமிழ்ப்பண்டிதர்

# திராவிடர் இனத்தின் தோற்றம்

## (ஒரு மறு ஆய்வு)

**க. த. திருநாவுக்கரசு,**
தமிழ் விரிவுரையாளர்,
திருக்குறள் ஆராய்ச்சிப் பகுதி,
சென்னைப் பல்கலைக் கழகம்.

இந்தியாவில் திராவிடர் இனம் 1.1.,—மறு ஆய்விற்குரிய காரணம் 1.2—இனம்—சொல்லும் பொருளும் 1.3-8—இனப் பாகுபாடு 1.9-10— (1) உடற் கூற்று அமைப்புவழி இனப்பாகு பாடு 1.11–14— (2) மொழி வழி இனப்பாகுபாடு 1.15-19—திராவிடர்—சொல்லும் பொருளும் 1.20–26—சமஸ்கிருதத்தில் திராவிடம் 1.27-37—தமிழ் நாட்டு வழக்கு 1.38-40—வெளி நாட்டாரின் குறிப்பு 1.41–44.

திராவிடர் இனப்பாகுபாடு 1.45–48—திராவிடர் இனத்தின் தோற்றம் 1.49–54—(அ) வெளிநாட்டிலிருந்து வந்தவர் 1.55—(1) எகிப்திலிருந்து வந்தவர் 1.56–57—(2) நடு ஆசியாவி லிருந்து வந்தவர் 1.58—(3) மேற்காசியாவிலிருந்து வந்தவர் 1.59–61—(4) நடுநிலக் கடற்பகுதியிலிருந்து வந்தவர்—(1) கென்னடியின் கருத்து 1.62—(2) சிலேட்டரின் துணிவு 1.63—(3) எய்மெண்டார்ப்பின் புதிய விளக்கம் 1.64–69—(4) மொழியியல் அறிஞரின் நம்பிக்கை 1.70—(5) பல்லமைப்பு உணர்த்தும் உண்மை 1.71—(6) மதிப்பீடு 1.72—75 (7) ஹாலின் புத்தொளி 1.76–78—(8) எய்மெண்டார்ப் கருத்துகளின் வன்மை மென்மைகள் 1.79-85—(ஆ) இந்தியாவின் பழங்குடி மக்களே திராவிடர் 1.86—(1) லெமூரியா 1.87-95—(2) கடல் கோளும் முச்சங்க வரலாறும் 1.96-107—(3) புத்தொளி 1.108—(4) புது விளக்கம் 1.109-115.

---

28-7-1971-ல் நடைபெற்ற தமிழ்த்துறை ஆசிரியர் மாணவர் கருத்தரங்கக் கட்டுரை.

## இந்தியாவில் ‘திராவிடர்’ இனம்

1.1 இந்தியாவின் மக்கள் தொகைக் கணிப்பாளர் இந்தியாவில் மூன்று முதன்மையான இனங்களைச் சேர்ந்த மக்கள் வாழ்ந்து வருவதாகக் கருதுகின்றனர்.[1] அவற்றுள் திராவிடர் இனம் தென்னிந்தியாவில் சிறப்பாகவும், நடு இந்தியாவிலும் வட இந்தியாவிலும் பரவலாகவும் வாழ்ந்து வருவதாக அக்கணிப்பாளர் கூறுகின்றனர். இத் திராவிட இனத்தின் தோற்றத்தைப் பற்றிக் கடந்த நூறு ஆண்டுகளில் பல்வேறு கருத்துகளும் கொள்கைகளும் அறிஞர் பெருமக்களாலும், ஆராய்ச்சியாளர்களாலும் அவ்வப்போது எடுத்தியம்பப் பெற்றுள்ளன.

## மறு ஆய்விற்குரிய காரணம்

1.2 இன்று அறிவியல் மிகவிரைவாக வளர்ச்சியடைந்து வருகிறது. அதன் பயனாக அறிவாராய்ச்சித் துறையில் பல வகையான மாற்றங்களும் முன்னேற்றங்களும் உண்டாகியுள்ளன. திராவிடர் இனத்தின் தோற்றம் பற்றி அண்மைக்காலத்தில் ஆராய்ந்த அறிஞர்களுள் பெரும்பாலோர், தத்தம் விருப்பு வெறுப்புகளுக்கு இரையாகியுள்ளனர். அதனால், கருத்து வேறுபாடுகளும் மாறுபாடுகளும், மோதல்களும் தாக்குதல்களும் தோன்றியுள்ளன. இக் கருத்துக் குழப்பத்திற்கு இடையே மறைந்துகிடக்கும் உண்மையைக் கண்டறிய முயல்வதே இவ்வாய்வுரையின் நோக்கமாகும். இந் நோக்கத்தினை அடிப்படையாகக்கொண்டே, ‘திராவிடர் இனத்தின் தோற்றம்’ இங்கு மறு ஆய்வு செய்யப்பெறுகிறது.

## ‘இனம்’—சொல்லும் பொருளும்

1.3 ‘இனம்’ என்னும் சொல்லிற்குத் தமிழில் வருக்கம், குலம், சுற்றம், நிரை, ஒப்பு[2] என்பன போன்ற பல பொருள்கள் வழங்கிவருகின்றன. இவற்றுள் ‘வருக்கம்’ என்ற பொருளிலேயே, நாம் இங்கு ‘இனம்’ என்னும் சொல்லைப் பயன்படுத்துகிறோம். ஆங்கிலத்தில் வழங்கும் ‘ரேஸ்’ (Race) என்னும் சொல்லிற்குரிய பல்வேறு பொருள்களுள், ஒரு மூதாதையரின் கால்வழியில்

---

1. இந்தியாவில் உள்ள மக்களைத் திராவிடர், இந்தோ-ஆரியர், மங்கோலியர் என்னும் மூவகை இனங்களைச் சேர்ந்தவர்களாக முதன்முதல் பாகுபடுத்திக்கூறியவர் எச். எச். ரிசிலி (H. H. Risley) என்பவராவர்.

காண்க: The People of India, Thacker Spink, Calcutta, 1915. pp. 12-18.

2. Tamil Lexicon, Vol. I, University of Madras, 1936, P. 870.

தோன்றிப் பொதுவான பண்புகளை மரபுவழியாகப் பெற்றுள்ள மக்களின் பகுதி[3] என்னும் பொருளே சிறப்புடையது. இப் பொருளுடைய 'ரேஸ்' என்னும் ஆங்கிலச் சொல்லிற்கு நேரான தமிழ்ச் சொல்லாக இங்கு 'இனம்' என்னும் சொல்லை நாம் கையாளுகிறோம். குறிப்பிட்ட சில பண்புகளை அடிப்படையாகக்கொண்டு, உலகத்தில் வாழும் மக்களைப் பல்வேறு இனங்களாகப் பாகுபடுத்திக் கூறும் மரபு, கடந்த பல நூற்றாண்டுகளாக இருந்து வருகிறது. 'இனம் என்பது என்ன ?' என்னும் வினாவிற்குத் தெளிவாக விடை கூறுவதும், 'இதுதான் இனம் என்னும் சொல்லிற்குப் பொருள்' என்று வரையறுத்துக் கூறுவதும் எளிய செயலன்று.

1.4 பொருளாழம் மிக்க பல்வேறு சொற்களைப்போன்றே, 'இனம்' என்னும் சொல்லும் பல பொருள்பட எடுத்தாளப்பெறுகிறது. சில சமயங்களில் 'நாட்டு மக்கள்' என்னும் பொருள்படுமாறு இச் சொல் கையாளப்படுகிறது. பிரெஞ்சு இனம், சீன இனம், அமெரிக்க இனம் என்றெல்லாம் பேசப்படுவதை நாம் கேட்கின்றோம். ஒரே மொழி பேசும் மக்களை இதே சொல்லால் குறிப்பிடுவதையும் நாம் காணுகின்றோம். ஜெர்மானிய இனத்தவர், ஆரிய இனத்தவர், செமிடிக் இனத்தவர் என்று குறிக்கும் வழக்கமும் இருந்துவருகிறது. ஒரு பொது இடத்தில் வாழ்ந்தாலும், பொதுவான வரலாறு, மரபு, பொதுமொழி, சமயம், பொதுவான சமூக, அரசியல், பொருளாதார நிறுவனங்கள் ஆகியவற்றால் கட்டுண்டு செயற்படும் மக்கள் கூட்டத்தையே 'இனம்' என்னும் பெயரால் அறிஞர் சுட்டுவதைக் காணுகின்றோம். இப்பொருளிலேயே பண்டைக் கிரேக்கரும், யூதரும் தனி இனத்தவராகக் கருதப்பெற்றனர். இவ்வாறு செய்யப் பெறும் பாகுபாடெல்லாம் தவறானவை. இவை நாடு, மொழி, பண்பாடு, பழக்கவழக்கங்கள் போன்றவற்றை அளவுகோலாகக்கொண்டு செய்யப் பெறுவன; அறிவியல் ஆராய்ச்சி முறைக்குப் பொருந்தி வருவனவல்ல. இவை காலந்தோறும் சூழ்நிலைக்கேற்ப மாறக்கூடிய இயல்புடையன என்று இவற்றைப் புறக்கணிப்பாரும் உண்டு. ஆனால், இனத்தின் உண்மையான பொருள், மனித இனத்தின் உடலுறுப்புகளின் அமைப்பைப் பொறுத்தது என்பர். 'உயிரின

---

3 The descendants of a common ancestor, especially, those who inherit a common set of characteristics; such a set of descendants, narrower than a species"

—*Chamber's Twentieth Century Dictionary*, G. B., 1960. P. 907.

மரபுரிமை மூலம் வழிவழியாகக் கொண்டுசெல்லக்கூடிய, பொதுவான, கண்டறியத் தக்க உடற்கூற்றுப் பண்புகளை உடைய மனிதர்களின் சேர்க்கையே இனம்' என்று கூறுவதே அறிவியல் ஆராய்ச்சிக்குப் பொருந்திவரக் கூடிய கருத்தாகும்.

1.5 இரண்டாவது உலகப் போருக்குப் பிறகு, 'இனம் என்பது ஒரு சமூகப் புனைந்துரைக் கதை' (Social Myth) என்ற கருத்து அறிஞர் பெருமக்களிடத்துப் பரவலாக நிலவி வருகிறது. மனித-சமூகவியற் கண்ணோட்டத்தில் மனிதனையும் அவனை ஒன்றுசேர்க்கும் சமூகத்தையும், அவனுடைய பண்பாட்டையும், இவை போன்ற பிற வற்றின் இயல்புகளையும் புரிந்துகொள்ள அது உதவ முடியாது என்னும் கருத்து சமூகவியலாரால் பெரிதும் போற்றப்பட்டுவருகிறது. யுனஸ்கோ (UNESCO) ஆதரவில் பாரிஸ் நகரில் கூடிய அறிவியல் அறிஞர்கள், "சமூக நடைமுறை வாழ்க்கையில் 'இனம்' என்பது ஓர் உயிரியற் கருத்து என்பதைவிட, ஒரு சமூகப் புனைந்துரைக் கதை (Social Myth) என்பது பொருந்தும்"[4] என்ற முடிவிற்கு வந்தனர்.

1.6 இரண்டாவது உலகப் போர் உண்டானதற்குரிய மூல காரணம் ஜெர்மானியருடைய இன மையக் கொள்கையேயாகும் (Ethnocentrism). "ஆரிய இனமே உலகில் சிறந்தது; அவர்களே உலகை ஆளத்தகுதியுடையவர்கள்" என்ற கோட்பாட்டை ஹிட்லர் நடைமுறையில் கடைப்பிடித்தமையால் மனித இனத்திற்கு உண்டான இன்னல்களையும் இடையூறுகளையும், கேடுகளையும் கெடுதல்களையும் அளவிட்டுரைக்க முடியாது. இதனால், அறிஞர்களிடையே இனவெறிக்குக் காரணமான 'இனக்கொள்கை'யின் மீது வெறுப்புண்டாயிற்று. மனித இனம் மண்ணில் நல்லவண்ணம் வாழவேண்டுமானால் குறுகிய இனப்பற்றுக்கு இடந்தரலாகாது என்று அவர்கள் கருதுகின்றனர். இதன் விளைவாக, 'இனம் என்பது ஒரு சமூகப் புனைந்துரைக் கதை' என்னும் கோட்பாடு தோன்றலாயிற்று. இனம் என்ற கருத்து "பலவகையான தவறான பொருள்களை இழிவாக அளித்ததனால், அறிவியல் துறைகளிலிருந்தே அதை முழுமையாகக் கைவிடவேண்டிய நெருக்கடி உண்டாகி விட்டது"[5] என்று ஆஷ்லி மாண்டேகு என்ற மானிடவியல் வல்லுநர் கூறுகின்றார்.

---

4. UNESCO 'Courier', July-August, 1950; P. 8.

5. Ashley Montague, W. F.: 'Man's Most Dangerous Myth: The Fallacy of Race', Columbia University, N. Y; 1947., P. 35.

1.7 மேலும், அறிவியல் வளர்ச்சியால் உண்டான முன்னேற்றம் பல்வேறு நாட்டுமக்களிடையேயும் பல்வேறு இனத்தவரிடையேயும் நெருக்கமான தொடர்பினையும், கலப்பினையும் உண்டாக்கியிருக்கிறது. இதனல், இனப்பாகுபாடே அழிந்து விட்டது என்று சில சமூகவியல் ஆராய்ச்சியாளர் நம்புகின்றனர். அறிவியல் வளர்ச்சியால் மனித இனம், இடத்தாலும் காலத்தாலும் உண்டாகக் கூடிய இடையூறுகளை வென்று வருகிறது என்பது உண்மை. ஆனல், பல்வேறு நாட்டு மக்களுக்கு இடையேயுள்ள பண்பாட்டு வேற்றுமைகளோ, பல்வேறு இனங்களுக்கு இடையே யுள்ள இனப்பண்புக் கூறுகளோ அழிந்தொழிந்து விட்டன என்று நாம் சொல்ல முடியாது.

1.8 "நிறம் அல்லது வடிவ அமைப்பைப் போன்ற முற்போக்கான அல்லது குறிப்பிட்ட ஒரு சில பண்புகளை மட்டும் அடிப்படையாகக் கொண்டு நாம் மனித இனத்தைப் பல்வேறு இனங்களாகப் பாகுபடுத்திக் கூற முடியாது. வெறும் உடற்கூற்று இயல்புகளை நிலைக்களனுகக் கொண்டு உலக மக்களைப் பல குழுக்களாகப் பிரிப்பது பொருத்தமற்றதாகும். இவ்வடிப்படையில் பாகுபாடு செய்தால் ஜப்பானில் வாழும் வெண்ணிறத் தோலுடைய ஐனூ (Ainu) க்களை நாம் தவறுதலாக வெள்ளையர் இனத்தோடு தொடர்பு படுத்தி யுரைக்க நேரிடும். மேலும், கறுப்புநிற இந்துக்களை காகேசிய (Caucasia) இனத்தைச் சேர்ந்தவர்கள் அல்லர் என்று நீக்கிவிட நேரிடும். ஆனல், உண்மையில் அவர்கள் காகேசிய இனத்தைச் சேர்ந்தவர்கள் என்பதற்கு ஆற்றல்மிக்க சான்றுகள் பல உள்ளன என்பதை நாம் மறந்துவிடக் கூடாது"[6] என்பது சமூகவியல் அறிஞர்களிடையே பொதுவாக நிலவிவரும் கருத்தாகும்.

### இனப்பாகுபாடு

1.9 இக் கூற்றினை முற்றிலும் உண்மை என்று நாம் ஒப்புக் கொள்ள இயலாது. குரோபர் (Kroeber) போன்ற மானிடவியல் நூலார் (Anthropologists), 'இனம் என்பது உயிரியல் ஆராய்ச்சிக்குகந்த கருத்தாகும். அது மரபுவழி ஒன்றுபட்டு வாழும் ஒரு குழுவினைக் குறிக்கிறது. மனித இனத்தினுடைய வளர்ச்சியின் ஒரு வகையை அது சுட்டுகிறது. ஆனல், 'இனம்' என்பதைச் சமூகப் பண்பாட்டுத் துறைக்கருத்தாகக் கொள்ளக்கூடாது. சிறப்

---

6. William F. Ogburn and Meyer F. Nimkoff: A Hand book of Sociology, Routledge & Kegan Paul Ltd., London, 1964. P. 62.

பாகச் சமூகப் பண்பாட்டுத்துறையினர் அச்சொல்லைக் கையாளாமல் இருப்பது நல்லது'[7] என்று கருதுகின்றனர்.

1.10 எனவே, மனித இனத்தின் இயல்பினையும் பண்பினையும் ஆராய்கின்றவர்கள் 'இனம்' என்னும் சொல்லால் சுட்டப்படும் கருத்தினையும், இனப்பாகுபாட்டையும் அடிப்படையாகக் கொண்டே ஆராய்ச்சி செய்யவேண்டியவர்களாக உள்ளார்கள்.

### *(1)* உடற்கூற்று அமைப்புவழி இனப்பாகுபாடு

1.11 மனித இனம் முழுவதும் ஒன்றே என்ற கருத்தை எல்லா அறிவியலாளரும் ஒப்புக்கொள்கின்றனர். 'ஹோமோ சேபியன்' (Homo Sapiens) என்னும் ஒரே உயிரினத்தின்பாற் பட்டவர்கள்தாம் மனிதர்கள் எல்லாரும் என்னும் கருத்தை ஏற்காத வர்கள் இல்லை. இப்பொதுவான மூதாதையரிடமிருந்தே எல்லா வகையான மனிதர்களும் தோன்றினர். மனித இனத்தின் பல்வேறு குழுக்களிடையே காணப்படுகின்ற வேறுபாடுகளெல்லாம் மாறு பாடுகள், தனித்தியங்குதல், இயற்கைத் தேர்வு, கலப்பு உயிரி யாக்கல், மரபுவழி இனப்பண்புகளைக் கட்டுப்படுத்துகின்ற சக்தி களின் தேர்வுகள், அவற்றின் அமைப்பில் நிகழும் மாற்றங்கள் போன்ற பல்வேறு கூர்தலறக் காரணிகளால்தான் ஏற்படுகின்றன.[8]

1.12 பொதுவாக இனப்பாகுபாட்டைப்பற்றி ஆராய்கின்ற பொழுது நமக்குச் சில உண்மைகள் புலனாகின்றன. மானிட இயல் நூலார், 'இனம்' என்னும் சொல்லை விலங்கியல் (Zoological) சார்பு பொருளில் கையாளுகின்றனர்[9] என்பது புலனாகின்றது. உடற்கூற்று அமைப்பில் காணப்பெறும் முனைப்பான சில இயல்புகளை அடிப்படையாகக்கொண்டு பல்வேறு இனங்களாக அவர்கள் மக்களினத்தைப் பாகுபாடு செய்துள்ளனர். பண்பாட்டின் முன்னேற்றத்தை முடிவு செய்யும் கூருக இனம் அமையவில்லை என்பது இரண்டாவது உண்மையாகும். எனினும், மனிதனுடைய வியத்தகு ஆற்றல்களும், சூழ்நிலைக்கேற்ப வாழ்க்கையை அமைத்துக் கொள்ளும் திறனும் இப் பண்பில் ஊறியனவாக உள்ளன. அதனால் இனப்பண்பு என்பது பண்பாட்டு வளர்ச்சிக்கு உறுதுணையாக இருந்து வருகிறது.

---

7. Kroeber, A. L.: Anthropology, Harcourt, Brace & Co., N. Y. 1948. P. 124.

8. UNESCO, Courier, July-August, 1950, P. 8

9. Shapiro, Harry L.: Collier's Encyclopaedia Vol. 16; N. Y. 1955, P. 532.

1.13 தோலின் நிறம் அல்லது வண்ணப்பொருள், மண்டை ஓட்டின் அமைப்பு, உடற்கட்டு, கண்மணியின் நிறம், உதடுகளின் அமைப்பு, முன் வந்த தாடைகளின் அமைப்பு, சுருண்ட மயிர், வழவழப்பான மயிர், அலையலையான தலைமுடி போன்ற பல திறப்பட்ட மயிரின் தன்மைகள் ஆகிய பல்வேறு உடற்கூற்றுப் பண்புகளைக் கொண்டு இனப்பாகுபாடு செய்யப்பெறுகிறது.

1.14 மனிதனுடைய விதியை வகுப்பதில் மொழி, நாடு ஆகியவற்றைவிட இனம் மிக அதிகமான பங்கு பெற்றிருக்கிறது. 'இனம்' என்பது மரபு வழிப்பண்பை உள்ளடக்கியிருக்கிறது. மரபு வழிப்பண்பு அரசையும் அரசியலையும் உருவாக்கக் காரணமாயிருந்த ஒழுக்க சமூக அறிவுப்பண்புகளைத் தன்னகத்தே கொண்டிருக்கிறது என்பது இங்குக் கருதத்தக்கது.

(2) மொழிவழி இனப்பாகுபாடு

1.15 அண்மைக் காலத்து ஆராய்ச்சியாளர்களுள் சிலர், மனித குலத்தை அவர்கள் பேசும் மொழியினை அடிப்படையாகக் கொண்டு மொழிவழி இனங்களாகப் பாகுபாடு செய்வதே சாலச் சிறந்த முறை என்று கூறிவருகின்றனர். இத்தகைய பாகுபாட்டால், உலகில் இனச் செருக்கிற்கோ, இனக்கொடுமைக்கோ இடமில்லாமல் போகும் என்று அவர்கள் நம்புகின்றனர். இதற்குச் சான்றாக 'யுனஸ்கோ' (UNESCO) வின் ஆதரவில் வெளியிடப் பெற்றுள்ள 'இந்தியப் பண்பாட்டின் வரலாற்று ஆராய்ச்சி' (Studies in the Cultural History of India) என்னும் நூலில் காணப்படும் கருத்து ஒன்றைக் காட்டலாம்.

1.16 "'ஆரியன்,' 'திராவிடன்' என்னும் சொற்கள் உண்மையில் மொழிகளைக் குறிக்கும் பெயர்களாகும் என்பதை நமக்கு நாம் நினைவூட்டிக் கொள்ளுவது நல்லது. இச் சொற்களை இனவழி அமைந்த மக்கள் குழுக்களைக் குறிப்பிடப் பயன்படுத்துவது தவருகும். உலகின் பல்வேறு பகுதிகளில் நிகழ்ந்ததைப் போன்றே இந்தியாவிலும் கடந்த பல நூற்ருண்டுகளாக இனங்களின் கலப்புப் பேரளவில் நடைபெற்றிருக்கிறது. எனவே, மொழியையும் இனத்தையும் ஒன்றுபடுத்திக் காட்ட இயலாது."[10]

---

10. Guy S. Metraux and Francois Crouzet (Ed.): Studies in the Cultural History of India (UNESCO); Shiva Lal Agarwala & Co., Agra; 1966. P. 167.

1.17 இக் கருத்தினை ஊன்றி நோக்குகின்ற பொழுது நமக்குச் சில ஐயங்கள் எழுகின்றன. 'குறிப்பிட்ட ஒரு மொழியைப் பேசுகின்ற காரணத்தால் அம் மொழியைப் பேசுகின்ற மக்கள் அனைவரும் ஓர் இனத்தைச் சேர்ந்தவர்கள் என்று கூறுவது புதிதாக வகுத்துக் கொண்ட ஒரு கொள்கையா? அல்லது அறிஞரிடையே இக் கருத்து நெடுங்காலமாக நின்று நிலவி வருகிறதா?' என்பது ஓர் ஐயம். 'குறிப்பிட்ட ஓர் இடத்தில் வாழும் மக்கள் பொதுவாக ஒரு மொழியைப் பேசுவதால், அவர்கள் அனைவரையும் ஓர் இனத்தைச் சேர்ந்த மக்கள் என்று கூறுவது பொருந்துமா? பலூசிஸ்தானத்தில் வாழும் மக்களுள் ஒரு சிறு பிரிவினர் 'பிராகுவி' என்னும் திராவிட மொழிக் குடும்பததைச் சேர்ந்த ஒரு மொழியைப் பேசுவதால் அவர்கள் திராவிடர் இனத்தைச் சேர்ந்தவர்களாகிவிட முடியுமா?' என்பன போன்ற ஐயப்பாடுகள் உண்டாகின்றன.

1.18 உலகத்தில் பேசப்பெறுகின்ற மொழிகளை ஆராய்ந்து மொழியியலார், அவற்றைப் பல குடும்பங்களாகப் பாகுபாடு செய்துள்ளனர். இப் பாகுபாடு மொழிகளை வகைப்படுத்தப் பொருந்துமே ஒழிய, மனித இனத்தை உடற்கூற்று அமைப்பிலோ, வாழுகின்ற நாட்டின் அடிப்படையிலோ பாகுபாடு செய்வதற்குப் பொருந்தாது. மொழி ஆராய்ச்சியின வசதிக்காக வகுத்துக் கொள்ளப் பெற்ற விதிமுறைகளை இன ஆராய்ச்சியில் கொண்டு வந்து பொருத்திக் காட்டுவது ஆராய்ச்சி முறையாகாது. ஒவ்வோர் ஆராய்ச்சித் துறைக்கும் தனிச்சிறப்பு வாய்ந்த அடிப்படை விதிகளும் கோட்பாடுகளும் உள்ளன. அவ்வவற்றிற்குரிய வரையறுக்கப்பட்ட நிலைக்களன்களில் அவற்றிற்குரிய விதிகளைப்பயன்படுத்த வேண்டுமே யொழிய, பிற துறைகளில் கொண்டுவந்து புகுத்திக் குழப்புவது பொருளற்ற செயலாகும். ஆனால், நம் நாட்டில் சிலர் இன்று இத் தவற்றைச் செய்துவருகின்றனர். அவர்கள் கருத்து பொருத்த மற்றது என்பதற்குப் 'பிராகுவி' மொழி பேசும் மக்களே போதிய சான்றாக உள்ளனர். அவர்களை இந்தியாவில் வாழும் திராவிட இன மக்களோடு வேறெவ்வகையிலும் நாம் தொடர்புபடுத்தவே முடியாது.

1.19 இனம் என்பது, மொழி என்னும் சொல்லிற்குரிய பொருளை உணர்த்தும் மாற்றுச்சொல்லாகாது. ஆனால், வரலாற்று நூல் தொடக்கத்திற்கு முன்பு குறிப்பிட்ட ஒரு நிலப்பரப்பில் வாழ்ந்த அல்லது குறிப்பிட்ட ஒரு குழுவைச் சேர்ந்த மக்களிடத்தில் ஒரு மொழி தனிப்பண்புகள் உடையதாகச் சிறப்புற்று விளங்குமானால்,

அது அம் மக்களுடைய பண்பாட்டை வெளிப்படுத்தும் கருவிகளுள் முதன்மையிடம் பெறும். அந் நிலையில் இனத்திற்கும் மொழிக்கும் இடையே நெருங்கிய தொடர்பு உண்டாகலாம். ஒரு குழுவைச் சேர்ந்த மக்களிடமிருந்து மற்றொரு குழுவைச் சேர்ந்த மக்களிடத்து எளிதில் சென்று பரவக்கூடிய இயல்புடையதாய் இருப்பது மொழி. எனவே, பண்பாட்டை வெளிப்படுத்த உதவும் கருவிகளுள் இரண்டாம் நிலையினதாகவே அது செயல்படுகிறது என்பதை நாம் மறத்தலாகாது.

*திராவிடர்—சொல்லும் பொருளும்*

1.20 'திராவிடர்' என்னும் சொல்லின் பொருள் என்ன? அது தமிழ்ச் சொல்லா? அல்லது பிறமொழிச் சொல்லா? என்னும் வினாக்கள் ஆராய்ச்சியாளர்களுடைய கருத்தினைக் கவர்ந்துள்ளன.

1.21 'திராவிடர்' என்னும் சொல், சமஸ்கிருத மொழிச் சொல் என்பது கால்டுவெல்லின் கருத்தாகும்.[11] 'த்ர்' என்னும் வேர்ச்சொல்லோடு 'விட்' என்னும் விகுதி சேர்ந்து 'திராவிட்' என்னும் வடசொல் அமைந்ததாக அவர் கூறுவார். 'த்ர்' என்னும் பகுதிக்கு 'ஓடு' என்றும், 'விட்' எனும் விகுதிக்குச் 'சிறு துண்டு' என்றும் பொருள்கொண்டு, 'ஓடிப்போனவர்கள் வாழும் சிறு நிலப் பரப்பு' என்று அதற்கு ஒருசாரார் விளக்கந்தருவர்.[12] மற்றொரு சாரார், 'விரட்டப்பட்டவர் வாழும் பகுதி' என்றும் பொருள் கூறுவர். இப் பொருள், "பகைமையின் காரணமாகத் தோன்றியிருக்க வேண்டும். தமிழ் என்பதே இனிமை. எனவே, 'திராவிடம்' தமிழாகாது"[13] என்று மறுப்பர் ரா. இராகவையங்கார். பேராசிரியர் எம். எஸ். பூரணலிங்கம் பிள்ளை 'திருவிடம்' (திரு+இடம்) என்னும் சொல்லே 'திராவிடம்' என்று வடமொழியாளர்களால் திரித்து வழங்கப்பெற்றது என்று 'தமிழ் இந்தியா' (Tamil India) என்னும் ஆங்கில நூலில் (பக். 6) விளக்கியுள்ளார்.

---

11. Caldwell, R.: A Comparative Grammar of the Dravidian Languages, Univ. of Madras, 1956. p. 9.

12. Srinivasa Aiyangar, M.: The Tamil Studies, Madras, 1914., p. 4.

13. இராகவையங்கார், ரா.: தமிழ்மொழி வரலாறு, அண்ணாமலைப் பல்கலைக் கழக வெளியீடு, 1943., பக். 16.

'திராவிடர்' என்னும் சொல்லிற்குத் தமிழரிடத்து அழுக்காறு கொண்டோர் கூறும் பொருளையே அடிப்படையாகக் கொண்டு, 'தீவினையைத் துரத்துவது' என்னும் பொருளில், 'திராவிடம்' என்னும் சொல்லைச் சிவஞான முனிவர் பயன்படுத்தியுள்ளமை இங்குக் குறிப்பிடத் தக்கது.

"எவ்வினையும் ஒப்புதலால் திரவிடம் என் றியல்பாடை" (காஞ்சிப். தழுவக். 243)

1.22 திருத்தந்தை ஈராசுப் (Father Heras) பாதிரியார், 'கடலின் குழந்தைகள்' என்று பொருள்படும் 'திரைமிலர்' என்னும் சொல் திரிந்து திரமிளர், திரமிடர், திராவிடர் என்ற வடிவங்களைப் பெற்றிருக்கவேண்டும் என்பதை உலகமொழிகள் பலவற்றிலிருந்து சான்றுகள் தந்து நிறுவ முயன்றுள்ளார். அதன் சுருக்கத்தைப் பின்வரும் அட்டவணையில் காணலாம் :

**பண்டைக் கால இந்தியரின் பழைய பெயர்** [14]

| வரிசை எண் | நாடு | காலம் | நூல் அல்லது வழக்காறு | 'திரைமிலர்' என்னும் சொல்லின் திரிந்த வரலாறு |
|---|---|---|---|---|
| 1. | இந்தியா | கி. மு. 1000 | பழைய தமிழின் சொற்றொகுதி | திரைமிலர் > திரமிலர் > திரமிடர் |
| | | கி. மு. 100 அளவில் கி. பி. 1573 | வட இந்தியக் கல்வெட்டுகளிலும், 'இந்தியாவில் புத்த சமயம்' என்ற தாரநாதரின் வரலாற்று நூலிலும் | திரமிளர் |
| | | கி. மு. முதல் நூற்றாண்டு முதல் கி. பி. 400 வரை | மனுதரும சாத்திரம் XI. 43-44 மகாபாரதம் | திராவிடர் |
| | | | கால்டுவெல் பக் 8-10 | தமிழர் (தமிழைப் பேசுவோர்) |
| 2. | கிரீஸ் | கி. மு. 484– 425 | ஹெரடோடஸ் I. 173, VII. p. 92 | தெர்மிலாய் |
| 3. | ஸ்பெயின் | கி. மு. ஆறும் நூற்றாண்டு | ஏவியனஸ் பெரிபுளூஸ், VIII, 193 | திரேகனஸ் |
| 4. | பிரான்சு | கி. மு. 330–400 | அமியேனஸ் மர்சிலேனஸ் XV, 94 | திரவிடேய் |
| 5. | பிரிட்டிஷ் தீவுகள் | கி. மு. நான்காம் நூற்றாண்டு | அரேலியஸ் விக்டர் டி காசேனிபஸ், IV, 2 | திரிஸ்டயே |
| | | கி. மு. 100-44 | சீஸர், டிபெல்லோ காலிகோ | துருய்ட்டே |
| | | | அயர்லாந்திலுள்ள துருய்ட் (Druid) மக்களின் பெயர் | துருவாட் |
| | | | வேல்சிலுள்ள துருய்ட் (Druid) மக்களின் பெயர் | தெர்வைட் |

14. Heras, Father: 'The Original Name of Proto-Indians'—என்னும் கட்டுரையின் சுருக்கம்; The Eleventh All India Oriental Languages Conference Proceedings, 1941; pp. 123-137.

1.23 இவ்வட்டவணையிலிருந்து பண்டைக் காலத்தில் திராவிட இனத்தோடு தொடர்புடைய மக்கள், உலகின் பல பகுதிகளில் பரவி இருந்தமை புலனுகின்றது. 'திரைமிலர்' என்னும் சொல்லே 'திராவிடர்' எனத் திரிந்தது என்னும் கருத்தினை நாம் உடன்பட இயலவில்லை. எனினும், 'திராவிடரின்' தோற்றம் பற்றிய ஆராய்ச்சிக்கு இப் பெயர்த்திரிபுபற்றிய விளக்கம் மறைமுகச் சான்றுகள் சிலவற்றைத் தந்து உதவுவதை நாம் புறக்கணிகக இயலாது.

1.24 டாக்டர் கால்டுவெல், 'திராவிடம்' என்னும்சொல், சமஸ்கிருத மொழிச்சொல்லே என்னும் கருத்தை நிலைநாட்டுவதற்குப் பழைய வடமொழி நூல்களிலிருந்து சான்றுகள் பல காட்டி நிறுவ முயன்றுள்ளார். "திராவிடம் என்ற சொல், திரமிடம் என்று பல இடங்களில் வழங்கப்பட்டுள்ளது. திராவிடம் என்பது திரவிடம் எனக் குறுகி, திரவிடம், திரமிடம் என்ருயிற்று எனத் துணிதல் ஒருவாறு பொருந்தும். இவ்விருசொற்களும் தமிழில் வழங்கு கினறன. எனினும், திரமிடம் என்ற சொல்லே தமிழ் நிகண்டுகளில் முதலிடம் பெறுகின்றது. இனி வராகமிகிரரின் பிரகத் சம்மிதையில் திராவிடம் என்ற சொல் திரவிடம் என்பதற்கு மாருகப் பல இடங்களில் வழங்கப் பட்டுள்ளது ஏன டாக்டர் கெர்ன் என்ற அறிஞர் கூறுகிருர். இந்தத் திரமிடம் என்பதே திரமிளம் என்பதாக 'இந்தியாவில் புத்தமத வளர்ச்சி' என்று கி.பி. 1573இல் தாரநாதர் என்பவரால் திபெத்தில் எழுதப்பெற்ற ஒரு நூலிற் காணப்படுகிறது. மலையாள மொழியிலுள்ள புராணங்களில் இவ்வுருவமே காணப் படுகிறதென டாக்டர் குண்டெர்ட் என்பவர் குறித்துள்ளார். மகா வமிசத்திலுள்ள 'பாலி'யில் திரமிளம் என்பது தாமிலோ என வழங்கப் பட்டுள்ளது. சிரமணம் என்ற வடசொல் சமணம் என்று திரிந் துள்ளது ஈண்டு நோக்கத்தக்கது. இத் தாமிலோ என்பதே தமிழ் என்ருயிற்று என்று எளிதில் உய்த்துணரலாம்'[15] என்று அவர் துணிந்துள்ளார்.

1.25 ஆனுல், இக் கருத்திற்கு நேர்மாருன சான்றுகள் பழைய தமிழ் இலக்கியத்துள்ளும், பாலி, சமஸ்கிருத மொழி நூல்களிலும், பண்டைக் கல்வெட்டுகளிலும் காணப்பெறுகின்றன. பழைய தமிழ் இலக்கியத்துள் 'திராவிடம்' என்ற சொல்லாட்சியைக் காண்பதரிது. தேவாரகாலத்தில் கூட "ஆரியன் கண்டாய்"[16] என்றுதான் தமிழ்ச் சான்ருேர் குறிப்பிட்டுள்ளனர்.

---

15. Caldwell, R.: Op.cit P. 8.

16. அப்பர் தேவாரம், 6: 23: 5., இளமுருகனுர் பதிப்பு, சென்னை, 1953.

1.26 வடமொழி நூல்களில் 'திராவிடம்' என்ற சொல் பிற்பட்ட காலத்திய வழக்காகத் தோன்றுகிறது யசுர் வேதத்தில் 'த்ரமிளம்' என்ற சொல்லே கையாளப் பெற்றுள்ளது. வடமொழியில் ழகரம் கிடையாது. சில உயிர்மெய் முதல்களோடு ரகரத்தைச் சேர்த்து, புணரெழுத்துகளாகத் திரிப்பது வடநூலார் வழக்கம். இதற்குப் 'பவளம்' என்னும் தமிழ்ச்சொல்லை 'ப்ரவாளம்' என்று வட மொழியில் திரித்து வழங்குவதைச் சிறந்த சான்ருகக் காட்டலாம். இவ்வடிப்படையில் 'தமிழ்' என்னும் சொல் தமிழ > த்ரமிள > த்ரமிட > த்ரவிட > திரவிட > எனத் திரிந்து வடமொழியில் வழக்காறு பெற்றிருக்கவேண்டும் என்பது டாக்டர் கிரியர்சன் என்னும் மொழி நூல் அறிஞருடைய கருத்தாகும்.[17]

*சமஸ்கிருதத்தில் திராவிடம்*

1.27 இதை அரண்செய்யும் வகையில் வடமொழி நூல்களுள் 'திராவிடம்' என்னும் சொல், பிராகிருத மொழிகளின் வழியாகக் கடன் வாங்கப் பெற்ற சொல்லாக அமைந்திருக்கிறது. பிராகிருத மொழிக் கல்வெட்டுகளுள் பழமையானவற்றுள் 'திரமிளம்' என்ற சொல் வழக்குத்தான் காணப்படுகிறது. வேதகாலத்திற்கு முன்பிருந்து, வடஇந்தியாவில் வாழ்ந்துவந்த மக்களுக்கு விராடியர் (Vratyar) என்பதே பழைய பெயராகும். மிகப் பிற்பட்ட காலத் திலேயே அவர்களைத் 'திராவிடர்' என்னும் பெயரால் சுட்டும் வழக்குண்டாயிற்று. வேதகால ஆரியர், அவர்களை 'விராடியர்' என்னும் பெயராலேயே அழைத்தனர். கிறித்துவ நூற்ருண்டின் தொடக்கத்தில் வழக்கிற்கு வந்த 'திராவிடம்' என்ற சொல் உண்மையில் 'தமிழ்' என்னும் சொல்லுக்கு நேராக வடமொழியில் வழங்கும் பிராகிருத மொழி (பாகத)யின் சிதைவாகும் என்று, 'இந்தியாவின் சமயங்கள்' என்னும் நூலின் ஆசிரியர் கருதுவது இங்குக் கருதத்தக்கது.[18]

1.28 பிராகிருத மொழிக் கல்வெட்டுகளிலும் வடமொழி இலக்கியங்களிலும் 'த்ரமிளம்' என்னும் வடிவமே பண்டைய வழக் காகத் தோன்றுகிறது. கலிங்க நாட்டின் சிறப்புமிக்க மன்னனை காரவேலன், கி மு. 169இல் பொறித்த பிராகிருதமொழிக் கல்வெட்டு ஒன்றில், 'தமது பதிமூேராவது ஆட்சி ஆண்டில், நூற்றுப்பதின்

17. Grierson, G. A.: Linguistic Survey of India Vol. IV: Munda and Dravidian Languages, Govt. Press; Calcutta, 1906., P. 298.

18. Karmarkar, A.P.: The Religions of India, Vol. I., The Vr.tiya or Dravidian System, Mira Publishing House, Lonavla, 1950; P. vii

மூன்று ஆண்டுகளாகத் தமிழக மன்னர்கள் அயலார் படையெடுப்பை எதிர்ப்பதற்கு அமைத்துப் போற்றிய கூட்டணியை, 'த்ரமிள தேச சங்காதம்' என்று குறிப்பிட்டுள்ளான்.[19]

1.29 கி. பி. ஏழாம், எட்டாம் நூற்றுண்டைச் சேர்ந்த வடமொழி நூல்களிலும், கல்வெட்டுகளிலும், செப்பேடுகளிலும் திரமிளர், தமிளர் என்னும் சொல்லாட்சியே பெருவழக்குடையதாக இருந்ததை நாம் காணுகின்ருேம். தண்டி(ன்) என்னும் வடமொழி வாணர் இயற்றிய 'அவந்தி சுந்தரி கதை' என்னும் இலக்கியத்தில், தொண்டை நாடு 'திரமிள' தேசமாகக் குறிப்பிடப்பெற்றிருக்கிறது.[20] இக்குவாகு அரச மரபினருடைய கல்வெட்டுகளில் தமிழரைப் பற்றிய குறிப்பு வருகின்ற இடங்களில் எல்லாம் 'தமிளர்' என்ற சொல் வழங்கப்பட்டிருக்கிறது.[21] தமிழ் நாட்டில் சிறப்புற்று விளங்கிய பல்லவ அரசர்களுள் ஒருவனுன நந்திவர்மப் பல்லவ மல்லன் (கி. பி. 710-775) வழங்கிய உதயேந்திரம் செப்பேட்டில் உள்ள வடமொழி வாசகத்தில் 'திரமிளர்' என்னும் சொல் தமிழரைக் குறிப்பதற்குப் பயன்படுத்தப் பெற்றுள்ளதை நாம் இங்குக் கருத வேண்டும்.[22]

1.30 இவற்றிலிருந்து த்ரமிளம், திரமிளர் என்பதே பழைய வழக்கு என்பதும், திராவிடர் என்பது பிற்பட்ட வழக்கு என்பதும் தெரியவருகிறது. வடமொழியில் 'திராவிடம்' என்னும் சொல் கி. பி. ஆரும் நூற்ருண்டை ஒட்டியே பெருவழக்கிற்கு வந்துள்ளதை ஆராய்ச்சியாளர் சுட்டிக்காட்டத் தவறவில்லை. கி. பி. ஏழாம் நூற்ருண்டைச் சேர்ந்தவராகக் கருதப்பெறும் குமாரிலபட்டர் என்பவர் 'ஆந்திர-திராவிட பாஷா' என்ற சொற்ருெடரைப் பயன்படுத்தியுள்ளார்.[23]

1.31 இவருடைய காலத்திற்கு முன்பு 'திராவிட' என்னும் சொல் அருகிய வழக்காகவே இருந்திருக்கிறது. குப்தப் பேரரசர் காலத்தில் செப்பம் செய்யப்பெற்று இன்றைய வடிவில் பெரிதும் முறைப்படுத்தப் பெற்ற பாரதம், மனுதரும சாத்திரம் போன்ற

---

19. Jayaswal, K. P.: Imperial History of India, Munshiram Manohar Lal, Delhi, 1969., P. 16.

20. Madras University Journal, Vol. V. pt. 2; pp. 4-6.

21. Epigraphia Indica, Vol. XX, pp. 22-23.

22. South Indian Inscriptions, Vol. II; P. 508.

23. Caldwell, R. Op cit. p. 4.

வடமொழி நூல்களில் இச்சொல் இடம் பெற்றிருக்கிறது. வியாச பாரதத்தின் சபாபருவத்தில் (இயல். 30) சகாதேவனுல் வெல்லப் பெற்ற மன்னர்கள் பாண்டியர், திராவிடர், உதரர் (Udras), கேரளர், ஆந்திரர் என்று குறிப்பிடப் பெற்றுள்ளது.[24] இதை நாம் கூர்ந்து நோக்குவோமாளுல், இப் பகுதி ஓர் இடைச்செருகல் என்பது எளிதில் புலனுகும். சாணக்கியருடைய அருத்த சாத்திரத்தில் பாண்டியருடைய பெயர் குறிப்பிடப் பெற்றிருக்கிறதே ஒழிய, 'திராவிடர்' என்னும் பெயர் வழங்கப்பெறவில்லை என்பதும் இங்கு நினைவுகூர்தற்குரியதாகும்.

1.32 மனுதரும சாத்திரத்தின் பத்தாவது இயலில் கீழ்வரும் சத்திரியக்குடிகள் படிப்படியாக ஆரியருடைய ஒழுகலாற்று நெறியி லிருந்து வழுவி, பிராமணரோடு கொண்டிருந்த தொடர்பினை இழந்து, சாதியிலிருந்து வெளியேற்றப்பட்டார்கள். அவர்கள் பௌண்ரட்டகர், ஒட்ரர், திராவிடர், காம்போஜர், யவனர், சாகர், பாரதர், பஹ்லவர், சீனர், கிராதர், தரதர், கசர் என்பவராவர்.''[25]

1.33 வராகமிகிரருடைய பிரகத் சம்மிதை இந்திய நாட்டை ஒன்பது பெரும்பகுதிகளாகப் பிரித்து, அவற்றில் உள்ள மக்களினங் களைப்பற்றியும், அரசுகளைப்பற்றியும் சில முக்கியக் குறிப்புகளைத் தருகிறது. அவற்றுள் 'தென்-மேற்குப் பகுதியில்' உள்ள நாடு களுள் ஒன்ருகத் 'திரமிடம்' குறிப்பிடப்பெற்றுள்ளது.[26] வராகமிகிர ருடைய காலம் கி.பி. ஆரும் நூற்ருண்டின் இடைப்பகுதி என்பர்.[27]

1.34 இவை யாவும் 'திராவிடம்' என்னும் வழக்குக் காலத் தால் மிகப்பிற்பட்டது என்பதை ஒருமுகமாக உணர்த்துகின்றன. எனவே, திராவிடம் என்னும் வடமொழிச் சொல் திரிந்தே 'தமிழ்' என்னும் சொல் தோன்றியது என்னும் கால்டுவெல்லின் கருத்து இன்றைக்குக் கிடைத்திருக்கின்ற சான்றுகளினுல் பொருத்தமற்ற தாகப்போய்விடுகிறது. மேலும், பிற திராவிட மொழிகளிலும் 'தமிழ்' என்னும் சொல்லே திரிந்து வழங்குவது இங்கு ஒப்பு

---

24. Mookerji, R. K.: The Fundamental Unity of India, ; Bharatiya Vidhya Bhavan, Bombay, 1954.. pp. 75-76.

25. Manava Dharma Sastra, Sacred Books of the East; Vol. 25; Ed, Maxmuller, Oxford 1885. 10: 42.43;

26. Mookerji, R. K.: The Fundamental Unity of India, p. 78.

27. Macdonell, A. A.: A History of Sanskrit Literature, Munshiram Manoharlal Delhi, 1958., p. 318.

நோக்கத்தக்கது. மலையாளத்தில் ‘ தமிழ் ’ என்றும், தோடர் மொழியில் ‘ தொபிள் ’ என்றும் கன்னடத்தில் ‘ தமிள ’ ‘ தம்பள ’ என்றும், துளுவமொழியில் ‘ தமுளு,’ ‘ தமிளு ’ ‘ தம்புளு ’ என்றும் வழங்கி வருகிறது (Vide: A Dravidian Etymological Dictionary, p, 199).

1.35 மற்றும், அவர் “‘ திராவிட மொழிகள் ’ என்று குறிக்கப்பட்டது தமிழையோ, தெலுங்கையோ அன்றி அவைபோன்ற தனிமொழியையோ அன்று என்பதும், தமிழையும், தெலுங்கையும் மற்றுந் தென்னிந்திய மொழிகளனைத்தையும் உட்கொண்ட ஒரு மொழியினத்தையே என்பதும், அவை யாவற்றையும் ஓரின மொழி யாகவே வடவர் கருதினர் என்பதும் எளிதில் விளங்கும் ”[28] என்று கூறுவதும் உண்மையாகாது.

1.36 மேற்கண்ட வடமொழி இலக்கியச் சான்றுகளில் எல்லாம், தமிழையும், தமிழரையும், தமிழகத்தையும் தெளிவாகக் குறிக்கும் இடங்களிலேயே ‘ திராவிடம் ’ என்னும் சொல் வழங்கப் பெற்றுள்ளதை நாம் கருத்திலிருத்தவேண்டும். கி. பி. எட்டாம் நூற்றுண்டினரான ஆதிசங்கரர், தம்முடைய ‘ சௌந்தர்யலகரி ’ என்னும் நூலில் திருஞானசம்பந்தரை, ‘ திராவிடசிசு ’ (செய். 75) என்று குறிப்பிட்டுள்ளமையும் இக் கருத்தை அரண்செய்கிறது.

1.37 வடமொழி நூலார் தமிழை ஒரு பிராகிருதமாகக் கருதி அதைத் ‘ திராவிடி ’ என்னும் பெயராலேயே அழைத்துள்ளனர்.[29] ‘லலிதவிஸ்தாரம்’ என்னும் பௌத்த சமயநூல், அறுபத்துநான்கு வகையான எழுத்து முறைகளைக் குறிப்பிடுகின்றபொழுது ‘ திரா மிளி ’ என்றும், ‘ தாமிழி ’ என்றும் தமிழ் எழுத்து முறையைச் சுட்டுகிறது.[30] கிறித்துவ நூற்றுண்டிற்கு முன்னர்த் தமிழ்மொழி யிலன்றிப் பிற தென்னிந்திய மொழிகளில் இலக்கியம் இல்லாததால், வடமொழியாளர் தமிழையே திராவிடம் என்னும் சொல்லால் குறித் திருக்கவேண்டும்.

## தமிழ்நாட்டு வழக்கு

1.38 மேலும், கி. பி. 470ஆம் ஆண்டில், வச்சிரநந்தி என்னும் சமணர், மதுரை மாநகரில் நிறுவிய தமிழ்ச் சங்கத்தைத் ‘ திரமிள

28. Caldwell, R.: Op.cit. p. 6.

29. Ibid, p. 5.

30. கல்வெட்டுக் கருத்தரங்கு, தமிழகத் தொல்பொருளியல் துறைவெளியீடு, சென்னை, 1968., பக். 52.

சங்கம்' என்று பிராகிருத மொழி நூல்களும் வடமொழி நூல்களும் குறிப்பிடுகின்றன.[31] திருவாய்மொழியைத் 'திராவிட வேதம்' என்று கூறும் மரபும், நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தைத் 'திராவிட வேதம்' என்று சுட்டும் மரபும் இருந்துவருகிறது. தமிழ் இலக்கணத்தைத் 'திராவிட சாஸ்திரம்' என்று திவ்வியப்பிரபந்த உரையாசிரியர் பிள்ளை லோகாச்சாரியர் குறிப்பிடுவதும்[32] இங்கு நினைவு கூர்தற்குரியது.

1 39 பதினெட்டாம் நூற்றுண்டில் வாழ்ந்த தாயுமானவர் தமிழைத் 'திராவிடம்' என்றே குறிப்பிட்டுள்ளார்.

"..................வடமொழியிலே
வல்லான் ஒருத்தன்வர வும்த்ரா விடத்திலே
வந்ததா விவகரிப்பேன்."

(தாயுமானவர் பாடல், 66)

1.40 இத்தகைய உள்நாட்டு அறிஞர்களுடைய கருத்துகளே அல்லாமல், வெளிநாட்டு வரலாற்றுசிரியர்கள், பயணிகள், ஆராய்ச்சியாளர், கவிஞர் முதலியோர் பண்டைக்காலம் முதற் கொண்டு பதிவுசெய்துள்ள குறிப்புகளும் தமிழகத்தையே 'திராவிடம்' என்ற சொல்லால் குறிப்பிட்டனர் என்பதற்கு மறை முகமாகச் சான்று பகருகின்றன.

## வெளிநாட்டாரின் குறிப்பு

1.41 தமிழகம் என்னும் பெயரினை 'டெமரிகெ' (Damirike) என்று கிரேக்கர்களும், 'டெமரிசி' (Damirce) என்று ரோமானியரும், ரேவண்ணு உலக நிலநூல் ஆசிரியர் 'டெமிரிக்கா' (Damirica) என்றும் திரித்து வழங்கியுள்ளனர்.[33] கி. பி. முதல் நூற்றுண்டில் எழுதப்பெற்ற "செங்கடற் பயணக்கையேடு" (Periplus of the Erythrean Sea) என்னும் நூலின் ஆசிரியர் தமிழரைத் தமிராய் (Tamirai) என்று குறிப்பிட்டுள்ளார்.[34] தாலமி என்னும் கிரேக்க ஆசிரியர் (கி. பி. 139-161) தமிழகத்தை,

---

31. Srinivasa Ayyangar, P. T.: History of the Tamils, C. Coomaraswamy Naidu, Madras, 19 9., p. 247. F. N:

32. பெரிய திருமொழிச் சிறப்புப்பாயிரம் உரை, பகவத் விஷயம், பாகம். 21 கிரந்தமாலை வெளியீடு, காஞ்சி, 1954.

33 Smith. V. A.: The Early History of India, 3rd Ed. O. U. P., London 1912. P. 439.

34. Schoff, (Ed.): Periplus, New york, 1912, P, 57

'தமிரிகே'[35] என்றே குறிப்பிட்டுள்ளார். இவை அனைத்தும் மேனாட்டு ஆசிரியர்கள் பண்டைக் காலத்தில் தமிழகத்தைத் 'தமிழகம்' என்னும் பெயராலேயே அறிந்திருந்ததைத் தெரிவிக்கின்றன.

1.42 கி. பி. ஏழாம் நூற்றாண்டில் இந்தியாவிற்கு வந்த சீன யாத்திரிகர் யுவான் சுவாங்கு, தமிழகத்தைத் தம்முடைய குறிப்பில் தெகி-மொ-லொ (Tehi-mo-lo) என்று குறிப்பிட்டுள்ளார்.[36] இதைத் 'திமில' (Dimala) அல்லது 'திமர' (Dimara) என்ற சொல்லின் திரிபாகக் கொள்ளலாம் என்பது டாக்டர் கால்டுவெல்லின் கருத்தாகும்.[37] இடைக்காலத்திய ஐரோப்பியர் 'தமுளிக்க மொழி' (Lingua Tamulica) என்றே தமிழைக் குறிப்பிட்டுள்ளனர். மற்றும் சிலர் 'மாபார்' அல்லது மலபார் என்னும் பெயரால் அதைச் சுட்டியும் வந்தனர்.[38]

1.43 இதை ஆராய்ந்த ஜுலே பிளாக்கு, 'தமுளியன்' என்பதுதான் முதன்முதல் அக் குடும்ப மொழிகளுக்குக் கொடுக்கப்பட்ட பெயராகும். அப் பெயரின் பண்டை வடிவம் சமஸ்கிருத மொழியாளருக்குத் 'திராமிட்' 'திராவிட' என்று நன்கு அறிமுகமாகி இருந்தமையால், அதைக் கால்டுவெல் குழூஉப் பெயராக வழங்க வசதியாக இருக்கும் என்று கருதி எடுத்துக்கொண்டார்[39] என்று குறிப்பிட்டுள்ளமை இங்கு நினைவுகூர்தற்குரியதாகும்.

1.44 எனவே, "'திராவிட' என்னும் சொல் 'தமிழ்' என்னும் சொல்லின் திரிபாகவே இருக்கவேண்டும். அதனால் 'திராவிடப்பண்பு' (Dravidian) என்னும் சொல் தமிழ்மொழியின் தோற்றம், வளர்ச்சி ஆகியவற்றை நேரிய முறையில் சுட்டுவதாகக் கொள்ளப்படுதல் வேண்டும். ஆனல், இக்காலத்து அறிஞர்களால் அச் சொல்லின் பொருள் விரிவுபடுத்தப்பெற்று, தென்னிந்திய

---

35. Warmington, : Commerce between the Roman Empire and India, Cambridge, 1928. PP. 114-115.

36. Surendranath Sen: India Through Chinese Eyes, Univ. of Madras, 1956. p. 46

37. Caldwell, R. : Op.cit. P. 10.

38. Bloch, Jules: The Grammatical sturcture of the Diavidian Languages, Deccan College, Poona, 1954. P.8.

39. Ibid, P. XXVI.

மக்கள் அனைவரையும் சுட்டும் இனப்பொதுப் பெயராகக் கொள்ளப் பட்டிருக்கிறது ''[40] என்னும் பேராசிரியர் வீ. ஆர். இராமச்சந்திர தீட்சிதரின் முடிவு பொருத்தமானதாகவும், போற்றத்தக்கதாகவும் இருக்கிறது.

## திராவிடர் இனப் பாகுபாடு

1 45 மக்களுடைய உடற்கூறுபற்றி ஆராய்ந்து உரைக்கும் உடற்கூற்று மானிட இயல் (Physical Anthropology) நூலார், மொழிகளைப்பற்றியும் பண்பாடுகளைப்பற்றியும் சமூகவியல் நூலார் கூறுகின்ற கருத்துகளைப் பற்றிக் கவலையுறுவது இல்லை. அவர்கள் இந்தியாவில் வாழும் மக்களிடையே காணப்பெறும் உடற்கூற்று இயல்புகளை வகைப்படுத்தி ஆராய்ந்துள்ளனர்.

1 46 இந் நூற்றாண்டின் தொடக்கத்தில் நடைபெற்ற இந்தியா வின் மக்கள் கணக்கெடுப்பினால் பல உண்மைகள் வெளிப்பட்டன. சர் ஹெர்பர்ட் ரிசிலி (Risley) இந்தியாவில் மூன்று முதன்மையான இனத்தைச் சேர்ந்த மக்கள் வாழ்ந்துவருவதாக அறிவித்துள்ளார். அவரே இந்திய மக்களை எழுவகைப்பட்ட குழுக்களாகப் பாகு படுத்தியும் உள்ளார். அக் குழுக்களை அவர், மங்கோலியக் குழு, இந்திய-ஆரியக்குழு, திராவிடக்குழு, மங்கோலிய திராவிடக்குழு, ஆரிய திராவிடக்குழு, சித்திய-திராவிடக்குழு, துருக்கிய-இரானியக் குழு என்னும் பெயரிட்டு அழைத்துள்ளார்.[41] இப் பாகுபாடு, சிறந்த அறிவியல் ஆராய்ச்சி முறையின் அடிப்படையில் செய்யப்படவில்லை என்று அறிஞர் கருதுகின்றனர்.

1.47 1933 ஆம் ஆண்டில் ஜே. எச். ஹட்டன் என்பவர் மிக விரிவான திட்டத்தின் அடிப்படையில் மானிட இயலிலும், இன மரபியலிலும் உண்டாகியிருக்கின்ற வளர்ச்சிகளையும் புதுமைப் போக்குகளையும் கருத்தில் கொண்டு, இந்திய மக்கள் கணிப்பைத் தொடங்கினார். அவர் இனத்திற்கும் மொழிக்கும் பண்பாட்டிற்கும்

---

40. Ramachandra Dikshitar, V. R.: Pre.Historic South India, Univ. of Madras. 1951., p. .03.

அண்மையில் பேராசிரியர், K. A. நீலகண்டசாஸ்திரியாரும் இக்கருத்தினைக் கொண்டுள்ளார். அவர் "ஆதிகாலத்தில் 'திராவிட' என்னும் சொல் 'தமிழ்' என்னும் சொல்லின் ஒரு பொருள் குறிக்கும் பிற சொல்லாக (Synonym) வழங்கப் பெற்றது" என்பதைத் தக்க சான்றுகள் காட்டி நிறுவியுள்ளார்.

காண்க: Cultural Contact Between Aryans and Dravidians by K. A. N. Sastri, Manaktlas, Bombay, 1967, pp. 10-12.

41. Risley, H. H.: Op. cit, pp. 28.41.

இடையே உள்ள தொடர்புகளையும், கிளையுறவுகளையும் நுட்பமாக ஆராய்ந்து, 'இந்தியாவில் வாழும் மக்கள் எல்லாருமே வெளிநாடுகளிலிருந்து வந்தவர்' என்னும் கருத்தினைத் தெரிவித்தார். அவர் இந்திய மக்களை எண்வகையாகப் பாகுபடுத்தியுள்ளார் :

(1) நீக்கிரிட்டோக்கள் (Negritos)

(2) ஆஸ்திரேலியப் பழங்குடி மக்களின் மூதாதையர் (Proto-Australoids)

(3) தொடக்க கால நடுநிலக் கடல் இனத்தவர் (Early Mediterraneans)

(4) நாகரிக முதிர்ச்சியுற்ற நடுநிலக் கடல் இனத்தவர், (திராவிடர்) (Civilised or Advanced Mediterraneans)

(5) ஆர்மினாய்டுகள் (Armenoids)

(6) அல்பைனர் (Alpiner)

(7) நார்டிக்குகள் எனப்படும் வேதகால ஆரியர் (Nordics)

(8) மங்கோலியப் பழங்குடியினர் (Mongoloids)

என்பவராவர்.[42]

1.48 இந்திய மானிட இயல் மதிப்பீட்டுத் துறையின் இயக்குநராகச் சிறப்புற்று விளங்கிய டாக்டர் பி. எஸ். குகா, மீண்டும் இந்திய மக்களுடைய இனப் பண்பாட்டைப் பற்றி ஆராய்ந்து, சில சிறந்த முடிவுகளை உலகிற்கு அளித்துள்ளார். இந்திய மககளை ஆறு முதன்மை இனங்களாகவும், அவற்றோடு தொடர்புடைய ஒன்பது துணை வகைகளாகவும் அவர் பாகுபாடு செய்துள்ளார் :

(1) நீக்கிரிட்டோக்கள்

(2) ஆஸ்திரேலியப் பழங்குடி மக்களின் மூதாதையர்

(3) மங்கோலியப் பழங்குடியினர். அவர்களுள்,

(அ) பண்டை மங்கோலியர்,

(ஆ) திபெத்திய மங்கோலியர்,

என்று இரு வகையுண்டு.

---

42. Hutton, J.H : Census of India, 1931; Vol. I Pt. I. Ethnographic survey of India, Govt. Press, Calcutta, 1935, PP. 424 ff.

(4) நடுநிலக் கடல் இனத்தவர்: அவர்களுள்,

(அ) பண்டை நடுநிலக் கடல் இனத்தவர்

(ஆ) நடுநிலக் கடல் இனத்தவர்,

(இ) கீழை நாடுகளில் உள்ள நடுநிலக்கடல் இனத்தவர் (நாகரிக முதிர்ச்சியுற்றவர்)

(5) மேலைநாட்டுக் குறுகிய தலையுடைய இனத்தவர்களுள், மூன்று பிரிவுகளுண்டு:

(அ) அல்பைனர்

(ஆ) தினாரிக்குகள்

(இ) ஆர்மினாய்டுகள்

(6) நார்டிக்குகள் (ஆரியர்)

என்னும் விரிவான பாகுபாட்டை டாக்டர் குகா செய்துள்ளார்.[43] அவற்றுள் நடுநிலக் கடற்பகுதிக்குரிய பண்டை மக்களுள் திராவிட இனத்தை அவர் சேர்த்துள்ளார்.[44]

## திராவிடர் இனத்தின் தோற்றம்

1.49 இந்தியாவின் தொல்பழங் குடிகளுள் திராவிடர் முதன்மை இடத்தைப் பெறுகின்றனர். அவர்கள் புதிய கற்கருவி நாகரிகக் காலம் முதற்கொண்டு இந்தியாவில் வாழ்ந்துவருவதாகத் தொல்பொருள் ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர்.[45] இந்திய மக்களின் பண்டைத் தொகுதியில் முதன்மையாய் இருந்த திராவிட இனத்தவர் பிற்காலத்தில் வந்து குடியேறிய ஆரியர், சித்தியர், மங்கோலியர் முதலிய பிற இனத்தவருடன் கலப்புற நேர்ந்ததை[46] வரலாறு எடுத்துரைக்கிறது.

1.50 திராவிட இனத்தவர் "பெரும்பாலும் குள்ளமான வடிவினர்; கரிய நிறத்தினர்; தழைத்த கூந்தலும் அதில் ஒரோ

---

43. Guha, B.S.: Racial Affinities of the Peoples of India; in the Census of India, 1931. Report, Vol. I; pt. 3; Calcutta, 1937.PP. ix.lxxi,

44. Guha, B.S.: Racial Elements in the Population, Oxford Pamphlets, No. 22; Bombay, 1944, P. 17.

45. Foote, R. B.: Indian Pre-Historic and Proto-Historic Antiquities, Madras, 1916, PP. 14-15.

46. Rapson, E. J.: Cambridge History of India, Vol. I: Ancient India, Cambridge, 1912; PP. 41-43.

வொருகால் சுருண்ட மயிரும் வாய்க்கப்பெற்றவர்; கரிய விழியினர்; நீண்ட தலை ஓட்டை உடையவர்; ஒரோவொருகால் அடியிற் குழிந்த அகன்ற மூக்கினர்"[47] என்று இந்திய மக்கள் கணிப்பு ஆய்வாளர் கருதுகின்றனர்.

1.51 இத்தகைய உடற்கூற்றியல்புகளைக் கொண்ட திராவிடரை மானிட இயல் நூலார், 'கலவை இனத்துள்' (Composite Race) இந்திய-திராவிடர் இனத்தினுள் அடக்கிக் கூறுவர்.[48] திராவிடர் நாகரிக முதிர்ச்சியுற்ற நடுநிலக் கடல் இனத்தின் ஒரு பிரிவினர் என்றும் அவர்கள் கருதுகின்றனர்.

1.52 திராவிடர் இனத்தின் தோற்றத்தைப்பற்றிப் பல வகைப்பட்ட கருத்துகளை அறிஞர் பெருமக்கள் தெரிவித்துள்ளனர். தமிழருடைய வரலாற்றை முதன்முதல் முறையாக ஆங்கிலத்தில் எழுதிய தமிழறிஞர் திரு. வி. கனகசபை பிள்ளை அவர்கள், தமிழர் (திராவிடர்) திபெத்திலிருந்து தென்னிந்தியாவிற்கு வந்தேறிய மங்கோலிய இனத்தைச் சேர்ந்தவர் என்று குறிப்பிட்டுள்ளார்.[49] தென்னாட்டின் பழங்குடி மக்களான வில்லவர், மீனவர் முதலியவர்களை நடு ஆசியாவிலிருந்து வந்த நாகர்கள் என்னும் கூட்டத்தார் வென்று, அவர்களைக் காடுகளுக்கும் மலைகளுக்கும் விரட்டினர்; அதன்பிறகு திபெத்திலிருந்து வந்த மங்கோலிய இனத்தைச் சேர்ந்த தமிழர், நாகர்களை வென்று அடக்கினர் என்பது அவருடைய நம்பிக்கையாகும். தமிழர் நான்கு பிரிவாகத் தென்னாட்டில் நுழைந்தனராம். 'மாறர்' என்ற கூட்டத்தினர் முதன்முதல் தமிழகத்திற்கு வந்து பாண்டிய நாட்டில் தங்கினர் என்றும், அதன்பிறகு வந்த 'திரையர்' என்பார் சோழநாட்டில் வாழ வசதிசெய்துகொண்டனர் என்றும், மூன்றாவதாக வந்த 'வானவர்' என்ற குழுவினர் சேர நாட்டைத் தமதாக்கிக்கொண்டனர் என்றும் இம்மூவருக்கும் பின்னர் வந்த 'கோசர்' என்னும் கூட்டத்தார் கொங்கு நாட்டைத் தங்களாட்சிக்குட்படுத்திக் கொண்டனர் என்றும் திரு. வி. கனகசபை பிள்ளை விளக்கியுள்ளார்.[50]

---

47. Risley, H. H.: The People of India, P. 48.

Guha, B. S.: Racial Affinities of the Peoples of India, PP. 612.613.

48. Hooton, Ernest Albert: Up From the Ape, Motilal Banarsidass, Delhi, 1965., PP. 612-616.

49. Kanakasabhai, V.: The Tamils 1800 years Ago, Kazhagam, Madras, 1954, P. 74;

50. Ibid, PP. 74-75.

1.53 தமிழர் மங்கோலிய இனத்தைச் சேர்ந்தவர் என்னும் இக் கருத்து மக்களின மரபு நூலிற்கு முரண்படுகிறது. திராவிட ருடைய உடற்கூறு மங்கோலியருடைய உடற்கூற்றிலிருந்து முற்றிலும் மாறுபட்டுள்ளமை இங்குச் சிந்தித்தற்குரியது. இவை யல்லாமல், சமூகப் பழக்க வழக்கங்கள், பண்பாட்டு மரபுகள் போன்ற யாவும் இவ்விரு மக்களினத்தவரிடையே தொடர்பற்றுக் காணப்பெறுகிறது.

1.54 திராவிடர் இனத்தின் தோற்றத்தைப்பற்றி வழங்கும் கருத்துக்கள் அனைத்தையும் நாம் இரண்டுவகையாகப் பாகுபடுத்தி உரைக்கலாம். முதற்கருத்து திராவிடர்கள் இந்தியாவின் பழங்குடி மக்களேயாவர் என்பதாகும். இரண்டாவது கருத்து திராவிடர்கள் வெளிநாட்டிலிருந்து வந்தவர்கள் என்பதாகும். இவற்றுள் இரண் டாவதாகக் கூறப்பெறும் கருத்தினை நாம் முதலில் ஆராயலாம்.

(அ) வெளிநாட்டிலிருந்து வந்தவர்

1.55 திராவிடர்கள் வெளிநாட்டிலிருந்து வந்தவர் என்னும் கருத்தினைத் தெரிவிக்கும் அறிஞர்கள் பலராவர். பல்வேறு நாடு களிலிருந்து திராவிடர்கள் இந்தியாவிற்கு வந்ததாக அவர்கள் கூறுகின்றனர். அவர்களுடைய கருத்துகளை நாம் நான்கு வகை யாகப் பாகுபடுத்தி ஆராயலாம்.

(1) எகிப்திலிருந்து வந்தவர்

1.56 எலியட் ஸ்மித் (G. Elliot Smith) என்பார் திராவிடர் எகிப்திலிருந்து வந்தனர் என்று கருதுகிறார். கி. மு. மூன்றாவது ஆயிரம் முதற்கொண்டு பொதுவாகவும் கி. மு. 1800-ஐ அடுத்துப் பேரளவிலும் எகிப்தைவிட்டுப் புறப்பட்ட மக்கள், கடல்வழியாக இந்தியாவிற்கு வந்திருக்கவேண்டும். புதிய பண்பாட்டுக்குரிய மக்கள் திராவிடருக்கு முற்பட்ட பழங்குடிகளுடன் குருதிக்கலப்புற்று அதன் பயனாகத் திராவிடர்களாயினர்[51] என்பது அவருடைய கொள்கை.

1.57 இக் கருத்தை ஏற்றுக்கொண்ட டாக்டர் ஜே. டி. கார்னீ லியஸ், திராவிடருக்கும் பண்டைய அரேபிய, தூனீசிய மக்களுக்கும் பழக்கவழக்கங்களிலும், தொழில் முறைகளிலும், மொழி வழக்கு

---

51. Elliot Smith, G.: Migrations of Early Cultures, London, 1916. pp. 79-80.

களிலும், இடப்பெயர்களிலும் நெருங்கிய தொடர்பு இருந்துவரு வதைச் சுட்டிக்காட்டியுள்ளார். இத்தகைய தொடர்பினுல், திரா விடர் ஒரு காலத்தில் தூனீசியா, எகிப்து பகுதிகளில் வாழ்ந்திருக்க வேண்டும் என்றும், பின்னரே அவர்கள் இந்தியாவை நோக்கிப் புடை பெயர்ந்திருக்கவேண்டும் என்றும் அவர் குறிப்பிடுகிறுர்.[52]

### (2) நடு ஆசியாவிலிருந்து வந்தவர்

1.58. திராவிடர்கள் நடு ஆசியாவில் வாழ்ந்துவந்த சித்திய இனத்தைச் சேர்ந்தவர் என்றும், அங்கிருந்தே அவர்கள் பலூசிஸ் தானம் வழியாக இந்தியாவிற்குள் நுழைந்தனர் என்றும், அவர்கள் பலூசிஸ்தானத்தில் தங்கியிருந்ததற்குரிய தடையமாக இன்று 'பிராகுவி' மொழிபேசும் மக்கள் வாழ்ந்துவருகின்றனர் என்றும் டாக்டர் கால்டுவெல் எடுத்துரைத்துள்ளார்.[53] திராவிடமொழி களுக்கும் பிராகுவி மொழிக்கும் இடையே உள்ள ஒற்றுமைப் பண்புகளைச் சுட்டிக்காட்டி, திராவிடர்கள் இந்தியாவின் வடமேற்கு எல்லைப்புறத்தின் வழியாக இந்தியாவிற்கு வந்திருக்கவேண்டும் என்று அவர் அறிவிக்கிறுர்.

### (3) மேற்காசியாவிலிருந்து வந்தவர்

1.59 திராவிடர்கள் மேற்காசியாவிலிருந்து வந்தவர்கள் என்னும் கருத்தை டாக்டர் எஸ். கே. சாட்டர்ஜி, பேராசிரியர் கே. ஏ. நீலகண்ட சாஸ்திரி போன்ருேர், தங்கள் ஆராய்ச்சிகளின் மூலம் வெளிப்படுத்தியுள்ளனர். மொழியியல் பேரறிஞரான டாக்டர் எஸ். கே. சாட்டர்ஜி, 'தமிழ்' என்னும் சொல் பெரும்பாலும் 'திரமிலம்' அல்லது 'திரமிழம்' என்னும் சொல்லின் திரிபாக இருக்கலாம் என்று கருதுகிறுர். சிறிய ஆசியாவில் தொல்பழங் காலத்தில் வாழ்ந்த லைசியர் (Lycians), தங்களுடைய கல் வெட்டுகளில் 'திரம்மிலி' (Trmmli) என்று தங்களைக் குறிப் பிட்டுள்ளனர். அவர்கள் கிரீத்தி (Crete) லிருந்து வந்தவர்கள் என்று எரடோடஸ் குறிப்பிடுகிறுர். கிரீத்தில் எலனிக்கு இன மக்களுக்கு முன்பு வாழ்ந்த ஆசியச்சார்புடைய மக்களைக் கிரேக்கர் 'தர்மிலாய்' (Termilai) என்று அழைத்தனர். நடுநிலக் கடற் பகுதியின் கீழ்த்திசையிலிருந்து முடிவாக இந்தியாவிற்குள் நுழைந்த

52. Cornelins, J. T.: The Graffiti on the Megalithic Pottory of South India and Dravidian Origin, Tamil Culture, XII, No. 4; pp. 287-300.

53. Caldwell, R.: Op. cit. p. 40

திராவிடமொழி பேசிய மக்கள் கூட்டத்தினருள், சிறப்புமிக்க ஒரு கிளையினர் தங்களுடைய தேசிய இனத்தின் அல்லது பழங்குடி மரபின் பட்டப்பெயரினைத் தங்களுடன் கொண்டுவந்திருக்கலாம் என்று கருதுவது தவருகாது. அப் பட்டப் பெயரான 'தர்மிலாய்,' தர்மிலாய் >திரிம்மிலி> திரமிழா என்று திரிந்து, இன்றைய தென்னுட்டின் சிறப்புமிக்க மொழியான 'தமிழின்' பெயராக கி.மு. முதலாயிரத்தின் இடைப்பகுதியில் மாற்றமுற்றிருக்கலாம் என்பது சாட்டர்ஜியின் கருத்தாகும்.[54]

1.60 தென்னிந்தியாவில் வாழும் மக்களுடைய உடற்கூற்று அமைப்பு நடுநிலக்கடல் இனத்து மக்களுடைய உடற்கூற்று அமைப்பிலிருந்து மாறுபட்டு இருக்கிறது என்றும், சிறிய தலையும் எடுப்பான குழிந்த மூக்கும், பிடரியிலிருந்து உயர்ந்த முகட்டை யுடைய தலையும் உடையவர்களாகத் தமிழ் முதலிய திராவிட மொழி களைப் பேசுகின்ற மக்கள் உள்ளனர் என்றும் பேராசிரியர் கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார் கருதுகிருர். மேற்கண்ட உடற் கூற்று அமைப்பினை உடையவர் அர்மினுய்ட் மக்களின வகையைச் சேர்ந்தவராவர். தமிழரிடத்து இவ்வுடற்கூறே முதன்மையானதாகக் காணப்பெறுகிறது. இத்தகைய உடற்கூற்று இனத்தினர் தென் னிந்தியாவில் தோன்றி இருக்கமுடியாது. இவ்வினத்தைச் சேர்ந்தவர் ஆசியாவில் பாமீர் முதல் லெவாண்ட் வரையிலுள்ள பகுதியில் வாழுகின்றனர். வாணிகத் தொடர்பு காரணமாக அவர்கள் பண்டைக் காலத்தில் இந்தியாவிற்கு வந்திருக்கலாம். இனங்களின் முந்தைய வரலாற்றையும் மொழிகளின் முந்தைய வரலாற்றையும் இணைத்துப் பார்க்கின்றபொழுது திராவிட மொழியும், பண்பாடும் அர்மினுய்ட் உடற்கூற்று அமைப்புடைய மக்களின் வாழ்நிலமான அனதோலியா, அர்மீனியா, ஈரான் மேட்டுநிலப் பகுதிகளுக்கு நம்மைத் திரும்ப அழைத்துச் செல்லுகின்றன. கி. மு. மூவாயிரம், ஈராயிரம் ஆண்டுகளுக்கு இடையே அங்கிருந்து ஒரு பண்பாட்டுப் பிழம்பு சிந்து வெளிக்கும், பின்னர் வரலாற்றுக் காலத்திற்கு முற் பட்ட பண்பாடாகத் தென்னிந்தியாவிற்கும் பாய்ந்தோடியது என்று கூறினல், அது தவருகாது.

1.61 இக் கருத்தை அரண் செய்யும் வகையில் மெசப டோமியா, ஆப்கனிஸ்தான், ஈரான் மேட்டுநிலங்களில் வாழ்ந்த

---

54. Chatterji, S. K.: 'Race Movements And Pre-Historic Culture,, The Vedic Age, Ed. R. C Majumdar, George Allen & Unwin, London, 1952, P. 158.

மக்களுடைய மொழிகளுக்கும், பழக்க வழக்கங்களுக்கும், பண்பாட்டு நெறிகளுக்கும் இடையே மிகச் சிறந்த ஒப்புமைப் பண்புகள் பல காணப்பெறுகின்றன. தாய்வழி மரபுரிமை, நாக வழிபாடு, சக்தி வழிபாடு, உணவினைத் தெய்வத்திற்குப் படைத்தல், தேவதாசி முறை, கோயில் அமைப்பு அரசருடைய அரண்மனை அமைப்பினை ஒத்திருத்தல், வண்ணம் பூசப்பெற்ற மண்பாண்டங்கள், பெருங்கற் படை சமாதிகள் (Megalithics) போன்றவை சிறப்புமிக்க ஒப்புமைப் பண்புகளாகும்.[56]

### (4) நடுநிலக் கடற்பகுதியிலிருந்து வந்தவர்

#### (i) கென்னடியின் கருத்து

1.62 இந்தியாவிற்கும் பாபிலோனியாவிற்கும் இடையே பண்டைக் காலத்தில் நடைபெற்ற வாணிகத்தைப்பற்றி ஆய்வு நடத்திய கென்னடி (Kennedy) என்பார், திராவிடருக்கும் நடுநிலக் கடல் இனத்து மக்களுக்கும் இடையேயுள்ள ஒற்றுமையினையும் தொடர்பினையும் சுட்டிக்காட்டி, திராவிடர்கள் நடுநிலக் கடற்பகுதி யிலிருந்து இந்தியாவிற்கு வந்திருக்க வேண்டும் என்று கருதுகிறார்.[57]

#### (ii) சிலேட்டரின் துணிவு

1.63 'இந்திய நாகரிகத்தில் திராவிடப் பண்பு' என்னும் ஆங்கில நூலில், டாக்டர் ஜி. சிலேட்டர், "திராவிட மக்களிடையே உள்ள தலைமை இனக்கூறு நடுநிலக் கடல் இனத்தின் ஒரு கிளையே யாகும். ஆராய்ச்சி நுணுக்கத்துறை சாராத என் பொது முடிவின்படி கூறுவதாயின் தலையோட்டு வடிவம், மயிரமைதிப் பண்பு, மயிர் நிறம், கண் நிறம், உறுப்பமைதி உடலமைதிகள் ஆகியவற்றில் அவ்வினத்த வருடன் திராவிடர் குறிப்பிடத்தக்க ஒற்றுமை உடையவர்கள் என்றே கூறத்தகும்"[58] என்று துணிந்துள்ளார்.

#### (iii) எய்மெண்டார்ப்பின் புதிய விளக்கம்

1.64 இக் கருத்துகளுக்கு ஊட்டமும் உரமும் அளிக்கும் வகையில், பியூரர் கிறிஸ்டோபர் எய்மெண்டார்ப்பு என்னும்

---

56. Nilakanta Sastri, K. A.: A History of South India, Oxford U. P., Madras., 1955. PP. 55-60.

57. Early Commerce of Babylon with India, Journal of Royal Asiatic Society, Calcutta, 1898, pp. 248-97.

58. கில்பர்ட் சிலேட்டர்: இந்திய நாகரிகத்தில் திராவிடப்பண்பு, தமிழாக்கம்: கா. அப்பாத்துரை, கழகம், 1955; பக். 8.

லண்டன் பல்கலைக்கழகப் பேராசிரியர் புதியதொரு விளக்கம் தந்துள்ளார். 1952ஆம் ஆண்டில் உலக நாடுகளின் மானிடவியல்-மக்களின மரபியல் ஆராய்ச்சிக் கழகத்தின் நான்காவது மாநாடு வியன்னாவில் நடைபெற்றது. அம் மாநாட்டில் ''திராவிடரின் தோற்றம்பற்றிய புதுக்கருத்து '' என்னும் பொருள் பற்றி எய்மெண் டார்ப்பு ஓர் ஆய்வுக் கட்டுரையைப் படித்தார். அதில், தம்முடைய கருத்துகளை அவர் தெளிவுறுத்தியுள்ளார். அவை வருமாறு :

1.65 ''அண்மைக் காலத்தில் மைசூர் மாநிலத்தில் பிரமகிரி என்னும் இடத்தில் விரிவான முறையில் தொல்பொருள் ஆராய்ச்சி நடத்தப்பெற்றது. தக்கணத்தின் பல பகுதிகளில் சிறப்பாகக் காணப்படும் கல்-வட்டக்கல்லறைகளின் அமைப்பைப் போன்ற தொன்றைப் பிரமகிரியில் அகழ்ந்தெடுத்தனர். அத் தொல் பொருள் சின்னத்தில் மூன்று வகையான பண்பாட்டையுடைய அடுக்குகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. அவற்றுள் அடியடுக்காக உள்ளதைப் புதிய கற்கருவி நாகரிகக் காலத்தின் சின்னமென நாம் கூறலாம். அங்குக் கிடைத்துள்ள பழம்பொருள் கருவிகள் பல. அவற்றுள் சிறப்பு மிக்கது கற்கோடரியாகும். அது பேரளவில் கிடைத்திருக்கிறது. முட்டை வடிவில் மெருகிடப்பெற்ற கூர்மையான வெட்டுவாயோடு தடித்தமுனையுடையதாகக் கற்கோடரிகள் செய்யப்பெற்றுள்ளன. இந்திய தீபகற்பம் முழுவதிலும் கூர்மையான தடித்த முனையுடைய இக் கோடரி பரவலாக வழங்கப்பெற்று வந்ததைத் தொல்பொருள் சின்னங்கள் பலவற்றால் நாம் அறிகிறோம்.

1.66 ''இத்துடன், பிரமகிரியில் கையினால் செய்யப்பெற்றதும் திருத்தமுறாததுமான மண்பாண்டங்கள் பல இவற்றுடன் காணப் படுகின்றன. இந்த மண்பாண்டங்களையும், கற்கோடரிகளையும் செய்தவர்கள் இடம் விட்டு, இடம் பெயரும் உழவர்களாக இருந் திருக்கவேண்டும். அவர்கள் பன்றிகளையும் கோழி போன்ற பறவை களையும் வளர்த்தனர். ஆனால், ஆடு மாடு போன்ற வீட்டு விலங்கு களாகிய கால்நடைகளை அவர்கள் அறியாதவர்களாவர். அவர் களுடைய பண்பாட்டுத் தடையத்தின்மீது இரும்பைப் பயன்படுத்திய நாகரிகம் ஒன்றின் சின்னங்கள் பதிந்துகிடக்கின்றன. அப் புதிய நாகரிகத்தைப் போற்றி வளர்த்த மக்கள் சக்கரத்தினால் செய்யப் பெற்ற பழுப்புநிற மண்பாண்டங்களையும் கறுப்புநிற மண்பாண்டங் களையும் பயன்படுத்தியதோடு சிறப்பாகக் கப்பற்சாளரத்தோடு கூடிய கற்பலகைகளால் மூடப்பட்ட கல்லறைகளைக் (Stone-Cists) கொண்ட பெருங்கற்படை சமாதிகளை (Megalithic tombs) அமைத்தும் உள்ளனர். பிரமகிரியிலும், பெல்லாரி மாவட்டத்தில்

ஓரிடத்திலும் செய்யப்பெற்ற அகழ்வாராய்ச்சியாலும் அந்த வட்டாரங்களில் இதற்கு முன்னர்ச் சிறப்புற்று விளங்கிய புதிய கற்கருவி நாகரிகத்திலிருந்து இரும்பைப் பயன்படுத்திய பெருங்கற் படை நாகரிகம் வளர்ச்சியுறவில்லை என்னும் உண்மை புலனுகின்றது.

1.67 "ஆனுல், இந்திய தீபகற்பத்திற்கு வெளியே, வேறெங்கோ அந்நாகரிகம் தோன்றி வளர்ந்திருக்க வேண்டுமெனத் தோன்றுகிறது. பிரமகிரியின் பெருங்கற்படை நாகரிகம் கி. மு. 300 அளவில் செழித் திருக்க வேண்டும். ஏனெனில், அதற்கருகில் அசோகரின் கல் வெட்டுகள் காணப்பெறுகின்றன. நாகரிக வளர்ச்சியடையாத புதிய கற்கருவிக்கால தொல் பழங்குடி மக்களுக்கிடையே தம் கருத்துகளைப் பரப்புவதற்காக அசோகர் அப் பகுதியில் கல்வெட்டுக் களைப் பொறித்திருக்க இயலாது. எனவே, கி. மு. 300 அளவிலேயே பிரமகிகிரியின் வட்டாரத்தில் பெருங்கற்படை நாகரிகத்தினர் வாழ்ந்திருக்க வேண்டும். ஆனுல், தக்கணத்தில் இந்தப் புதிய பெருங்கற்படைப் பண்பாடு கி. மு. 500க்குச் சற்று முன்பே தோன்றி யிருக்க வேண்டும் என்று நம்பப்படுகிறது. எனவே, புதியதும் சிறப்புமிக்கதுமான ஒரு பண்பாடு எத்துணை விரைவாகப் பரவுமோ, அத்துணை விரைவாக அது தக்கணத்திலும் தென்னிந்தியாவிலும் வியக்கத்தக்க வகையில் மிக விரைவாகப் பேராற்றலுடன் பரவி யிருக்க வேண்டும். இன்று திராவிட மொழிகள் பேசப்பெறும் பகுதி களில் இத்தகைய பெருங்கற்படை சமாதிகளின் சின்னங்கள் மிகப் பலவாகக் காணப்படுகின்றன. அக் கற்படைச் சமாதிகள் இறந் தோரை அடக்கம் செய்யும் வட்டவடிவக் கல்லறைகளாகவும், கல்பதுக்கைகளாகவும் (Dolmen), நடுகற்களாகவும் (Men-hirs) அமைக்கப்பெற்றுள்ளன. அவற்றுள் இரும்பைத் தவிர வேறெந்த உலோகத்தையும் காணமுடியவில்லை.

1.68 "மேற்குப் பாகிஸ்தானில் கராச்சிக்கு அருகில் கற்பலகை களால் மூடப்பெற்ற கல்லறைகளின் தொகுதி ஒன்று கண்டு பிடிக்கப்பட்டது. இதைத்தவிர வட இந்தியாவில் வேறெந்தப் பகுதி யிலும் இந்தப் பெருங்கற்படைப் பண்பாட்டின் சின்னங்களைக் காண முடியவில்லை. இந்த இரும்புக் கருவிக்காலப் பெருங்கற்படைப் பண்பாடு வெளியில் இருந்து கொண்டுவரப்பெற்று, தென்னிந்தியா விற்குள் புகுத்தப்பெற்றதாகும். இந் நாகரிகத்தைக் கொண்டுவந்த மக்கள் திராவிடர்களாக இருக்கவேண்டும் என்று நம்பப்படுகிறது.

1.69 "வட இந்தியாவில் வெண்கலக் கருவி நாகரிகம் சிறப் புற்று விளங்கியமையால், திராவிடர்கள் அங்கிருந்து தென்னிந்தியா

விற்கு வந்திருக்க இயலாது. ஏனெனில், திராவிடர்கள் வட இந்தியாவிலிருந்து அல்லது வட இந்தியாவின் வழியாக வந்திருந் தால் தங்களுடைய இரும்புக் கருவிகளோடு, அங்குச் சிறப்புற்று விளங்கிய வெண்கலக் கருவிகளுள் சிலவற்றையாகிலும் தங்களுடன் கொண்டுவந்திருப்பர். அவ்வாறு வெண்கலக் கருவிகளைக் கொண்டுவராமையால் அவர்கள் கடல்வழியாகவே தக்கணத்தில் நுழைந்திருககவேண்டும். பின்னர், இந்தியாவின் மேற்குக் கடற் கரையோரமாக அவர்கள் தெற்கு நோக்கிப் பையப்பையச் சென் றிருக்கவேண்டும். இந்தப் பெருங்கற்படைச் சமாதிகளுக்கும் நடு நிலக்கடற் பகுதியில் காணப்பெறும் பெருங்கற்படை சமாதிகளுக்கும் இடையே நெருங்கிய தொடர்பு இருப்பதை நாம் காணுகின்றோம். பல வகையான ஒப்புமைப் பண்புகளுள் முதன்மையானதும் நம் முடைய கருத்தைக் கவருவதுமாக இருப்பது கப்பற் சாளரங்களோடு கூடிய கற்பலகைகளால் மூடப்பெற்ற கல்லறைகளாகும். இதனால், இந்தப் பண்பாட்டிற்குரிய திராவிடர்களுக்கும் நடு நிலக்கடலினத்து மக்களுக்கும் தொடர்பு இருக்கவேண்டுமென்று தோன்றுகிறது. இவ்விரு நாடுகளிலும் காணப்பெறும் ஒரேவகையான பண்பாட்டிற் குரிய மக்கள் ஓரினத்தைச் சேர்ந்தவர்களாக இருக்கவேண்டும் என்று கருதுவது தவறாகாது. அவர்கள் கடல் வழியாகத் தென் னிந்தியாவிற்குக் கி.மு. முதலாயிரத்தின் இடைப்பகுதியில் வந்திருக் கலாம். அல்லது அவர்கள் ஈரானிலிருந்து பலூசிஸ்தானத்தின் மூலம் நிலவழியாக இந்தியாவிற்குள் நுழைந்து, மைசூர் மேட்டு நிலத்தை அடையும் வரை மேலைக்கடற்கரை யோரமாகத் தென்னாட் டிற்குள் சென்றிருக்கலாம்.''[59] இக் கருத்து இன்றைய அறிஞர்கள் பலருடைய கருத்தினைக் கவர்ந்திருக்கிறது.

### (iv) மொழியியல் அறிஞரின் நம்பிக்கை

1.70 முப்பது ஆண்டுகளுக்கு மேல் திராவிட மொழிகளுக்கும் பாஸ்க்கு (Basque) முதலிய தெற்கு ஐரோப்பிய மொழிகளுக்கும் இடையேயுள்ள தொடர்புகளை டாக்டர் என். லகோவரி (Lahovary) என்ற ருமேனிய நாட்டு அறிஞர் ஆராய்ந்துள்ளார். அவர், ''நடு நிலககடற் பகுதியிலேயே உலகத்தின் முதல் நாகரிகங்கள் அரும்பின; கி. மு. நாலாயிரம் அளவில் அவை மலர்ந்து மணம் பரப்பின; திராவிடர்களின் மூதாதையரும் கி.மு. நாலாயிரம் அளவில் மெசப டோமியாவிலிருந்து வெளியேறிப் பையப்பைய இந்தியா வரையில்

---

59. Haimendorf, F.C.: "New Aspects of the Dravidian Problem," cf. Tamil Culture, Vol. II No 2; pp. 127-135-

சென்றிருக்கலாம் என்ற நம்பிக்கை எனக்குண்டு "[60] என்று கூறுகிறார்.

### (v) பல்லமைப்பு உணர்த்தும் உண்மை

1.71 'இனங்களின் தோற்றம்' என்ற சிறப்புமிக்க ஆராய்ச்சி நூலின் ஆசிரியரான, பேராசிரியர் சி. சார்லதன் கூன் (C. Carleton Coon) பலவகையான காரணங்களைக் காட்டி, திராவிடர் நடுநிலக் கடற் பகுதிக்குரிய 'காகேசிய' (Caucasoid) இனப்பிரிவைச் சேர்ந்தவர்கள் என்ற கருத்தினை நிலை நாட்ட முயன்றுள்ளார். இவ்வினத்தைச் சேர்ந்த மக்களுடைய பல் அமைப்பு வடிவத்தாலும், வண்ணத்தாலும், உறுதியாலும் ஒற்றுமையுடையதாகக் காணப்படுகிறது. காகேசிய இனத்தில் ஐரோப்பியர், அண்மைக் கிழக்கினர், தமிழர் முதலியோர் அடங்குவர் என்பது அவருடைய ஆய்வுரையால் தெரியவருகிறது.[61]

### (vi) மதிப்பீடு

1.72 இவையாவும் திராவிடர்கள் வெளி நாட்டிலிருந்து வந்தவர்கள் என்னும் கருத்தைத் தெரிவிக்கின்றன. இவற்றுள் 'திராவிடர்கள் நடு நிலக்கடல் இனத்தைச் சேர்ந்தவர்கள்' என்னும் கருத்தினை நிலைநாட்ட மானிடவியல், இனமரபியல், தொல் பொருளியல், மொழியியல் ஆராய்ச்சியாளர்கள் பெரிதும் முயன்றுள்ளனர் என்பதை நாம் அறிகிறோம். அவர்களுடைய அறிவுத் திறனும், ஆராய்ச்சி முறையும் நம்மை வியப்பில் ஆழ்த்துகின்றன. அவர்களுக்கு நம்முடைய வணக்கத்தைச் செலுத்தி, அவர்களுடைய கருத்துகளை இனி நாம் ஆராயலாம்.

1.73 பண்டைச் சுமேரியரோடு திராவிடரைத் தொடர்பு படுத்தி உரைப்பவர்களே, திராவிடர் எகிப்திலிருந்து வந்தவர் என்று கூறுகின்றனர். எகிப்து, மெசபடோமியா போன்ற பகுதிகளில் அகழ்ந்தெடுக்கப்பெற்றுள்ள பல தொல் பொருள் சின்னங்கள் இந்தியாவின் தொல்குடிகளான திராவிடருடைய பெருங்கற்படைச் சின்னங்களோடு பெரிதும் ஒத்திருத்தலால் அவர்கள் இவ்வாறு கருதுகின்றனர்.

---

60. Lahovary, N.: Dravidian Origins and the west, Orient Longmans, Madras, 1963; P. 16.

61. Coon, Carleton. C.: Origin of Races, A. Knopo; N. Y.,1963. P. 354;

1.74 திராவிடர்கள் சித்திய மொழி பேசும் மக்கள் இனத்தைச் சேர்ந்தவர்கள் என்னும் கருத்து இக்கால இனமரபியல், தொல் பொருளியல், மொழியியல் ஆராய்ச்சிகளால் பொய்யாய்ப், பழங் கதையாய்ப் போய்விட்டது. 'சித்திய மொழி இனம் என்று கூறு வதே ஒரு கற்பனை' என்பது மொழி இயல், மானிடவியல் ஆராய்ச்சி யால் புலனாகின்றது.[62]

1.75 மற்றும் மேற்காசியாவிலிருந்தும் நடுநிலக் கடற் பகுதி யிலிருந்தும் திராவிடர்கள் இந்தியாவிற்கு வந்தனர் என்று சொல்லப் படும் கருத்தினை மறுப்பவருமுண்டு. இந்தியாவிலிருந்து தொல்பழங் காலத்திலேயே அந்நாடுகளில் திராவிடர்கள் குடியேறினார்கள் என்று நாம் ஏன் கொள்ளக்கூடாது? இந்தியாவிற்கு வந்தார்கள் என்பதற்குரிய சான்றுகளையே, இங்கிருந்து வெளி நாடுகளுக்குச் சென்றமைக்குரிய ஆதாரங்களாகக் காட்டலாமே என்பது வேறு சில அறிஞர்களுடைய கருத்தாகும்.

### (vii) ஹாலின் புத்தொளி

1.76 டாக்டர் ஹால் என்ற அறிஞர், சுமேரியருக்கும் திரா விடருக்கும் உள்ள உடற்கூற்று ஒற்றுமையைக்கொண்டு சுமேரியர் என்பார் திராவிட இனத்தைச் சேர்ந்தவர் என்றும், அவர்கள் இந்தியாவிலிருந்து பாரசீகத்தின் வழியாக டைக்கிரிஸ், யூப்பிரடிஸ் ஆறுகள் பாயும் சமவெளிக்குச் சென்று குடியேறினர் என்றும் தம் முடைய "அண்மைக்கிழக்கின் பண்டைய வரலாறு"[63] என்னும் நூலில் தெரிவித்துள்ளார்.

1.77 இக் கருத்தினை வலியுறுத்தும் வகையில் டாக்டர் மக்லீன், "பிற்காலத்தில் திராவிடர் என்ற பெயரால் சுட்டப்பெற்ற மக்களினத்தவர் சிந்துவெளியில் வாழ்ந்து வந்தனர். அவர்களுள் ஒரு பிரிவினர், கடல் வழியாகவும், நிலத்தின் வழியாகவும் மேற்கு நோக்கிச் சென்றனர். கீழைப் பாபிலோனியாவில் உள்ள சூமர் மாநிலத்தில் அவர்கள் நிலையாகத் தங்கி வாழ்ந்தனர். அப்பொழுது அவர்கள் சுமேரியர் என்ற பெயரைப் பெற்றனர். முதலில் அவர்கள் புனித பூமியான பாலஸ்தீனம் எருசலேம் வரையிலும், அங்கிருந்து

---

62. Grierson, G. A Op. cit. Vol. IV *t* P. 282.
Chase, Stuart: The Proper Study of Mankind, Phoenix House, London 1965., p. 117.

63. Hall, H.R.: The Ancient History of the Near East, Methuen & Co; London, 1962., pp. 173-174.

ஆப்பிரிக்காவிற்கும் ஐரோப்பாவிற்கும் சுமேரிய-திராவிட நாகரிகத்தைப் பரப்பினர் என்று கருதலாம். இதை மறுப்பதற்குத் தக்க காரணங்களில்லை "[64] என்று அறிவித்துள்ளமை இங்கு ஒப்பு நோக்கத் தக்கதாகும்.

1.78 வரலாற்றுக் காலம் நெடுக, இந்தியாவிற்கு வெளியே இருந்து அயலார் படையெடுத்து வந்ததைக் காணுகிறேமேயொழிய, இந்தியாவில் உள்ள மக்கள் வடமேற்குக் கணவாய் வழியாக மேலை நாடுகளுக்குச் சென்று குடியேறியுள்ளனர் என்பதற்குச் சிறிதும் ஆதாரமில்லை. எனவே, சுமேரியர் இந்தியாவிலிருந்து மேற்கு நாடுகளுக்குச் சென்று குடியேறிய திராவிடர் என்று கூறுவது பொருததமற்றதும் வரலாற்று நிகழ்ச்சிகளுக்கு முற்றிலும் மாருனது மாகும் என்று இந்திய வரலாற்ருசிரியர் சிலர் மறுப்பர். எனினும், இக் கொள்கை திராவிடர்கள் இந்திய நாட்டின் தொல்பழங்குடிகள் என்னும் கருத்தினை அரண்செய்வதாக உள்ளமை கருதத்தக்கது.

### (viii) எய்மெண்டார்ப் கருத்துகளின் வன்மை மென்மைகள்

1.79 திராவிட இனத்தவர் கி.மு. ஐந்தாம் நூற்ருண்டு அளவில் தென்னிந்தியாவில் குடியேறினர் என்னும் எய்மெண்டார்ப்பின் கருத்து ஆராய்ச்சிக்குரியதாகும். பிரமகிரியின் பழம்பொருள் சின்னங்களைச் சர். மார்ட்டிமர் வீலர் என்ற இந்தியத் தொல்பொருள் ஆராய்ச்சித்துறையின் டைரக்டர் ஜெனரல் நேரில் ஆராய்ந்தவராவர். அங்குக் கிடைத்துள்ள பெருங்கற்படைப் பண்பாட்டுச் சின்னங்களில் கிடைத்துள்ள பொருள்கள் யாவும் கி. மு. 200 அளவில் தென்னிந்திய மக்கள் பயன்படுத்தியவை என்று அவர் அறிவிக்கின்ருர்.[65]

1.80 எனவே, பிரமகிரி தொல்பொருள் சின்னங்களைப்பற்றி இவ்விரு அறிஞர்களும் கொண்டுள்ள கருத்துகள் மாறுபட்டனவாக உள்ளன. எனினும், நாம் பிரமகிரி சின்னத்தின் காலத்தைக் கி. மு. 500-க்கும் 200-க்கும் இடைப்பட்டதாகக் கொள்ளலாம். இக்காலத்திதான் தென் இந்தியாவிற்குள் திராவிடர்கள் நுழைந்தனர் என்னும் கருத்து, கிடைத்துள்ள வேறு பல சான்றுகளுக்கு முரணுகத்தோன்றுகிறது. கி. மு. 500 அளவில் திராவிடர்கள்

---

64. Quarterly Journal of the Mythic Society, Vol. XIX, No. 3. P. 17.

65. Ancient India, No 4 : pp. 180 ff. (especially p. 202)
Indo-Asian Culture, January, 1954, pp. 238-47.

இந்தியாவிற்கு வந்தனர் என்ருல், இன்றுவரை போற்றப்பட்டுவரும் வரலாற்று முறையை முதலில் மாற்றியமைக்கவேண்டும். ஆரியர் இந்தியாவிற்கு வந்தது கி.மு. 2000 அளவில் என்பதை வரலாற்று அறிஞர்கள் ஒப்புக்கொண்டுள்ளனர்.[66] ஆரியர்கள் இந்தியாவிற்கு வந்தபொழுது இந் நாட்டில் வாழ்ந்த மக்கள் திராவிடர், ஆஸ்திரேலியப் பழங்குடி மக்கள், முண்டர்கள் முதலியோராவர். இருக்கு வேதத்தில் இருபது திராவிட மொழிச் சொற்கள் இடம் பெற்றிருப்பதை டாக்டர் பர்ரோ (T. Burrow) சுட்டிக்காட்டியுள்ளார்.[67] கி.மு. 500 அளவில் திராவிடர்கள் இந்தியாவிற்கு வந்தனர் என்ருல், ஆரியருக்குப் பின்பு, நெடுங்காலம் கழித்துத் திராவிடர்கள் இந்தியாவிற்கு வந்தனர் என்று பொருள்படும். இது வரலாற்று நிகழ்ச்சிக்கு மாறுபட்ட வரலாற்று வழுவுடையதாகும்.

1.81 கி. மு மூன்ரும் நூற்ருண்டைச் சேர்ந்த அசோகனின் கல்வெட்டுகள் தென்ஞட்டில் சேர, சோழ, பாண்டியருடைய ஆட்சியைப்பற்றிக் குறிப்பிடுகின்றன. நாடோடிகளாக இருந்த மக்கள், நிலைத்துவாழத் தொடங்கி நாகரிகத்தில் சிறப்புற்று விளங்கக் குறைந்தது ஆயிரம் ஆண்டுகளாகிலும் தேவைப்படுவதைப் பிற நாட்டு வரலாறுகளும் எடுத்தியம்புகின்றன. தமிழகத்தில் மூவேந்தருடைய ஆட்சி கி.மு. மூன்ரும் நூற்ருண்டு அளவில் சிறப்புற்று விளங்கியது என்ருல், அதற்கு முன்னர்ப் பல நூறு ஆண்டுகள் தமிழருடைய நாகரிகம் வளர்ச்சியுற்றிருக்கவேண்டும் என்பதை நாம் சுட்டிக்காட்ட வேண்டியதில்லை. கி. மு. 500 அளவில் திராவிடர்கள் தென்ஞட்டிற்கு வந்தனர் என்பது மெய்ம்மையாஞல், 'இரு நூறு ஆண்டுகளாகிய மிகக் குறுகிய காலத்தில் தமிழினம் நாகரிகத்தில் சிறப்புற்றிருக்கமுடியுமா ? சிறந்ததோர் இலக்கிய வளர்ச்சியைத் தமிழ்மொழி அடைந்திருக்கமுடியுமா ?' என்னும் ஐயங்கள் உலக வரலாற்றை அறிந்தவர்களிடத்து எழாமற் போகா.

1.82 "ஆரியர்கள் வட இந்தியாவிற்கு வந்த பின்னரே, கிழக்கு ஈரானிலிருந்து திராவிடர்கள் தென் இந்தியாவிற்குள் நுழைந்தனர் என்னும் எய்மெண்டார்ப்பின் கருத்து பல்வேறு காரணங்களிஞல் வரலாற்று நிகழ்ச்சிகளுக்கு முரண்பட்டதாகத் தோன்றுகிறது. நாம் இந்தியாவின் பெருங்கற்படை நாகரிகமக்கள் நடுநிலக்கடல் இனத்தைச் சேர்ந்தவர்கள் என்பதை வேறுவகையில் நிலைநாட்டலாம். திராவிட மொழிகளின் எண்ணுப் பெயர்களும்

---

66. Majumdar, R.C. : The Vedic Age, p. 206.

67. Burrow, P.: The Sanskrit Language, Faber, London, 1954., P. 387.

மூவிடப் பெயர்களும் பேரளவிற்கு அமிதோ-செமிடிக் (அல்லது சில ஆப்பிரிக்க மொழிகளோடும், பாஸ்க்) மொழிகளோடும் நெருங்கிய ஒற்றுமையுடையனவாகக் காணப்பெறுகின்றன. ஆனுல், அவற்றிற்கும் சுமேரிய மொழிக்கும் இடையே மிகமிகக் குறைந்த அளவே ஒற்றுமைப் பண்புகள் உள்ளன. இதனுல், நெடுங்காலத்திற்கு முன்பே திராவிடர், மெசபடோமியாவின் அமிதோ செமிடிக் மக்களின் மூதாதையரோடு நெருக்கமான தொடர்புடன் வாழ்ந்திருக்கவேண்டும் என்பதும், ஆனுல், சுமேரியர் அங்கு வருவதற்கு முன்னரே அவ்விடத்தை விட்டுத் திராவிடர் புறப்பட்டுவிட்டிருக்க வேண்டும் என்பதும் புலனுகின்றன"[68] என்று லகோவரி கூறும் கருத்து இங்குச் சிந்திக்கத்தக்கது.

1.83 திராவிடர் மேற்குக் கடற்கரையோரமாகத் தென்னிந்தியாவிற்குள் நுழைந்தனர்; அவர்கள் வட இந்தியாவில் குடியேருது தென்னுட்டிலேயே முதன்முதல் நிலேத்து வாழத்தொடங்கினர் என்னும் கருத்து, உண்மைக்கு மாருனதாகும். வேதகால வடமொழி இலக்கியங்களுள், வட இந்தியாவில் வாழ்ந்த பழங்குடி மக்களேப் பற்றிய குறிப்புகள் பல காணப்படுகின்றன. நிஷாதர்கள், விராடியர், தஸ்யூக்கள் என்னும் பல பெயர்களால் அவர்களே ஆரியர் சுட்டியுள்ளனர். அப் பெயர்களுக்கு உரியவர்களுள் திராவிடர்களும் ஒருவராவர். பிற்கால சமஸ்கிருதமொழி நூல்களுள் 'திராவிடர்' என்னும் சொல்லாட்சியும், அவர்களுடைய நாகரிகத்தைப் பற்றிய குறிப்புகளும் இடம்பெற்றிருப்பதை நாம் எளிதில் புறக்கணித்து விடமுடியாது. காத்தியாயனர் சோழ, பாண்டிய மன்னர்களேப் பற்றிப் பேசுகிருர் (பாணினீயம், IV. i. 168, 175 உரை). மாபாரதத்திலும், மனுதரும சாத்திரத்திலும் திராவிடரைப் பற்றிய குறிப்புகள் காணப்பெறுகின்றன. இவை யாவற்றையும்விட மொகஞ்சொதாரோ, ஹாரப்பா பகுதிகளில் சிறப்புமிக்க நாகரிக நிலேயில் வாழ்ந்த மக்களுள், ஒரு பகுதியினரேனும் திராவிடர்களாக இருந்திருக்கவேண்டும் என்பதை மறுக்க இயலாது. எனவே, ஆரியருக்கு முன்பே வட இந்தியாவிலும் தென்னிந்தியாவிலும் திராவிடர்கள் வாழ்ந்திருக்கவேண்டும் என்று கருதுவதற்கு வலிமையான சான்றுகள் பல உள்ளன. அவற்றை யாரும் எளிதில் புறக்கணிக்கமுடியாது.[69] என்று டாக்டர் டி. சி. சர்க்கார் மொழிந்துள்ளமை இங்கு நினைவுகூர்தற்குரியதாகும்.

---

68. N. Lahovary; Op. cit. p. 370.

69. Sircar, D. C.: Studies in Society and Administration of Ancient and Mediaeval India, Mukhopadhyay, Calcutta, 1957. pp. 31-40;

1.84 வட இந்தியாவில் திராவிட மொழிக் குடும்பத்தைச் சேர்ந்த திருத்தமடையாத மொழிகள் பல, பழங்குடி மக்களால் பேசப்பட்டு வருகின்றன. குறிப்பிட்ட சில மலைப்பகுதிகளிலும் காட்டுப்பகுதிகளிலும் வாழுகின்ற நாகரிக வளர்ச்சியுருத மக்களால் அவை பேசப்பட்டு வருகின்றன. மொழியியல் பேராசிரியர் டாக்டர் எமனோ (Murray B. Emeneau) அம்மொழிகளை ஆராய்ந் துள்ளார். வட இந்தியாவிலும் நடு இந்தியாவிலும் மட்டும் பதினுன்கு திராவிட மொழிகள் வழங்கி வருகின்றன. அவற்றுள் பீகாருக்கும் வங்காளத்திற்கும் இடையில் உள்ள காடுகளிலும் மலைகளிலும் கூய், கூவி, குருக், மால்ட்டோ (இராஜ்மகால்) என்னும் மொழிகள் பெருவழக்காக உள்ளன. இத்தகைய மொழிச் சின்னங்கள் வட இந்தியாவில் இன்றுவரை நிலைத்த வாழ்வைப் பெற்றிருக்கின்றன. இவை யனைத்தும் தொல்பழங்காலத்தில் திராவிடர்கள் தென் இந்தியாவில் மட்டும் அல்லாமல், வட இந்தியாவிலும் வாழ்ந்திருக்கவேண்டும் என்ற உண்மையை உணர்த்துகின்றன.[70]

1.85 சென்னைப் பல்கலைக் கழகத்தின் தொல்பொருள் ஆராய்ச்சித் துறைத் தலைவராக விளங்கிய டாக்டர் டி. வி. மகாலிங்கம் அவர்கள், டாக்டர் எய்மெண்டார்ப் வெளியிட்டுள்ள ஆராய்ச்சிக் கருத்தினை மதிப்பீடு செய்கின்றவகையில் 'தென்னிந்தி யாவில் தொல்பொருள் ஆராய்ச்சி' என்னும் கட்டுரையை வரைந் துள்ளார். அதில், "பிரமகிரியில் கண்டெடுக்கப்பெற்ற படிவுப் பொருள்களைக் கொண்டு கிறித்தோபர் பியூரர் எய்மெண்டார்ப் இந் நாகரிகத்தினை உருவாக்கிய மக்கள் திராவிடர்களாக இருக்கலாம் என்றும், அசோகனின் காலத்திற்கு முன்பு, அதாவது கி.மு. 700-க்கும் கி.மு. 400-க்கும் இடையில் தென்னிந்தியாவினுள் அவர்கள் குடியேறியுள்ளனர் என்றும் அவர் கருதுகிருர். கிறிஸ்துவ ஊழியுள் முதலிரு நூற்றுண்டுகளில் சீரும் சிறப்பும் பெற்று, இலக்கியவளத்துடன் திகழ்ந்த தமிழ்மொழி, பெருங்கற்படை சமாதி நாகரிகக்காலத்திய மக்களிடையே திருத்தம் பெருத குழுவின (patois) மொழியாக வழங்கி இருக்கவேண்டும் என்பது இங்கு நினைவுகூர்தற்குரியதாகும். எனவே, தொல்பழங்காலத் தமிழ்மொழி, 'செந்தமிழ்' மொழியாக வளர்ச்சி அடைவதற்குச் சில நூற்றுண்டு களாகிலும் தேவைப் பட்டிருக்கும். இக்காரணத்தினுல், பெருங் கற்படை சமாதி நாகரிகத்தின் தொடக்க காலத்தை இன்னும் சிறிது

---

70. Vide: Proceedings of the American Philosophical Society, Vol. 98; No. 4. August 16, 1954, P. 287.

முற்பட்ட காலமாக, அதாவது கி. மு. 1000 என்ற அளவிற்காகிலும் தள்ளமுடியாதா என்பதை முக்கியமாக நாம் ஆராய வேண்டியவர்களாக இருக்கிறோம்''[71] என்று அவர் தெரிவித்துள்ள கருத்து, இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். இவ்வாய்வினால், எய்மெண்டார்ப்பின் கருத்து முடிந்த முடிபாகக் கொள்ளத்தக்கது அன்று என்பதும், வருங்காலத்தில் தொல்பொருள் ஆராய்ச்சியால் வெளிப்படும் ஒளியைக்கொண்டுதான் திராவிடரின் தாயகத்தைப்பற்றித் துணிந்து கூற இயலும் என்பதும் புலனாகின்றன.

*(ஆ) இந்தியாவின் பழங்குடி மக்களே திராவிடர்*

1.86 சென்ற நூற்றாண்டின் இறுதியிலும், இந் நூற்றாண்டின் தொடக்கத்திலும் மேலைநாட்டு அறிஞர்களுள் பலர், மக்களினம் தோன்றிய உலகத்தின் பகுதிகளுள், தென்கிழக்கு ஆசியப்பகுதியும் ஒன்றெனக் கூறியுள்ளனர்.

*(1) லெமூரியா அல்லது குமரிக்கண்டம்*

1.87 ஸ்காட் எலியட் (Scott Elliot) என்ற அறிஞர் 'அழிந்துபோன லெமூரியா' என்னும் நூலில், ''ஆப்பிரிக்காக் கண்டம் முதல் ஆஸ்திரேலியா வரையிலும், விந்தியம் முதல் கிழக்கிந்தியத் தீவுகள் வரையிலும் பரந்ததொரு நிலப்பரப்பு அமைந்திருந்தது. அங்கு மனிதனைப் போன்ற குரங்குகள் பேரளவில் இருந்தன. அவற்றை 'லெமூர்' (Lemur) என்று ஸ்கிலேட்டர் (Sclater) குறிப்பிடுவதனால் அவை வாழ்ந்த நாட்டை 'லெமூரியா' என்ற பெயரால் அழைக்கலாம்'' என்று அவர் குறிப்பிடுகிறார். அந்நிலப்பரப்பு தெற்குப் பெருங்கடலில் இருந்தது என்றும், அங்குத்தான் முதன்முதல் மனித இனம் தோன்றியிருக்கவேண்டும் என்றும் அவர் பல சான்றுகள் காட்டி நிறுவியுள்ளார்.[72] அவருடைய கருத்தை அரண்செய்யும் வகையில் சர் வால்டர் ராலே (Sir Walter Raleigh), லெமூரியாவே மக்களினம் தோன்றிய முதல் நிலப்பரப்பு என்னும் கருத்தினை நிலைநாட்ட முயன்றுள்ளார். கடல் கோளினால் அந் நிலப்பரப்பு அழிந்த பொழுது, அங்கிருந்த மக்கள் இந்தியாவின் எஞ்சிய பகுதியில் குடியேறினர் என்பதற்குப் பல ஆதாரங்களை அவர் காட்டியுள்ளார்.[73]

---

71. Journal of Madras University, Sect. A. Humanities Centenary Number, 1957; P. 148.

72. Elliot, Scott: Lost Lemuria, Manchet, 1915., pp. 23.35.

73. Raleigh, Sir Walter: History of the World, Clarendon, 1916, P. 66.

1.88 பேராசிரியர் எய்க்கல் (Haekel) என்பார் "படைப்பின் வரலாறு" (History of Creation) என்னும் நூலிலும், 'மனித இனத்தின் மரபுக் குடிவழி' என்னும் நூலிலும் இந்தியப் பெருங்கடல் இருக்கும் இடத்தில் நீண்ட நெடுங்காலத்திற்கு முன்பு, சந்தா தீவு களிலிருந்து ஆசியக் கடற்கரை வழியாக ஆப்பிரிக்காவின் கீழைக் கரைவரையிலும் ஒரு பெருநிலப்பரப்பு இருந்தது என்பர். இந்த நிலப்பரப்பின் ஒரு பகுதியில்தான் மனிதன் தோன்றியிருக்க வேண்டும் என்னும் கருத்தை அவர் வலியுறுத்திக் கூறியுள்ளார்.[74]

1.89 இக் கருத்துகளின் வன்மை மென்மைகளை ஆராய்ந்த சர் ஜான் எவான்சு (Sri Jhon Evans), கடல் கொண்ட லெமூரியா நாட்டைப் பற்றிய செய்திகளை உடன்படுவதோடு, தமக்குக் கிடைத்த பலவகையான சான்றுகளாலும் தென்னிந்தியாவே மனித இனத்தின் மூலத் தாயகமாக இருக்கவேண்டும் என்று தாம் நம்புவதாகத் தெரிவித்துள்ளார்.[75]

1.90 மண்ணியல் ஆராய்ச்சியில் ஈடுபட்ட அறிஞர் சிலரும் 'லெமூரியா' என்னும் நிலப்பரப்பு கடலில் மூழ்கிய பின்னர் இந்திய நிலப்பரப்பில் உண்டான மாற்றங்களைச் சுட்டுகின்றனர். அந் நிலையில் மனித இனம் அக் கடல்கொண்ட நிலப்பரப்பின் ஒரு பகுதி யாகிய தமிழகத்தில் தோன்றி இருக்கவேண்டும் என்ற கருத்தினைத் தெளிவுறுத்தியுள்ளனர்.

1.91 "தென்னிந்தியா, கங்கை ஆறு பாயும் நிலப்பரப்பிற்கும் இமயமலைக்கும் மண்ணியல் அடிப்படையில் வேறுபட்டது. இப் போது இந்தியப் பெருங்கடல் இருக்கின்ற இடத்தில், ஆபிரிக்கா வரையிலும் தொடர்ச்சியாக நீண்டிருந்த பழைய கண்டத்தின் எஞ்சிய பகுதி இன்றைய தென்னிந்தியாவாகும். இதன் கண்ணுள்ள பாறைகளும் குன்றுகளும் உலகத்திலுள்ள மிகப் பழைய பாறை அமைப்பைச் சார்ந்தன. இக் குன்றுகளின் பல விடங்களில் கருங் கற்பாறை படிவுப்பாறையாகப் பரவி இருக்கின்றது. ஆகையால், உலகில் தொல்பழங்காலத்தில் உயிர்கள் தோன்றுவதற்கு முன்னர் அது எவ்வாறு இருந்ததோ, அவ்வாறே தெற்கில் இன்று வரை இருந்து வருகின்றது. சிந்து கங்கைச் சமவெளி, சிந்து ஆறுமுதல் கங்கைக் கழிமுகம் வரையில் ஆயிரத்து இருநூறு கல் இடைவெளி

---

74. Haekel: (1) History of Creation, Vol. I; p. 361; Vol. II, pp. 325-26; (2) The Pedigree of Man, Methuen, 1918., P. 173.

5. Evans, Sir John: 'The Home of Mankind'—in the "Science of Man", August, 1901., pp. 18-37.

யின்றி நீண்டிருக்கிறது. மண்ணுலகு பதப்பட்டுக்கொண்டு இருக்கும்போது-இமய மலை கிளம்பும் முன்னர்க் கங்கையாற்று வெளி இருக்குமிடம் கடலாயிருந்தது. இமயமலை கிளம்பிய போது கடல் மறைந்தது. இம் மலையிலிருந்து ஓடிவரும் ஆறுகள் வாரிக்கொண்டு வந்த வண்டல் மண்ணினால் இப்போதுள்ள சமவெளி உண்டா யிற்று''[76] என்று மண்ணியல் ஆராய்ச்சியாளர் அறிவித்துள்ளனர்.

1.92 இக் கருத்துகள் அனைத்தும் திராவிடர்கள் தமிழகத்தின் தெற்கே இருந்த நிலப்பரப்பு ஒன்றில் தோன்றியவர்கள்; அந் நிலப் பரப்பு பெரு வெள்ளத்தினால் கடலினுள் மூழ்கியபொழுது, அவர்கள் வடக்கு நோக்கிக் குடியேறினர்; அவ்வாறு அவர்கள் குடியேறிய பகுதி இன்றைய தமிழகத்தின் தெற்குப்பகுதியாகும் என்பதைத் தெரிவிக்கின்றன. இக் கருத்துகளை வெளியிட்ட அறிஞர்கள் வெறும் இலக்கிய ஆராய்ச்சியாளர்களோ வரலாற்றாசிரியர்களோ அல்லர்; தங்களுடைய காலத்தில் சிறப்புமிக்க மண்ணியல் ஆராய்ச்சியாளர்களாகவும் (Geologists) இனமரபியல் அறிஞர் களாகவும் (Ethnologists) மானிடவியல் வல்லுநராகவும் (Anthropologists) அவர்கள் விளங்கினர் என்பதை நாம் நினைவு கூர்தல் வேண்டும்.

1.93 இந்தியாவின பண்டைக்கால வரலாற்றிலும் சிந்துவெளி நாகரிகத்தைப்பற்றிய ஆராய்ச்சியிலும் சிறப்பாகப் பேரீடுபாடு கொண்டு விளங்கிய திருத்தந்தை ஈராசுப் பாதிரியார் தமிழருடைய தோற்றத்தைப்பற்றியும் ஆராய்ந்துள்ளார். ''லெமூரியா எனப்படும் நாட்டில் தோன்றிய மக்கள் இந் நாடு கடல்வாய்ப்பட்ட பொழுது சிதறுண்டு வேறுபல திசைகளில் சென்று அங்கங்கே தங்கி வாழ்ந்தனர். ஆப்பிரிக்காவில் சிதறுண்டு தங்கியவர் 'ஆப்பிரிக்கர்' என்றும், இந்தியாவைச் சேர்ந்தவர் 'திராவிடர்' என்றும், ஜாவா, சுமத்திரா வழியாகச் சீனா முதலிய பகுதிகளுக்குச் சென்றவர் மங்கோலியர் என்றும் பலவகை மக்களாக வாழ நேரிட்டது. இந்த நாட்டில் நெடுங்காலம் நாகரிக வளர்ச்சி அடைந்த திராவிடர்கள் மேற்குத்திசை நோக்கிப் பயணம் செய்தனர். பல்வேறு நாடுகளில் தங்களுடைய குடியிருப்புகளை அமைப்பதில் அவர்கள் வெற்றியும் கண்டனர். மெசபடோமியாவிலிருந்து பிரிட்டிஷ் தீவுகள் வரையில் அவர்கள் பயணம் செய்ததோடு, தங்களுடைய இனத்தை மேலை

---

76. Holderness, J. W.: Peoples and Problems of India, London, 1901; pp. 23-24.

நாடுகளில் பரப்பினர். பின்னர், மானிடவியல் அடிப்படையில் அவர்கள் வாழ்ந்த இடத்தின் பெயரால் ‘நடுநிலக் கடலினத்தினர்’ என்ற பெயரையும் அவர்கள் பெற்றனர். தங்களுடைய நாகரிகத்தை இருபெருங் கண்டங்களில் பரவச் செய்ததோடு இவ்வாறு இன்றைய உலக நாகரிகத்தினை அவர்கள் தோற்றுவித்தனர்” [77] என்று மொழிந்துள்ளமை இங்குக் கருதத்தக்கது.

1.94 தமிழகத்தின் தொன்மைபற்றி ஆராய்ந்த மண்ணியல் வல்லுநர்களும், தொல்பழங்கால வரலாற்றில் தேர்ச்சிமிக்க வரலாற்று ஆராய்ச்சியாளர்களும், “வட இந்தியாவில் காணப்படுவது போல் எரிகுழம்பு எழுந்து படிந்தமைக்கோ, நிலநடுக்கங்கள் ஏற்பட்டமைக்கோ அறிகுறிகள ஒன்றும் தென்னிந்தியாவில் காணப்படவில்லை. ஆதலின், உலகம் தோன்றிய காலத்தில் குழம்பாக இருந்த மண் முதலில் குளிர்ந்து அமைந்த நிலப்பகுதி தென்னிந்தியாவாகும். இவ்விடத்தில் மனிதன் தோன்றி இருக்கலாம்” [78] என்று குறிப்பிடுகின்றனர். இவ்வாறு பல்வேறு கோணங்களில் தமிழகத்தின் தொன்மையை — தென்னிந்தியாவின் காலங்கடந்த பழமையை — அறிஞர் பெருமக்கள் தங்களுடைய ஆராய்ச்சியின் மூலம் உலகிற்கு உணர்த்த முயன்றுள்ளனர்.

1.95 இவ் வாராய்ச்சியாளருடைய கருத்துகளையெல்லாம் ஒன்றுகக் கோவைப்படுத்திப் பார்க்கின்ற பொழுது, “லெமூரியா எனப்படும் குமரிக்கண்டமே திராவிடர்களுடைய மூலத்தாயகமாகும். நடுநிலக்கடல் இனத்தவர் என்று அழைக்கப்பெறும் அந்த இன மக்கள் இந்தியாவின் தென்பகுதியில் தோன்றியவர்களாவர். அப் பகுதி கடல்வாய்ப்பட்ட திராவிடருடைய மூலத்தாயகத்தின் ஒரு பகுதியாகும். அம் மூலத்தாயகம் கடல்கொள்ளப்பட்ட லெமூரியாவில் இருந்தது. அங்கு அரும்பிய நாகரிகமே வடமேற்கு இந்தியப் பகுதியில் சிந்துவெளி நாகரிகமாக மலர்ந்தது. மொகஞ்சொதாரோவில் வளர்ந்த திராவிடரின் நாகரிகமே நடுநிலக்கடலை அடுத்த பகுதிகளில் எகிப்திய நாகரிகம், பாபிலோனியா நாகரிகம், பொனீசிய நாகரிகம் போன்ற பல நாகரிகங்கள் தோன்றக் காரணமாக இருந்தது” [79] என்னும் கருத்துப் புலனுகிறது.

---

77. Heras. Rev. St.: Studies in the Proto-Indo Mediterranean Culture, Vol. I; Bombay, 1953, pp. 21,

78. Ramachandra Dikshitar, V. R.: Op. cit., p. 234.

79. Ibid, p. 179. காண்க: Origin and Spread of the Tamils, pp. 35-36 Kazhagam, Madras, 1971.

## (2) கடல்கோளும் முச்சங்க வரலாறும்

1.96 தமிழகத்தின் தெற்கே இருந்த ஒரு பெருநிலப்பரப்பு கடல்கோளினுல் அழிவுற்றது என்னும் மேலைநாட்டு ஆராய்ச்சியாளர்களுடைய கருத்தினைப் பழைய தமிழ் இலக்கியங்களிலிருந்து சான்றுகள் காட்டி, திராவிடர் இந் நாட்டின் பழங்குடி மக்களே என்னும் கருத்தை நிலைநாட்டத் தமிழகத்தின் மூதறிஞர்கள் பலர் முயன்றுள்ளனர்.

1.97 இன்றைய தமிழகத்தின் தெற்கே இருந்த ஒரு பெரிய நிலப்பரப்பு கடல்வாய்ப்பட்டது என்பதற்குப் பழைய தமிழ் இலக்கியத்துள் சான்றுகள் பல உள்ளன. கடல் கொண்ட தென்னுட்டைக் 'குமரி நாடு' என்று அழைத்து வருவதற்குரிய காரணத்தையும் ஆராய்ச்சியாளர்கள் விளக்கியுள்ளனர்.[80] அந் நிலப் பகுதி, பல நூருயிரம் ஆண்டுகள் தமிழ்நாட்டின் ஒரு கூருயிருந்து, பின்னர்ப் பையப்பைய கடலுள் மூழ்கிவிட்டது என்பதைப் பண்டைக் காலப் புலவர்களும், பழைய உரையாசிரியர்களும்[81] தெளிவுறுத்தியுள்ளனர்.

1.98 அவற்றை ஆராய்கின்றபொழுது சில உண்மைகள் புலனுகின்றன. தமிழகத்தைக் கடல்கொண்ட மரபுவழிச் செய்தியோடு, தமிழ் வளர்ச்சியில் ஈடுபட்டிருந்த முச்சங்கங்களின் வரலாறும் இணைந்து காணப்படுகிறது. அந் நாடு "தமிழகத்தின் ஒரு பகுதி மட்டுமன்று; தமிழினம், தமிழ் நாகரிகம் ஆகியவற்றின் தாயகம் என்றே கூறவேண்டும். ஏனெனில் தமிழைத் தொன்று தொட்டு வளர்த்த சங்கங்கள் மூன்றனுள், தலைச்சங்கம், நடைபெற்ற தென்மதுரையும் இடைச் சங்கம் நடைபெற்ற கவாடபுரமும் இக் குமரிப் பகுதியிலேயே இருந்தன.

1.99 எனவே, தலைச்சங்க காலமாகிய முதல் ஊழியிலும் இடைச்சங்க காலமாகிய இரண்டாம் மூன்றும் ஊழிகளிலும் இக் குமரிப் பகுதியிலேயே தமிழர் ஆட்சியும் நாகரிகமும் மொழி வளர்ச்சியும் ஏற்பட்டன என்பதும், தெற்கிலிருந்து கடல் முன்னேறி வரவர அவர்கள் வடக்கு நோக்கிப் பரந்து சென்றனர் என்பதும் விளங்குகின்றன.

---

80. கந்தையா பிள்ளை, ந. சி.: தமிழகம், பக். 7; ஒற்றுமை ஆபீசு, சென்னை, 1934.

81. இக் கடல்கோள் நிகழ்ச்சியைச் சங்க காலப் புலவருள் சிலரும், இடைக் காலத்திய உரையாசிரியர்கள் சிலரும் தெளிவாகவும் விரிவாகவும் விளக்கியுள்ளனர். அவர்களுடைய கருத்துகளை யாரும் எளிதில் பொய்யுரை என்று புறக்கணித்து விட முடியாது. மறக்கமுடியாத சிறப்புமிக்க நிகழ்ச்சியாக அவர்கள் அதைப் போற்றியுள்ளனர் என்பதைப் பின்வரும் சான்றுகள் அறிவிக்கின்றன:

1.100 தமிழ்நூல்களில் மூன்று கடல்கோள்களைப்பற்றித் தெளிவான குறிப்புகள் காணப்படுகின்றன. முதல் கடல்கோளால் பஃறுளியாறும் குமரிக்கோடும் கடலால் கொள்ளப்பட்டன. பஃறுளியாற்றின் கரையிலிருந்த தென்மதுரையே பாண்டியன் தலைநகரும், தலைச்சங்க மிருந்த இடமுமாகும். இக் கடல்கோள் நிகழ்ந்த காலத்திலிருந்த பாண்டியனே 'நெடியோன்' என்று புறநானூற்றிலும, 'நிலந்தரு திருவிற் பாண்டியன்' என்று தொல்காப்பியப் பாயிரச் செய்யுளிலும் குறிக்கப்பட்டவனுவான். கடல்கோளின் பின்னர் இவன் வடக்கே போய்க் கவாடபுரத்தைத் தலைநகராக்கிக் கொண்டான். இங்கேதான் இடைச்சங்கம் நடைபெற்றது.

1.101 தலைச்சங்க நாள்களில் பஃறுளியாற்றிற்கும் குமரியாற்றிற்கும் இடைப்பட்ட பகுதி, அளவிலும் சிறப்பிலும் பாண்டிநாட்டின் மிகச்சிறந்த பாகமாய் இருந்திருக்கவேண்டும். அது 49 நாடுகளாக வகுக்கப்பட்டிருந்ததென்றும், இரண்டு ஆறுகட்கு மிடையே 700 காவத அளவு அகன்று கிடந்ததென்றும் அறிகிறோம்.

1.102 இரண்டாவது கடல்கோளால் கவாடபுரம் கடல் கொள்ளப்பட்டது. அதன்பின் சிலகாலம் மணவூர் பாண்டியன் தலைநகராக இருந்தது. பின் மூன்றும் முறைக் கடல்கோளால் அம் மணவூரும் குமரியாறும் அழியவே, பாண்டியன் மதுரை வந்து அங்கே கடைச்சங்கத்தை நிறுவினுன்.

1.103 சிலப்பதிகாரத்தில் மாடலன் குமரியாற்றில் நீராடியதாகக் கூறப்பட்டிருக்கிறது. ஆனல், கதை முடிந்ததன்பின் எழுதப்

---

(1) "செங்நீர்ப் பசும்பொன் வயிரியர்க் கீந்த
முந்நீர் விழவின் நெடியோன்
நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே" (புறம். 9)

(2) "வடவேங்கடந் தென்குமரி" (தொல். பாயிரம்)

(3) "வடிவேல் எறிந்த வான்பகை பொறுது
பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
குமரிக்கோடும் கொடுங்கடல் கொள்ள
வடதிசைக் கங்கையும் இமயமும் கொண்டு
தென்திசை யாண்ட தென்னவன் வாழி" (சிலப். 11 : 18-22)

(4) "மலிதிரை யூர்ந்துதன் மண்கடல் வெளவலின்
மெலிவின்றி மேற்சென்று மேவார் நாடிடம்படப்
புலியொடு வில்நீக்கிப் புகழ்பொறித்த கிளர்கெண்டை
வலியினன் வணக்கிய வாடாச்சீர்த் தென்னவன்" (கலி. 104)

மேலும், இறையனர் களவியல் உரையையும் (சூ. 1. உரை, பக். 8), தொல்காப்பியம் எழுத்து அதிகாரம் இளம்பூரணர் உரையையும் (சிறப்புப்பாயிரம் 4-5), சிலப்பதிகாரம் அடியார்க்கு நல்லார் உரையையும் (கா. 8. 1-2 உரை) காண்க.

பெற்ற நூலினுள் 'தொடியோள் பௌவ'மெனக் குமரி, கடலாகக் கூறப்பட்டுள்ளது. இவ்விரு காலப்பகுதிகளுக்கு இடையே, அதாவது கோவலனிறந்த சில நாள்களுக்குப் பின்னுகக் குமரியாறு கடல் கொள்ளப்பட்டுக் குமரிக்கடலாயிற்று என்பர் பேராசிரியர்.'' [82]

1.104 இக் கடல்கோள்களைப்பற்றிய செய்திகள், இலங்கையின் காலவழிச் செய்திக் கோவைகளான தீபவமிசம், மகாவமிசம், இராசாவளி போன்ற நூல்களிலும் காணப்படுகின்றன. இந் நூல்களை ஆராய்ந்து, இலங்கையின் வரலாற்றை முறையாக முதன் முதல் எழுதிய ஜே. இ. டென்னன்ட்டு (Sir J. E. Tennent) என்பவர், "இந்தியாவிலிருந்து இலங்கையானது கடலோரத்தில் உண்டாகியதோர் கலக்கத்தால் கிறித்து பிறக்குமுன் 2387-ஆம் ஆண்டில் பிரிவுற்றதாகப் பௌத்தர்களால் சொல்லப்படுகின்றது. மற்றுமொருமுறை கி. மு. 504-ஆம் ஆண்டில் பாண்டுவாசா (இலங்கை அரசரில் ஒருவன்) காலத்தில் அவ்வாறே ஒரு கடல் கோள் உண்டாயிற்று. இதற்கு 200 ஆண்டுகளுக்குப் பிறகு கி. மு 306 இல் ஆட்சிபுரிந்த தேவனும்பிரிய திஸ்ஸாவின் காலத்தில் கொழும்புக்கு அருகில் நிலமானது தன் மட்டத்தில் தாழ்ந்து கடலினுள் மூழ்கியது'' [83] என்று வரைந்துள்ளார். கி. மு. இரண்டா யிரத்துக்கு முன்பு ஒரு கடல்கோளும், கி. மு. ஆறும் நூற்ருண்டில் மற்றெரு கடல்கோளும் கி. மு. நான்காம் நூற்ருண்டில் வேறெரு கடல்கோளும் உண்டாயிருக்கவேண்டும் என்பது அவருடைய கருத்து. அவ்வாருயின் இற்றைக்கு 4300 ஆண்டுகளுக்கு முன்பு நிகழ்ந்த முதற்கடல்கோள் இன்றைய தமிழகத்தின் தெற்கே இருந்த நிலப்பரப்பினை லெமூரியாக் கண்டத்தினை விழுங்கியிருக்கவேண்டும் என்று தமிழ்நாட்டு அறிஞர்கள் கருதுகின்றனர்.

1.105 வரலாற்று அறிஞர்கள் இக் கருத்தை ஒப்புக்கொள்ளத் தயங்குகின்றனர். லெமூரியாவைப்பற்றி இப்பொழுது நமக்குக் கிடைத்துள்ள செய்திகள் அரைகுறையானவை; அவை சரியான வையும் அல்ல. இன்றைய தமிழ்நாட்டுக்குத் தெற்கே சிறிது அளவு நிலப்பரப்பு இருந்திருக்க இயலாது என்று கூறமுடியாது. கன்னியா குமரிக்குக் கிழக்கே பண்டைக் காலத்தில் நிலப்பரப்பு இருந்திருக் கலாம். வரலாற்றுக் காலத்திற்குச் சற்று முன்பும், வரலாற்றுக் காலத்தின் தொடக்கத்திலும் நிகழ்ந்த கடல்கோள்களினுல் அது

---

82. அப்பாத்துரை, கா.: குமரிக்கண்டம் அல்லது கடல்கொண்ட தென்னுடு, பக். 2-3.

83. Vide: V. Kanakasabhai Pillai: Op. cit. p. 21; F. N.

கடலினுள் மூழ்கியும் இருக்கலாம். ஆனால், முத்தமிழ்ச் சங்கங்களின் வரலாற்றில் குறிப்பிடப்பெறும் கடல்கோள்களை வரலாற்றுக் காலத்தில் நிகழ்ந்தனவாகக் கொள்ளுதலே பொருத்தம் உடையதாகும்.

1.106 லெமூரியாக்கண்டம் அழிவுற்றது தொல்பழங்காலத்திலேயே யாகும். இந்தியத் துணைக்கண்டம் இன்றைய வடிவத்தையும், நிலையையும் பெற்றது இன்றைக்கு ஐந்து கோடி ஆண்டுகளுக்கு முன்னராகும். அக்காலத்தில் மனிதனே இம் மண்ணுலகில் தோன்றவில்லை. எனவே, வரலாற்றுக் கதிர்கள் சென்று ஒளிவீச முடியாத தொல்பழங்காலத்தில் இந்தியாவின் தென்பகுதி கிழக்கு மேற்காகப் பரந்துகிடந்த ஒரு பெருநிலப்பரப்போடு தொடர்புடையதாக இருந்திருக்கலாம். ஆனால், மனித இனம் தோன்றுவதற்கு முன்னரே இயற்கையில் உண்டான பெருமாற்றங்களாலும், கடல் கோள்களாலும் அந் நிலப்பரப்பு சிதறுண்டு போயிருக்கலாம். ஆதி மனிதன் ஜாவாவில் தோன்றியதாக நம்பப்படுகிறது. அதே காலத்தில் இந்திய தீபகற்பத்திலும் மனிதன் தோன்றியிருக்கக் கூடும். ஆனால், வரலாற்றுக் காலத் தமிழ் மக்களைத் தொடக்க காலத்திய பழங்குடி மக்களோடு தொடர்புபடுத்துவது மிகைப் படுத்திக் கூறுவதாகும்[84] என்று அவாகள் மொழிந்துள்ளனர்.

1.107 மற்றொரு சாரார், "மேலே கூறிய அறிஞர்களின் கூற்றுகளையே ஆதாரமாகக் கொண்டுதான், தமிழர்களின் முன்னோர்கள் மறைந்துபோன லெமூரியாக் கண்டத்தைச் சேர்ந்தவர்கள் என்றும், வட இந்தியாவும் இமயமலையும் தோன்றுவதற்கு முன்னரே லெமூரியாக் கண்டத்தின் ஒரு பகுதியாகத் தமிழ்நாடு இயங்கி, தமிழர்களும் வாழ்ந்துவந்தார்கள் என்னும் சித்தாந்தம் செய்யப் பெற்றிருக்கின்றன. இரண்டு தலைமுறைகளுக்கு முன்னிருந்த தமிழ் அறிஞர்கள் இவ்விதக் கொள்கைகளைக் கொண்டிருந்ததில் ஆச்சரியம் ஒன்றும் இல்லை. ஆனால், இன்றும் சிலர் இவைகளைக் கூறி வருவது சற்று விந்தையாயிருக்கிறது[85] என்று சாற்றுகின்றனர்.

### *(3) புத்தொளி*

1.108 அண்மையில் யுனஸ்கோ 'பூபௌதிக ஆண்டினை' (Geo-Physical Year) 1966இல் கொண்டாடியது. அப்பொழுது

84. Pillay, K. K.: A Social History of the Tamils, Univ. of Madras, 1969, pp. 43-44.

85. சுப்பிரமணிய ஐயர், ஏ. வி.: பண்டைத் தமிழ் நாடு, எஸ். ஆர். சுப்பிரமணிய பிள்ளை, திருநெல்வேலி; 1970 ; பக். 70.

இந்தியப் பெருங்கடலை ருஷியநாட்டு மண்ணியல் ஆராய்ச்சியாளர் துருவித்துருவி ஆராய்ந்தனர். அதன் பயனுகச் சில உண்மைகள் வெளிப்பட்டுள்ளன. இந்தியப் பெருங்கடலுக்குள் அடியில் ஒரு பெரிய நிலப்பரப்பு இடிபாடுகளோடு கூடிய ஊர்களுடன் மூழ்கிக்கிடப் பதையும், அது சற்றேறக்குறைய இலங்கையிலிருந்து தென் ஆப்பிரிக்கா வரையிலும், தெற்கே ஆஸ்திரேலியா வரையிலும் பரவிக் கிடப்பதாகவும் கண்டறிந்துள்ளனர். இதைப்போன்ற வேறு சில கருத்துகளும் 1969ஆம் ஆண்டு "சைன்டிபிக்கு அமெரிக்கன்" (Scientific American) மார்ச்சு மாத இதழில் வெளிவந்துள்ளன. அவ்வாராய்ச்சியாளர்கள் திராவிட இனத்தின் தோற்றத்திற்குப் புத்தொளி அளிக்கத்தக்க வகையில் பல புதிய உண்மைகளை உலகிற்கு உணர்த்துவார்கள் என்னும் நம்பிக்கையுண்டாகிறது.

### (4) புது விளக்கம்

1.109 திராவிடர்கள் லெமூரியாக் கண்டத்தில் தோன்றிய வர்கள் என்னும் கொள்கையை மறுப்பவர்கள் காட்டும் காரணங் களுள் முதன்மையானதாகவும், ஆராய்ச்சியாளர்கள் அனைவராலும் கருதத்தக்கதாகவும் உள்ளது ஒன்றே ஒன்றுதான். மனித இனம் (Homo Sapiens) தோன்றுவதற்கு முன்னரே, லெமூரியாக் கண்டம் கடலினுள் மூழ்கிவிட்டது என்பதே அக் காரணமாகும். இக் கருத்தினை உண்மையென நாம் ஒப்புக்கொள்ளலாம். ஆனால், தமிழ் நூல்கள் கூறும் ஒரு பெருநிலப்பரப்பு வரலாற்றுக் காலத்தில் கடலில் மூழ்கியிருக்கமுடியாது என்று கூறுவதற்கு இதைச் சான்ருகக் காட்டுதல் பொருந்தாது. உலகின் பல பகுதிகளில் இருந்த தீவுகள் பல அண்மைக் காலத்தில் கடலில் மூழ்கிவிட்டதை மண்ணியல் வல்லுநர் தக்க சான்றுகள் காட்டி நிறுவியுள்ளனர்.[86] எனவே இன்றைய தமிழகத்திற்குத் தெற்கே இருந்த ஒரு பெரு நிலப் பரப்பு இலங்கை வரலாற்று ஆசிரியர் கூறுவதைப் போன்று கி. மு. மூவாயிரம் அளவில் கடலில் மூழ்கியிருக்கலாம். அந் நிலப்பரப்பில் தமிழரின் மூதாதையர் தோன்றினர் என்றும், அங்கு அவர்கள் படிப் படியாக நாகரிக வளர்ச்சியுற்றனர் என்றும் நாம் கருதலாம்.

1.110 தமிழகத்தில் வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்ட மக்களுடைய வாழ்க்கையைப்பற்றி ஆராய்ந்த அறிஞர் பெருமக்கள், "தென்னிந்தியாவின் வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்ட தொல் பொருள் சின்னங்களைக் கருத்துடன் ஆராய்வோமானல், ஓர்

---

86. Scientific American, March, 1968, p. 16.

உண்மை எளிதில் புலனாகும். தொல்பழங்காலத்தில் இங்குச் சிறப்புற்று விளங்கிய பண்பாடு ஒரு நிலையிலிருந்து மற்றொரு நிலைக்கு மாறுகின்றபொழுது—வளர்ச்சியுறுகின்ற பொழுது—அமைதியாகப் படிப்படியாக வளர்ச்சியுற்றிருப்பதைக் காணுகினறோம். பண்டை மககளோடு புதிதாக இந் நாட்டினுள் நுழைந்த மக்கள் தங்கள் நாகரிகத்தைத் திணித்து, பழைய பண்பாட்டிற்குப் பேரழிவு உண்டாககியதற்கு யாதோர் அறிகுறியும் இதுவரை இங்குக் கிடைககவில்லை. புதிய கற்கருவிக் காலத்திய இந்தியாவின் படத்தை நாம் ஆய்ந்து பார்ப்போமானால், ஒரே வகையான பண்பாட்டை உடைய மக்கள் நாடு முழுவதிலும் நெருக்கமாக வாழ்ந்து வநததை நாம் காண்போம். மேலும், அம் மக்கள் இந் நாட்டின் தொல்பழங்குடிகளாகவே தோன்றுவர். பழைய தமிழ் இலக்கியத்தில் போற்றப்பட்டுவரும் மரபும் இக் கருத்தினை அரண்செய்கிறது. தமிழ் மொழியின் மிகப் பழைய அடுக்குகளில் புதிய கற்கருவிக் காலத்திற்குரிய சுவடுகள் மிகப் பலவாகக் காணப்படுகின்றன. அதையடுத்துத் தோன்றிய இரும்புக் கருவிக் காலப் பண்பாடு அரும்பியமைககுரிய தடையங்களையும் நாம் அவற்றில் கண்டறிய முடிகிறது ''[87] என்று அறிவித்துள்ளமை இங்குச் சிந்தித்தற்குரியதாகும்.

1.111 தென்னிந்தியாவில், கற்காலத்திற்குப் பிறகு அயல் நாடுகள் பலவற்றில் காணப்படுவதைப் போன்று செம்பு, வெண்கலக் கருவிக்கால நாகரிகங்கள் தோன்றாது, நேரடியாக இரும்புக்கருவிக் கால நாகரிகமே தோன்றியது. புதிய கற்கருவிக் காலப் பழம் பொருட் சின்னங்களை ஆராய்ந்ததன் பயனாகக் கற்கருவிக்கால நாகரிகத்திற்கு எத்தகைய பேரழிவும் உண்டாகவில்லை என்பது புலனாகின்றது. இவ்விரு நாகரிகங்களும் ஒன்றன்மீது மற்றொன்று படிந்தும் காணப்படுகின்றன. இரும்பினால் கருவிகள் செய்யப் பெற்ற காலத்திலும், கற்கருவிகள் புழக்கத்தில் இருந்ததை இரும்புக் காலத்தைச் சேர்ந்த கல்லறைகளில் நாம் காணுகின்றோம்.[88]

1.112 உலகச் சிறப்புமிக்க உலோகத்தொழில் கலையியல் வல்லுநரான பேராசிரியர் கௌலாந்து (Prof. M. Gowland), '' ஐரோப்பாவில் இரும்புத் தொழில் தொடங்குவதற்கு நெடுங்காலத்

---

87. Srinivasa Ayyangar, P. T.: The Stone Age in India, Madras, 1926. p. 47.

88. காண்க: Srinivasa Ayyangar, P. T.: Pre-Aryan Tamil Culture, Reprint from the Journal of Indian History, Vol. VII, Madras, 1924; p. 5.

திற்கு முன்பே இந்தியத் தீபகற்பத்தில் இரும்புத்தொழில் செய்யப் பட்டு வந்ததாக அறிஞர்கள் கருதுகின்றனர். அங்கு இரும்பை உருக்கிக் காய்ச்சுவதைத் தற்செயலாகவே ஆதிகாலத்திய மக்கள் கண்டறிந்து இருக்கவேண்டும். கற்கருவிக்கால மக்கள் பெரிதும் குன்றுகளிலும், மலைச்சரிவுகளிலும், வளமிக்க செறிந்த காடுகளின் ஓரங்களிலும் வாழ்ந்தனர். இரும்பினைக் கண்டறிந்த பிறகே, ஆதி மனிதர் காட்டினைத் தம்முடைய வாழ்விடமாகக் கொண்டிருக்கலாம் என்று கருதுவதே பொருத்தமாகத் தோன்றுகிறது. இரும்புக் கருவிக்கால நாகரிகமே குன்றுகளில் வாழ்ந்த மக்களைக் காடுகளில் சென்று வாழுமாறு தூண்டியது. மிகப்பழைய காலம் முதல் இரும்பைப் பயன்படுத்திவருவதற்குரிய நம்பிக்கை இந்தியாவில் தொன்றுதொட்டு இருந்துவருகிறது. மேலும், துருப்பிடிக்காத வகையில் இரும்பைச் செய்யும் சிறப்பு மிக்கதோர் முறையையும் அவர்கள் அறிந்திருந்தனர்[89]'' என்று இரும்புக் கருவிக்கால நாகரிகம் தமிழகத்தில் தோன்றிய வரலாற்றைக் குறிப்பிட்டுள்ளார். அவ ருடைய கூற்று, தமிழகத்தில் குறிஞ்சி நிலத்தில் நாகரிகம் அரும்பி, முல்லை நிலத்தில் போதாகி, மருத நிலத்தில் மலர்ச்சியுற்றதைக் கோடிகாட்டுகின்றது. எனவே, பேராசிரியர் பி. தி. சீநிவாச ஐயங்கார் கருதுவதைப் போன்று இரும்புக்கருவிக்கால நாகரிகம் தமிழகத்தில் குறிஞ்சி நிலத்தின் கற்கருவிக்கால நாகரிகத்திலிருந்து படிப்படியாக வளர்ச்சியுற்றதாகக் கொள்ளுவது பொருந்தும்.[90]

1.113 இந்நிலையில், பிரமகிரி போன்ற இடங்களில் அகழ்ந் தெடுக்கப் பெற்றுள்ள இரும்புக்கருவி நாகரிகச் சின்னங்கள் நடுநிலக் கடற்பகுதியில் காணப்படும் பெருங்கற்படைச் சமாதிச் சின்னங் களுடன் ஒற்றுமையுடையனவாகக் காணப்படுகின்றனவே என்ற ஐயம் எழலாம். இச் சின்னங்களை அகழ்ந்தெடுத்த சர் மார்ட்டிமர் வீலர் கி. மு. 200 அளவில்தான் பிரமகிரியில் இரும்புக்கருவிக்கால நாகரிகம் சிறப்புற்றிருக்கவேண்டும் என்று குறிப்பிடுகிறார்.[91] இரும்புக்கருவிக்கால நாகரிகம் கி. மு. 1500 அளவில் தொடங்கியது என்று ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர்.[92]

---

89. காண்க: Anthropology on the March, Ed. by Bala Ratnam, Boo Centre, Madras, 1963; p. 79.

90. Srinivasa Ayyangar, P. T.: History of the Tamils, Coomaraswamy Naidu & Sons, Madras, 1929., pp. 2-3.

91. காண்க: Ancient India, No. 4, pp. 180 ff.

92. Lucas, Henry S.; A Short History of Civilisation, p. 45; McGraw Hills, N. Y., 1943.

1.114 ஆகவே, தென்னிந்தியாவில் வாழ்ந்துவந்த திராவிட இனத்தவர் கி. மு. மூவாயிரம் அளவில் வணிகத்தின் பொருட்டுக் கடல்வழியாகவும், நிலவழியாகவும் மேற்காசிய நாடுகளோடு தொடர்பு கொண்டிருந்தனர் என்றும், அத் தொடர்பினுல், நடுநிலக் கடற்பகுதியில் திராவிடருடைய குடியேற்றங்கள் சில அமைக்கப் பெற்றன என்றும் நாம் கருத இடமுண்டு.[93] சற்றேறக்குறைய ஆயிரம் ஆண்டுகள் அங்கு நிலைத்து வாழ்ந்த திராவிட இனத்தவருள் ஒரு குழுவினர் தங்களுடைய கருத்துகளும் கருவிகளும் நிறைந்த பண்பாட்டோடு, கிழக்கு நோக்கிப் புறப்பட்டுப் பையப்பைய ஈரானைக் கடந்து, இந்தியாவின் வடமேற்கு எல்லைப்புற வழியாக இந்தியா விற்குள் நுழைந்திருக்கலாம். பின்னர், அவர்கள் மேற்குக் கடற் கரையோரமாகத் தென்னிந்தியாவை அடைந்தனர் என்று நாம் கூறலாம். அந்நிலையில் தங்களுடைய நாகரிகத்தோடு நெருங்கிய தொடர்புடைய திராவிட மக்களுடன் நடுநிலக்கடற்பகுதியிலிருந்து புதிதாக வந்தேறிய திராவிட இனத்தினர் இரண்டறக் கலந்து விட்டனர் என்று கூறினுல், அது தவருகாது.

1.115 இவ் விளக்கத்தின் அடிப்படையில் நோக்கினுல், திராவிடர் இனத்தின் தோற்றம் ஒரு மறைபொருளாகப் புதிராக இருந்துவரும்நிலை மாறிவிடும். அவர்கள் இந் நாட்டின் பழங்குடி மக்களே என்ற கருத்து வலியுறும். வருங்காலத்தில் நடைபெறக் கூடிய ஆராய்ச்சிகளால் இக் கருத்து உறுதிப்படுமென நான் நம்புகின்றேன்.

---

93. தென்னிந்தியாவில்தான் வரலாற்றுக் காலத்திற்கு முன்பே இரும்பு பயன் படுத்தப் பெற்றுள்ளது. வட இந்தியாவில் கி. மு. 1000 அளவிலேயே இரும்பு பயன் படுத்தப் பெற்றதாகத் தெரிகிறது. காண்க: Bruce Foot: Pre-historic and Proto-historic Antiquities of South India, pp. 23-28., Madras, 1916.

D. H. கார்டன் (Gordon) என்பவர், 'The Pre-Historie Background of Indian Culture' என்னும் நூலில் இந்தியாவிற்கும் நடுநிலக் கடற்பகுதிக்கும் நெருங்கிய வாணிகத்தொடர்பு இருந்து வந்ததையும், கி. மு. ஆயிரத்திற்கு முன்பே இந்தியாவின் மேலைக்கடற்கரைப் பகுதிகளிலிருந்து தெற்கு அரேபியாவிற்கு அடிக்கடி மரக்கலங்கள் சென்று வந்ததற்குரிய சான்றுகளையும் தெளிவாகக் காட்டியுள்ளதைக் காண்க.

## கருத்துப் பரிமாற்றம்

*திரு. மு. சண்முகம் பிள்ளை*

1.34 திராவிடம் என்னும் சொல் தமிழ்ச் சொல்லா? வடமொழிச் சொல்லா?

தமிழ் என்னும் சொல்லின் பாகதச்சிதைவே 'திராவிடம்' என்பதாகும். 'காப்பி' என்னும் சொல் 'Coffee' என்ற ஆங்கிலச் சொல்லின் திரிபாகிய தமிழ்ச்சொல் என்று நாம் கருதுகிறோம். அதைப்போன்றே 'தமிழ்' என்னும் சொல்லின் வடமொழித் திரிபே 'திராவிட'மாகும்.

1.97 'மலிதிரையூர்ந்து மண்கடல் வெளவலின்' என்று தொடங்கும் கலித்தொகைப் பாட்டு கடல்கொண்ட குமரிக் கண்டத்தைக் குறிப்பதாகக் கொள்ளுதல் பொருந்துமா?

கலித்தொகைப் பாட்டு வரலாற்றுக் காலத்தில் நடைபெற்ற நிகழ்ச்சியைக் கூறுவதாகக் கொள்ளுவதே பொருந்தும்.

'ஒருமொழி' வைத்து உலகாண்ட என்பது எதைக் குறிக்கிறது?

'ஒருமொழி' என்பது மக்கள் பேசுகின்ற மொழியைக் குறிக்காது. அது 'அரசனுடைய ஆணை' என்றே பொருள்படும். இன்றைய பேச்சுவழக்கில்கூட, நாம் அவருடைய சொல்லுக்கு மறுசொல் கிடையாது என்று குறிப்பிடுவது உண்டு. அதாவது அரசன் பேராதிக்கம் வாய்ந்தவன்; அவனுடைய ஆட்சிக்குட்பட்ட குறுநில மன்னரும், அரசியலதிகாரிகளும் அவனுடைய ஆணைவழி நின்று ஒழுகினர்; அதற்கு மறுமொழியே கிடையாது என்பதைத் தெரிவிக்கிறது. எனவே, 'ஒருமொழி' என்பது அரசனுடைய இறைமைப்பண்பினைப் புலப்படுத்தும் ஆணை எனலாம்.

*டாக்டர் சி. பாலசுப்பிரமணியன்*

1.1 'ஆரியர், சித்தியர், மங்கோலியர்' என்ற தொடரில் வரும் 'ஆரியர்' என்ற சொல்லுக்கு என்ன பொருள்? 'ஆரியர் கயிறாடு பறை' என்று குறுந்தொகையில் வருகிறது. 'ஆரியக் கூத்து' என்று சொல்லுகிறோம். 'அந்தணர், பார்ப்பனர், ஆரியர்' என்னும் பெயர்கள் ஓரினத்தைச் சுட்டும் ஒரு பொருட் பன்மொழிகளா? விளக்கம் தேவை.

இங்கு நாம் 'ஆரியர்' என்று சுட்டுவது மானிடவியல் நூலார் உடற்கூற்று அமைப்பின்வழி 'நார்டிக்குகள்' (Nordics) என்று பாகுபடுத்தியுரைக்கும் 'இந்திய-ஆரியரை'க் குறிக்கும். 'ஆரியர்' என்ற சொல்லுக்கு 'உயர்ந்தவர், மேலானவர், தலைவர்' என்னும் பொருள்கள் வடமொழி கோசங்களில் கூறப்பட்டுள்ளன. இப் பொருளிலேயே கம்பர் 'ஆரிய!' என்று வீடணனைக் குறிப்பிடுகிறார்.

இன்று நாம் மொழிவழிப் பண்பாட்டில், சமஸ்கிருத மொழி வளர்த்துள்ள பண்பாட்டை 'ஆரியப்பண்பாடு' என்று சுட்டுகிறோம். இவ்வடிப்படையிலேயே

'ஆரியன் கண்டாய் தமிழன் கண்டாய்'

என்று அப்பரும் (தேவா. 6479) பாடியுள்ளார்.

பண்டைக் காலத்தில் விந்திய மலைக்கு வடக்கே உள்ள பகுதியை வடமொழியாளர் 'ஆரியவர்த்தம்' என்றே குறிப்பிட்டுள்ளனர். இச் சொல்லிற்கு 'ஆரியர்கள் வாழும் நாடு' என்பது பொருள்.

சங்க காலத்தில் சேரநாட்டிற்கு வடக்கே இருந்த ஒரு பகுதிக்கு 'ஆரியகம்' (Ariake) என்ற பெயர் வழங்கியதாகத் தாலமி (Ptolemy) முதலிய யவன ஆசிரியர்கள் குறிப்பிட்டுள்ளனர். இடைக்காலத்திய சாளுக்கியரின் கல்வெட்டுகள் மராட்டிய மண்டலத்தின் வடமேற்குப் பகுதியை 'ஆரியகம்' என்று சுட்டுகின்றன. தமிழகத்திற்கு வடக்கே இருந்தவர்களை 'ஆரியர்' என்னும் பொதுப்பெயரால் சுட்டும் வழக்கும் இருந்திருக்கலாம். சிலப்பதிகாரத்தில் "அருந்தேர்த் தானை ஆரிய வரசர்" (சிலப். 26 : 211) என்றும், "ஆரிய மன்னர் அமர்க்களத்தெடுத்த" (சிலப். 28 : 98) என்றும், "ஆரிய மன்னர் அழகுற அமைத்த" (சிலப். 27 : 22) என்றும் வரும் குறிப்புகளில் 'ஆரியர்' என்னும் சொல் 'வட நாட்டினர்' என்னும் பொருளையே உணர்த்துகிறது. இதை வெளிப்படையாக அறிவிக்கும் வகையில், 'வட' என்னும் அடை கொடுத்து வழங்கும் வழக்கம் இருந்தமை "வடவாரிய ரொடு வண்டமிழ் மயக்கத்துன்" (சிலப். 25 : 158) என்பதனால் தெரிகிறது. எனவே, 'ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன்' என்னும் தொடருக்கு வடநாட்டு அரசர்களுடைய படையை வென்ற நெடுஞ்செழியன் என்பது தான் பொருளெனக் கூறலாம்.

சங்க காலத்தில் வடக்கே இருந்து வந்த கூத்தாடுவோரையும், வித்தைக்காரரையும் 'ஆரியக்கூத்தர்' என்று அழைத்தனர்.

ஆரியர் கயிருடு பறையின்' என்று ஆரியர் கயிற்றின்மீது ஆடும், கூத்தைப்பற்றிய குறிப்பு ஒன்று குறுந்தொகையில் (7) காணப் படுகிறது.

பல்லவர் காலத்தில் 'ஆரியர்' என்னும் சொல் 'மேலானவர், உயர்ந்தவர்' என்ற பொருளிலும், 'சமஸ்கிருத மொழிப் பண்பாட்டிற் குரியவர்' என்ற பொருளிலும் வழங்கப்பட்டுள்ளதைக் காணு கின்ருேம். "ஆரியனல்லன் குதிரை இரண்டுள" என்னும் திருமந்திரத்துள் (565) 'உயர்ந்தவன் அல்லது தலைவன் அல்லன்' என்ற பொருளில் இச் சொல் கையாளப் பெற்றுள்ளதைக் காணலாம்.

"ஆரியம் தமிழோடிசை யானவன்" (தேவா. 5404)

"செந்தமிழோ டாரியனை" (தேவா. 6710)

"ஆரியன் கண்டாய் தமிழன் கண்டாய்" (தேவா. 6479)

என்னும் அடிகள், தேவாரப்பாடல்களில் 'வடமொழிப் பண்பாட்டின் தலைவன்' என்னும் பொருளில் 'ஆரியன்' என்னும் சொல் பயன் படுத்தப் பெற்றதைத் தெரிவிக்கின்றன.

தமிழ்க் கல்வெட்டுகளில் 'ஆரியர்' என்னும் சொல்லாட்சி மிக அருகிய வழக்காகவே உள்ளது. கூத்து வகையில் ஒன்ருன 'ஆரியக்கூத்தினை' ஆடுவோரைப் பற்றிய குறிப்பு, சோழர் காலத்திய கல்வெட்டுகளில் காணப்பெறுகிறது. 'ஆரியம் தமிழ் எனும் சீர்நடம் இரண்டினும்' என்று சிலப்பதிகார உரை யாசிரியர் குறிப்பிடுகிருர். ஆரியக்கூத்து தமிழகத்தில் செல்வாக் குற்றதை அறிவிக்கும் வகையில், 'ஆரியக் கூத்தாடினுலும் காரி யத்திலே கண்' என்னும் பழமொழி இன்றும் வழங்கிவருகிறது.

சென்ற நூற்ருண்டில் இந்திய மொழிகளைச் சில குடும்பங் களாகப் பாகுபாடு செய்தபொழுது, 'ஆரியன்' என்பதற்குச் சமஸ் கிருதத்தைத் தாய்மொழியாகக் கொண்டவன் என்ற கருத்து உருப்பெற்றது. பின்னர், வேதகால வட இந்திய மக்களை மாக்ஸ் முல்லர் போன்ற அறிஞர்கள் இச் சொல்லாலேயே சுட்டலாயினர்.

'அந்தணர், பார்ப்பனர், ஆரியர்' என்னும் சொற்கள் அண்மைக்காலத்தில்தான் ஒரு பொருட் பன்மொழிகளாக வழக்கத் திற்கு வந்திருக்கவேண்டும். தமிழக வரலாற்றின் ஒவ்வொரு கால கட்டத்திலும், ஒவ்வொரு வகையான பொருளில் இச் சொற்கள் வழங்கப்பட்டுள்ளன. 'அந்தணர்' என்னும் சொல் சாதி வேறு பாடற்றவகையில் "எத்துணையும் பேதமுருது எவ்வுயிருந் தம்முயிர்

போல் எண்ணியுள்ளே ஒத்துரிமை உடையவராய் உவக்கின்ற'' அறவோரையே முதலில் குறித்தது எனலாம். இதற்கு வள்ளுவருடைய,

"அந்தணர் என்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான்" (குறள் 30)

என்னும் குறளே போதிய சான்ருகும்.

"அந்தணர் திறத்தும் சான்ருேர் தேஎத்தும்" (தொல். கற். 5)

"நூலே, கரகம், முக்கோல் மணையே
ஆயுங்காலை அந்தணர்க் குரிய" (தொல். மரபு. 71)

"அந்த ணளர்க் குரியவும் அரசர்க்கு
ஒன்றிய வருஉம்" (தொல். மரபு. 73)

என்னும் தொல்காப்பிய நூற்பாக்கள், வள்ளுவர் குறிப்பிடுகின்ற அறவோராகிய அந்தணரையே சுட்டுவதாகும். பார்ப்பனரை அந்தணரிலிருந்து தொல்காப்பியர் வேறுபடுத்திக்கூறுவது இங்குக் கருதத்தக்கது.

'பார்ப்பார்' என்னும் சொல் தொல்காப்பியர் காலத்தில் வேதத்தைப் பார்ப்பவரையும், பயில்பவரையுமே குறித்தது.

"அறுவகைப் பட்ட பார்ப்பனப் பக்கமும்" (தொல். புறத். 20)

"காமநிலை உரைத்தலும் தேர்நிலை உரைத்தலும்
அன்னவை பிறவும் பார்ப்பார்க்கு உரிய" (தொல். கற். 36)

"தோழி தாயே பார்ப்பான் பாங்கன்" (தொல். கற். 52)

"பார்ப்பான் பாங்கன் தோழி" (தொல். செய். 189)

என்னும் அடிகளில் தொல்காப்பியர் பார்ப்பனரைக் குறிப்பிடுகிருர்.

இறுதியாகக் காட்டப்பட்ட அடிக்குப் பொருள் கூறுகின்ற பொழுது பேராசிரியர், "பார்ப்பான் என்பான், நன்றுந்தீதும் ஆராய்ந்து உறுதி கூறுவானெனப்படும்" (தொல். பொருள். செய். 189 உரை) என்று விளக்கந் தந்துள்ளார். இக் கருத்து அடிப்படையில் நோக்கினல், நாள் கோள் பார்த்துக்கூறும் 'கணியனை' இச் சொல் குறிப்பதாகும். எனினும், தொல்காப்பியத்திலும் சங்க இலக்கியங்களுள்ளும் 'பார்ப்பான்' என்னும் சொல் பெரிதும் வேதியரைச் சுட்டுவதாகத் தோன்றுகிறது. திருவள்ளுவர்,

"மறப்பினும் ஒத்துக் கொளலாகும்; பார்ப்பான்
பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்" (குறள் 134)

என்று சுட்டுவது நான்மறையாளர்களையே என்பதில் ஐயமில்லை.

சங்க காலத்தின் பிற்பகுதியில் பார்ப்பாரை, 'அந்தணர்' என்னும் சொல்லால் சுட்டும் வழக்குத்[1] தோன்றிவிட்டது. திருக்குறளில்,

"அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய்
நின்றது மன்னவன் கோல்" (குறள் 543)

என்னும் செய்யுளில் 'அந்தணர்' என்னும் சொல் வேதங்களை யோதும் பார்ப்பனரையே சுட்டுவதாகத் தோன்றுகிறது. கபிலர் எனும் புலவர், தம்மைப் "புலனழுக் கற்ற அந்தணாளன்" (புறம். 126) என்று சுட்டுவதும் இங்குக் கருதத்தக்கது.

சிலப்பதிகார காலத்தில், "மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிட" (சிலப். 1 : 52) என்னும் பகுதியும், "நான்மறை முற்றிய நலம்புரி கொள்கை, மாமறை முதல்வன் மாடலன்" (சிலப். 15 : 12-13) என்னும் அடியும், "அறவோர்க்களித்தலும் அந்தணர் ஓம்பலும்" (சிலப். 16 : 71) என்னும் பகுதியும், "அறுதொழில் அந்தணர் பெறுமுறை வகுக்க" (சிலப். 23 : 70) என்னும் பகுதியும், "அறக்களத்து அந்தணர்" (சிலப். 28 : 222) என்னும் பகுதியும் பார்ப்பனரும் அந்தணரும் ஒருவரே என்ற பொருளைப் புலப்படுத்துகின்றன. எனவே, சங்ககாலத்தின் கடைப்பகுதியில் இருவகைப் பண்பாடுகளும் கலந்து மயங்கிய நிலையில் பார்ப்பனரையும், 'அந்தணர்' எனும் சொல்லால் சுட்டும் வழக்கம் பெருவழக்குற்றது எனலாம்.

பல்லவப் பேரரசர் காலத்தில்தான் அந்தணரும் பார்ப்பனரும் ஒருவரே என்னும் கருத்து நன்கு வேரூன்றத் தொடங்கியது. அக்காலத்தில் வாழ்ந்த திருமூலர்,

"அந்தண ராவோர் அறுதொழில் பூண்டுளோர்
செந்தழல் ஓம்பிமுப் போதும் நியமஞ்செய்
தத்துவ நற்கரு மத்துநின் றுங்கிட்டுச்
சந்தியும் ஓதிச் சடங்கறுப் போர்களே" (திருமங். 224)

என்றும், வேதத்தை ஓதுபவரே அந்தணர் என்னும் கருத்தில்,

"அந்தண்மை பூண்ட அருமறை அந்தத்துச்
சிந்தைசெய் அந்தணர்" (திருமங். 234)

என்றும் பாடியுள்ளமை இங்கு நினைவுகூர்தற்குரியது.

---

1. "ஓதல் வேட்டல் அவைபிறர்ச் செய்தல்
ஈதல் ஏற்றலென் றாறுபுரிந் தொழுகும்
அறம்புரி யந்தணர் வழிமொழிந் தொழுகி" (பதிற். 24)

தேவார காலத்தில் இப் பழக்கம், வழக்கமாக மலர்ச்சியுற்றது. திருஞான சம்பந்தர், ''நல்லுயர் நான்மறை நாவின் நற்றமிழ் ஞானசம்பந்தன்'' (தேவா. 732) என்றும், ''தழங்கெரிமூன்று ஓம்புதொழில் ஞானசம்பந்தன்'' (தேவா. 1415) என்றும் தம்மைத் தாமே சுட்டிக்கொள்ளுகிருர். இக் குறிப்புகளிலிருந்து அவர் முத்தீ வளர்த்து, வேதவேள்வி செய்யும் பார்ப்பனர் குலத்தில் தோன்றியவர் என்பது தெரிகிறது. தம்முடைய ஊரில் வாழ்கின்ற பார்ப்பனரைச் சுட்டுகின்றபொழுது, ''அந்தணரல்லார் அகன் காழியுள் ஞானசம்பந்தன்'' (தேவா. 2790) என்று அவர் குறிப்பிடுகிருர். மேலும், ''வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்'' (தேவா. 3372) என்னும் பதிகத்துள்ளும் 'அந்தணர்' என்னும் சொல்லைச் சிறப்பாகப் பார்ப்பனரைக் குறிக்கும் வகையில் அவர் பயன்படுத்தியுள்ளார். இதைப் போன்றே, ''அந்தணர்களான மலையாள ரவரேத்தும்'' (தேவா. 1840) என்னும் அடியால் மலையாள தேசத்து நம்பூதிரிப் பார்ப்பனரையும் அவர் குறிப்பிட்டுள்ளார்.

திருநாவுக்கரசர், இறைவனை ''அந்தணர் தம் சிந்தையானை'' (தேவா. 6244) என்று சுட்டுமிடத்தில், வேதத்தை ஓதும் நான்மறையாளரையே குறிப்பிடுகிருர். இத்தகைய நிலை உண்டானமையால், பல்லவர் காலத்திற்குப் பின் வந்தவர்கள் எல்லாரும், 'அந்தணர்' என்னும் சொல் 'பார்ப்பனர்' என்னும் சமூகத்தினரைக் குறிப்பிடும் ஒருவகைச் சாதிப் பெயராகவே கொண்டனர். நாம் தொல்காப்பியத்தின் அடிகளாக முன்னர்க் கண்ட மேற்கோள் பகுதிகளில் வரும் 'அந்தணர்' என்னும் சொல்லுக்கு இளம்பூரணர், பேராசிரியர், நச்சினர்க்கினியர் என்னும் உரையாசிரியர்கள் 'பார்ப்பனர்' என்றே பொருள் கொண்டுள்ளனர்.

பதினன்காம் நூற்ருண்டின் இறுதிப்பகுதியில் வாழ்ந்த நச்சினர்க்கினியர் 'அந்தணர்' என்னும் சொல்லிற்குத் திருவள்ளுவரின் கருத்திற்கு நேர்மாருகப் பொருள் உரைத்துள்ளார். 'வேதத்தின் அந்தத்தை அணவுபவர்' (பத்து. திருமுருகு. 96 உரை) என்று திருமூலர் கருத்தைத் தழுவி அவர் விளக்கம் தந்துள்ளார்.

இச் சான்றுகளிலிருந்து 'அந்தணர்' என்னும் சொல்லும், 'பார்ப்பார்' என்னும் சொல்லும் குறிப்பிட்ட ஒரு சாதியினரைக் குறிக்கும் சொல்லாகப் பல்லவர் காலம் முதற்கொண்டே பெரு வழக்காக இருந்துவருகிறது எனலாம்.

1.97 கலித்தொகைப் பாடல் குறிப்பிடும் கடல்கோள் வரலாற்றுக்கால நிகழ்ச்சி என வலியுறுத்த அகப்புறச்சான்றுகள் உண்டா ?

‘ மலிதிரை யூர்ந்துதன் மண்கடல் வெளவலின்
மெலிவின்றி மேற்சென்று மேவார் நாடிடம்படப்
புலியொடு வில்நீக்கிப் புகழ்பொறித்த கிளர்கெண்டை
வலியினுன் வணக்கிய வாடாச்சீர்த் தென்னவன் ’

என்னும் பாடற்பகுதி (கலி. 104)யால், அப் பாடலேப்பாடிய சோழன் நல்லுருத்திரன் அண்மைக்காலத்தில் நிகழ்ந்த ஒரு நிகழ்ச்சியைக் குறிப்பிடுவதைப்போன்று தோன்றுகிறது. இப் பாடலின் கருத்தினை விளக்கியுரைக்கும் வகையில், ‘வடிவேல் எறிந்த வான்பகை பொருது ’ எனத் தொடங்கும் சிலப்பதிகாரப் பகுதி (11 : 18-22) தென்னவன் வடதிசையில் கங்கையையும் இமயத்தையும் கைக் கொண்டு ஆண்டதாகக் கூறுகிறது. இவற்றைக் கூர்ந்து நோக்கின் கலித்தொகைப் பாடலில், அதனை இயற்றிய புலவருடைய காலத்திற்கு அணிமையில் நிகழ்ந்த ஒரு கடலரிப்பையே அவர் குறிப்பிடுவதாகக் கொள்ளலாம். இதனுல், இந் நிகழ்ச்சியை வரலாற்றுக்காலத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சியாகக் கருதலாம். இதைப் பற்றித் தெளிவுறுத்தக்கூடிய அகப்புறச் சான்றுகள் ஒன்றும் இதுவரை கிடைத்திருப்பதாகத் தெரியவில்லை.

1.27 ‘திராவிடம்’ என்ற சொல் தமிழ்ச்சொல் அன்று. அது பிறமொழிகளில் பழமையான சொல்லாகக் கொள்ளப்படுகின்றதா ?

‘ தமிழ் ’ என்னும் சொல்லின் பாகதச் சிதைவே ‘ திராவிடம்’ என்பதாகும். வேதங்களிலோ, உபநிடதங்களிலோ, சாணக்கியரின் அருத்த சாத்திரத்திலோ இச் சொல் வழங்கப்பெறவில்லை. கி.பி. முதலிரண்டு நூற்றுண்டுகள் அளவிலேயே இச் சொல் மநுதரும சாத்திரத்திலும், பாரதத்திலும் இடம் பெற்றிருக்கிறது. கி.பி. ஆரும் நூற்றுண்டையொட்டி, குமரில பட்டர், வராகமிகிரர் போன்ருேரால் இச் சொல் பெருவழக்கிற்குக் கொண்டுவரப் பட்டுள்ளது.

# திராவிடப் பண்பாடு

* ஆரியரல்லாதார் இந்திய நாகரிகத்திற்கு வழங்கியுள்ள கொடையைப் பயன் மதிப்பு அற்றதென யாரும் கருத வேண்டாம். உண்மையைச் சொல்வதென்ருல், பழைய திராவிடப் பண்பாடு எவ்வகையிலும் மதிப்புக் குறைந்த தன்று !

* திராவிடப் பண்பாட்டோடு ஆரியப் பண்பாடு ஒன்று சேர்ந்தமையால் தோன்றியதே இந்திய நாகரிகம்! திராவிடப் பண்பாண்டின் தாக்குறவிஞல் இந்திய நாகரிகம் செழுமையும் சிறப்புமுற்றது ; அகலமும் ஆழமும் அடைந்தது.

* அகமுகவுணர்வோ, புலங்கடந்த நுண்பொருள் ஆய்வுணர்வோ வாய்க்கப் பெருதவராகத் திராவிடர்கள் இருக்கலாம். ஆனுல், அவர்கள் கலேயுணர்வு மிக்க கலேஞர்கள் ; ஆடலிலும் பாடலிலும் அவர்கள் தன்னிகரற்றவர்கள்! கவின்மிகு கலேவடிவங்களேத் திட்டமிட்டு வகுப்பதிலும், வியத்தகு கோயில்களேக் கட்டுவதிலும் அவர்கள் கைதேர்ந்த கலேஞர்கள்! உணர்ச்சிச் செறிவும் படைப்புத்திறனும் வாய்ந்த திராவிடரின் கலேயுணர்வை, ஆரியரின் அப்பாலேத் தத்துவம் மணமபுரிந்ததஞல் பிறந்த மழலேச் செல்வமே இந்திய நாகரிகம்![1]

—இரவீந்திரநாத தாகூர்.

'எந்தையும் தாயும் மகிழ்ந்து குலாவி
இருந்ததும் இந்நாடே—அதன்
முந்தையர் ஆயிரம் ஆண்டுகள் வாழ்ந்து
முடிந்ததும் இந்நாடே—அவர்
சிந்தையில் ஆயிரம் எண்ணம் வளர்ந்து
சிறந்ததும் இந்நாடே!'

—சுப்பிரமணிய பாரதியார்.

---

1. விசுவ பாரதி, இதழ் 1, பக். 8.

# பெருங்கதை மாண்பு

**டாக்டர் சி. பாலசுப்பிரமணியன்,**
எம்.ஏ., எம்.லிட்., பிஎச்.டி.,
தமிழ்த்துறை,
சென்னைப் பல்கலைக்கழகம்.



---

9—9—1971-ஆம் நாள் வியாழக்கிழமை நடைபெற்ற தமிழ்த்துறை ஆசிரியர்-மாணவர் கருத்தரங்கில் படிக்கப்பெற்ற கட்டுரை.

முன்னுரை :

2.1 அகமும் புறமும் சங்க இலக்கியங்களின் உரிப்பொருள்களாக-உயிர்ப்பொருள்களாகத் துலங்குகின்றன. பாட்டும் தொகையும் இவ்விரு வாழ்க்கைப் பண்புகளையும் செறிவோடும் முறையோடும் விளக்கி நிற்பனவாம். சங்க காலத்தில் தோன்றிய பாடல்கள் தன்னுணர்வுப் பாடல்களாக இருக்க, சங்க காலத்தை அடுத்துத் தோன்றிய முதற்பெரும் தமிழ்க்காப்பியமாம் சிலப்பதிகாரம் ஒரு நெடுங்கதையினைக் கூறி விளக்கிச் செல்கின்றது. புலவன் மனத்தில் ஒரு குறிப்பிட்ட நேரத்தில் எழுந்த உணர்ச்சிகளின் வார்ப்புத் தன்னுணர்வுப் பாடல்களாக அமைய ஒரு கதைத் தலைவனை எடுத்துக்கொண்டு அவன் நாடும் பெயரும் கூறி அவன் வாழ்வில் நேர்ந்த இன்ப துன்ப நிகழ்ச்சிகளை எடுத்துக் கிளத்தும் முகத்தான் ஒரு புதிய இலக்கியவகை உருவாயிற்று. இவ்வாறு பழமையாகத் தமிழில் நிலவிவரும் ஒரு பேரிலக்கியம் காப்பியமாகும்.

2.2 சங்க காலத்தை அடுத்துத் தமிழ் மொழியில் வட நாட்டிலிருந்தும் தென்னாடு போந்த சமணர்களால் அற இலக்கியங்கள் இயற்றுவிக்கப் பெற்றன. கி.பி. 250 தொடங்கி கி.பி. 550 வரை அமைந்துள்ள காலப் பகுதி தமிழ் இலக்கிய வரலாற்றில் இருண்ட காலம் எனப்படும்.[1] சிம்மவிஷ்ணு தொடங்கிப் பின்வந்த பல்லவப் பெருவேந்தர்கள் ஆட்சித்திறனும் வென்றித் திறனும் வாய்ந்தவர்களாய் விளங்கினர். அவர்களிடம் கலைநோக்கும் இலக்கிய ஆர்வமும் இலக்கியங்களாய் ஒளிவிட்டன. எனவே, அவர்கள் காலத்திய சமயங்களின் ஊடாடலும் இலக்கியப் புதுமையும் கலை மேம்பாடும் காணத் தக்கனவாய் அமைந்தன. இதே நேரத்தில் வட நாட்டில் பல பெரும் பேரரசுகள் விளங்கா நின்றன. வட நாட்டில் உச்சயினி, கோசாம்பி முதலிய நகரங்கள் சிறப்புப் பெற்றிருந்தன. சங்க கால இலக்கியங்களில் பாடலிபுத்திரமும்[2] வாரணசியும்[3] குறிப்பிடப் பெற்றுள்ளன. குணாட்டியர் என்பவர் பிரகத் கதையைப் பைசாச மொழியில் எழுதினர். பிரகத் என்ற சொல்லுக்குப் பெரிய-பெருமை வாய்ந்த என்பது பொருளாகும். பைசாசமொழியில் இருந்த கதையைத்

---

1. திரு. வை. சதாசிவப் பண்டாரத்தார், தமிழ் இலக்கிய வரலாறு பாகம் 1.

2. 'வெண்கோட்டு யானை சோணை படியும், பொன்மலி பாடலி பெறீஇயரோ' குறுந். 75.

3. குறிஞ்சிக் கலி; 24 : 13.

துர்விநீதன் என்னும் கொங்கு நாட்டு மன்னன் வடமொழியில் ஆக்கினுன். இவ் வடமொழிக் காப்பியத்தைத் தழுவிப் பெருங்கதை தமிழில் இயற்றப்பெற்றிருக்க வேண்டும் என்று அறிஞர் கருதுவர்.[4] இதற்கு மாருகக் கொங்கு வேளிர் வட நாட்டில் வழங்கிய கதையை நேரிடையாகக் கேட்டுப் பெருங்கதை என்னும் தமிழ்க் காப்பியத்தை இயற்றியிருக்கலாம் என்பர் இலக்கிய ஆய்வாளர்.[5] வடநூலின் மொழிபெயர்ப்பாக அன்றி அக்காலத்தே சிறப்புற விளங்கிய ஒரு கதையினைத் தழுவி அமைக்கப்பட்ட நூலே பெருங்கதை ஆகும் என்பர்.[6]

2.3 வடமொழியில் எழுந்துள்ள பின் வரும் நூல்கள் உதயணன் கதையைத் தொடர்ந்து எழுதப்பட்டனவாய்த் தோன்றுகின்றன.

1. பிரகத் கதா சுலோக சங்கிரகம்; 2. பிரகத் கதா மஞ்சரி 3. பிரகத் கதா சரித்சாகரம்; 4. உதயோதய காவியம்; 5. ரத்னுவளி; 6. சுவப்ன வாசவதத்தா; 7. வாசவதத்தா; 8. பிரிய தர்சிகா; 9. பிரிதிஞ்ஞா யௌகந்தராயணம்; 10. மிருச்சகடிகா; 11. கருப்பூர மஞ்சரி; 12. காதம்பரி.

2.4 பெருங்கதையில் கூறப்படும் உதயணன் வரலாற்றைத் தமிழில் கொண்டெழுந்த நூல்கள் மூன்ரும். ஒன்று அகவல் யாப்பில் அமைந்த கொங்கு வேளிர் பெருங்கதை. இரண்டு, விருத்தப்பா யாப்பில் அமைந்த நடைத் திருத்தமில்லாத உதயணகுமார காவியம். மூன்று, வெண்பா யாப்பில் 900 பாக்களைக் கொண்ட வச்சத்தொள்ளாயிரம் என்னும் நூல்களாகும். இவற்றுள் இரண்டாவது தவிர ஏனைய இரண்டும் முழுமையாகக் கிடைக்காதது தமிழர் தவக்குறைவேயாம். வச்சத் தொள்ளாயிரத்தில் சில வெண்பாக்களே இப்போது கிடைக்கின்றன. உதயண குமார காவியம் டாக்டர் ஐயரவர்களால் 1935ஆம் ஆண்டு வெளியிடப்பெற்றது. இந் நூலின் முகவுரையில், டாக்டர் ஐயரவர்கள், "பெருங்கதையின் நடையை அறிந்துகொள்ள இயலாத ஒருவர் தம்மைப் போன்றவர் களுக்குப் பயன்படும் என்று கருதி அக் கதையைச் சுருக்கிச் செய்ததே இவ்வுதயண குமார காவியமாகும். இது காவியம்

4. டாக்டர் உ. வே. சாமிநாதய்யர், பெருங்கதை; முன்னுரை; பக். 8.

5. திரு. சி. எம். இராமச்சந்திரன் செட்டியார், கொங்குவேள்; பக். 25.

6. T. P. Meenakshisuudaram, History of Tamil Literature; p. 83.

என்னும் பெயரை உடையதாயினும் காப்பிய இலக்கணங்களை உடையதன்று. இந் நூலில் இலக்கண வழுக்கள் உள்ளன; சந்த நயமும் பொருட் பொலிவும் இல்லை; எனினும் இத்தகைய நூல்களும் இந் நாட்டில் உலவிவந்தன என்பதை அறியும் பொருட்டே இதனை வெளியிடலானேன்'' என்று குறிப்பிட்டுள்ளார்.

### பெருங்கதைச் சிறப்பு

2.5 உதயண குமார காவியத்தை இவ்வாறு குறிப்பிடும் டாக்டர் ஐயரவர்கள் அதே முன்னுரையில் பெருங்கதையைப் பற்றிக் குறிப்பிடுகின்ற பொழுது, ''தமிழ்க் காப்பியங்களுள்ளே சிறந்தனவாகிய ஐம்பெருங் காப்பியங்களும் பெருங்கதை, சூளாமணி முதலியனவும் பழந்தமிழ்ப் புலவர்களால் பொன்னேபோல் போற்றப்பட்டு வந்தன'' என்றும், பெருங்கதை இரண்டாம் பதிப்பின் முன்னுரையில் ''இந்நூல், (பெருங்கதை) சொற்சுவை பொருட்சுவைகளிற் சிறந்தது, தெள்ளிய இனிய நன்னடை வாய்ந்தது'' என்றும் குறிப்பிட்டுள்ளது நோக்கத் தக்கது.[7]

### பெருங்கதையின் கதைப் பழமை

2.6 பெருங்கதையின் கதை வடநாட்டிலும் தென்னாட்டிலும் நன்கு பரவியிருந்தது என்பதற்குச் சான்றுகள் காட்டலாம்; முதலாவதாக வடமொழிப் பெருங்கவிஞராம் காளிதாசர், ''மேகமே! உதயணனது சரிதையைக் கூறுவதில் ஆற்றல் வாய்ந்த முதியோர்களை உடையதான அவந்தி தேசத்தை அடைவாய்!''[8] என்று மேக சந்தேசத்திலும், சீத்தலைச்சாத்தனார்,

''கொடிக்கோ சம்பிக் கோமக னாகிய
வடித்தேர்த் தானை வத்தவன் றன்னை
வஞ்சஞ் செய்துழி வான்றளை விடீஇய
உஞ்சையிற் றோன்றிய யூகி அந்தணன்
உருவுக் கொவ்வா வுறுநோய் கண்டு
பரிவுறு மாக்களிற் றம்பரி வெய்தி''.

என்று மணிமேகலையிலும்,[9] வைணவ ஆழ்வாரான திருமங்கை ஆழ்வார் (தம் இயற்பா சிறிய திருமடலில்),

---

7. பெருங்கதை; முகவுரை; பக். 25.
8. மேகசந்தேசம்; சுலோகம். 30
9. மணிமேகலை; 15 : 61-66.

"வாரார் வனமுலை வாசவ தத்தையென்று,
ஆரானும் சொல்லப் படுவாள், அவளும்தன்
பேராயம் எல்லாம் ஒழியப் பெருந்தெருவே,
தாரார் தடந்தோள் தளைக்காலன் பின்போனாள்
ஊரார் இகழ்ந்திடப் பட்டாளே? மற்றெனக்கிங்கு
ஆரானும் கற்பிப்பார் நாயகரே?" [10]

என்று நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்திலும் பெருங்கதை நிகழ்ச்சிகள் குறிப்பிடப்பட்டுள்ளன.

### பெருங்கதையின் காலம்

2.7 கங்க குலத்து மன்னர்கள் சமண சமயத்தைப் பெரிதும் ஆதரித்தவர்கள். துர்விநீதன் என்னும் கங்ககுல மன்னன் கி. பி. 550லிருந்து கி. பி. 600 வரை ஆட்சி புரிந்தவன் ஆவன். [11] பெருங்கதை வடமொழியில் இவனால் இயற்றப்பெற்றுக் கொங்கு வேளால் தமிழ்க் காப்பியமாகத் தழுவி அமைக்கப்பட்டது என்று கொள்ளின் துர்விநீதன் காலத்திற்குப் பின்னால் பெருங்கதை எழுந்ததாதல் வேண்டும். பைசாச மொழியில் பிருகத் கதையை எழுதிய குணாட்டியர் வாழ்ந்த காலம் கி.பி. 2ஆம் நூற்றாண்டு என்பர். துர்விநீதன் வாழ்ந்த காலம் 6ஆம் நூற்றாண்டு என்று கொண்டால் அதற்குப் பின்னர்ப் பெருங்கதை தோன்றியதாதல் வேண்டும். திருக்குறள், [12] நாலடியார்க் [13] கருத்துகளும் தொடர்களும் இந் நூலின் சில இடங்களில் கையாளப்பெற்றுள்ளன. மேலும், பேராசிரியர் வையாபுரிப்பிள்ளையவர்கள், "நான் என்னும் தன்மை ஒருமைச் சொல் இந் நூலில் காணப்படுதலும், 'கின்று' என்னும் வினைவடிவும் 'ஏ' என்னும் விகுதி உயர்திணையிலும் வருவது கொண்டு இது பிற்காலத்தது" என்பர் [14]. எனவே, அவர் பெருங்கதை எழுந்த காலம் கி. பி. 8ஆம் நூற்றாண்டு என்பர். ஆயினும் அறிஞர் பலர் இந்நூல் 7ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்டதாதல் வேண்டும் என்று கருதுகின்றனர். [15]

---

10. நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம்; இயற்பா, சிறிய திருமடல், அடி 66-71.
11. Thiru M. V. Krishna Rao, The ganges of Talakad. P. 44.
12. பெருங்கதை : V, 7: 148-149-குறள் 783. 1, 35. 234-235 குறள் 969.
13. ,, 1, 35; 156-158 நாலடி 370.11, 7: 74-75 நாலடி. 384.
14. ,, 111, 27:116 History of Tamil Language and Literature P. 138.
15. திரு. இ. எஸ். வரதராச ஐயர், தமிழ் இலக்கிய வரலாறு; கி.பி. 1-1100 பக். 34.
திரு. கா. சுப்பிரமணியப் பிள்ளை, இலக்கிய வரலாறு, இரண்டாம் பகுதி; பக். 299.

2.8 மேலும், "னகரப் புள்ளியை இறுதியாகக் கொண்டு சொல்லும் பொருளும் இயைந்து வந்தன மணிமேகலையும் உதயணன் கதையும்" என்று உரையாசிரியர் குறிப்பிடுவதனுல் உரையாசிரியர் காலத்திற்கு முன்னரேயே இந் நூல் சிறப்புற்றோங்கியிருந்தது என்பது தெரியவரும். அடியார்க்குநல்லார்; தக்கயாகப் பரணி உரையாசிரியர், நச்சினுர்க்கினியர், பேராசிரியர், யாப்பருங்கல விருத்தி உரையாசிரியர், வீரசோழிய உரையாசிரியர், மயிலைநாதர், இலக்கண விளக்க உரையாசிரியர் முதலானோர் தம் உரையில் தக்க இடங்களில் பெருங்கதைப் பாடங்களை மேற்கோளாகக் காட்டிச் செல்கின்றனர்.

## நூலின் அமைப்பு

2.9 பெருங்கதைப் பாட்டுகளெல்லாம் நிலைமண்டில ஆசிரியப் பாக்கள். ஒரு காதையின் ஒவ்வொரு பாட்டும் 'என்' என்னும் ஈற்றில் முடிகின்றது. தொல்காப்பியனுர் குறிப்பிடும் வனப்பு எட்டனுள் இது இயைபு என்னும் வனப்பைச் சார்ந்ததாகும். சிலப்பதிகாரமும் மணிமேகலையும் பொருள் தொடர்ச்சி கதைத் தொடர்ச்சி மட்டுமே கொண்டிலங்கப் பெருங்கதையோவெனில் அந்தாதி எனப்பெறும் சொற்றொடர் நிலையும் கொண்டு விளங்குவதாகும். இந் நூலினை 'அகலக்கவி' என்று பின் வந்த உரையாசிரியர்கள் குறிப்பிட்டனர். இந் நூலின் சில சொற்களும் பொருள்களும் வீரசோழிய உரையாசிரியர் காலத்திலேயே வழக்கு வீழ்ந்தன.[16]

2.10 இந் நூலின் முதலும் முடிவும் கிடைக்கவில்லை. கிடைத்தவற்றிலும் சில பகுதிகள் முழுமையாகக் காணப்படவில்லை. ஆறு காண்டங்களில் ஐந்து காண்டங்களே கிடைத்துள்ளன. முதற் காண்டமான உஞ்சைக் காண்டம் ஐம்பத்தெட்டு (58) சிற்றுறுப்புகளையும், அடுத்த இலாவாண காண்டம் இருபது (20) சிற்றுறுப்புகளையும் மூன்ருவதான மகத காண்டம் இருபத்தேழு (27) சிற்றுறுப்புகளையும், நான்காவதான வத்தவ காண்டம் பதினேழு (17) சிற்றுறுப்புகளையும், ஐந்தாவதான நரவாண காண்டம் ஏழு (7) சிற்றுறுப்புகளையும் கொண்டுள்ளன. இவ் 129 சிற்றுறுப்புகளில் 100 சிற்றுறுப்புகளே இன்று கிடைக்கின்றன. கிடைத்த அகவல்களில் சிற்றெல்லை 35 அடியாகவும் பேரெல்லை 320 அடிகளாகவும் காணப்படுகின்றன. 6வது காண்டமாகத் துறவுக் காண்டம் ஒன்று இருந்து மறைந்திருக்கலாம் என்று கொள்ளப்படுகின்றது.

---

16. அகலக்கவி செய்வாருக்கு அப்படி அல்லது ஆகாது—வீரசோழிய உரையாசிரியர்.

## 2

### பாத்திரப் படைப்பு

2.11 சிறந்த காப்பியம் நல்ல கதையினையும் உயர்ந்த பாத்திரப் படைப்பினையும் பல சுவையான நிகழ்ச்சிகளையும் கொண்டிருக்க வேண்டும் என்பர்.[17] பெருங்கதை, அந் நூலின் பெயருக்கு ஏற்பவே பிற காப்பியங்களைக் காட்டிலும் நிறைந்த அளவு பாத்திரங்களைக் கொண்டுள்ளது. பெருங்கதையில் வரும் பாத்திரங்கள் மொத்தம் 108 பேர் ஆவர். அவர்களுள் ஆடவர் 80 பேர்; 28 பேர் மகளிர். 108 என்கின்ற எண்ணிக்கை நம் நினைவாற்றலுக்குச் சோதனை வைத்தாலும் பாத்திரப் படைப்புகள் ஒவ்வொரு வகையில் சிறப்புற அமைந்திருக்கக் காணலாம். சில இன்றியமையாத பாத்திரப் படைப்பினை ஈண்டுக் காண்போம்.

### *1.* உதயணன்

2.12 பெருங்கதையின் தலைமகனுவன் இவன்; குருகுல மரபில் பிறந்தவன்; வத்தவ நாட்டுக் கோசாம்பி நகரில் சதா நிகனனுக்கும் மிருகாபதிக்கும் தோன்றியவன். உதயகாலத்தில் பிறந்தவனுதலின் இவன் உதயணன் எனப்பட்டான். ஒரு தலை மகனுக்குரிய பிறப்பு, கல்வி, ஆண்மை, வனப்பு முதலிய பண்புகள் சிறக்க வாய்க்கப் பெற்றவன் என்பதனை,

விச்சையும் வனப்பும் விழுக்குடிப் பிறப்பும்
ஒத்தொருங் கமைந்த உதயண குமரன் [18]

எனவும்,

இளமையும் வனப்பும் இல்லொடு வரவும்
வளமையும் தறுகணும் வரம்பில் கல்வியும்
தேசத் தமைதியு மாசில் சூழ்ச்சியொடு
எண்வகை நிறைந்த நன்மகன் [19]

எனவும் இவன் அழைக்கப் பெறுவது கண்டு அறியலாம்.

2.13 யானையின் இலக்கணத்தை நன்கறிந்து யானையைத் தன்வயப்படுத்தும் தகுதி சான்றவன். பகைவரும் மதித்துப்

17. டாக்டர் தா. ஏ. ஞானமூர்த்தி, ஆய்வுக் கோவை: பக். 300.
18. பெருங்கதை: 1 : 35 : 159-60.
19. ,, 1 : 36 : 118-19.

பாராட்டும் பண்பினன். படை மறவன் என்பது பிரச்சோதனன் உச்சயினி நகரில் குஞ்சரச்சேரியில் இவனை விருந்தினனாக ஏற்று வழங்கிய மதிப்பாலேயே அறியலாம். இவன் யாழ் மரபு நன்குணர்ந் தவன். ஓவியக்கலையிலும் வல்லவன். அனைத்தினும் மேலாக நன்றிமறவா நற்பண்பும் எளிய உயிர்க்கும் இரங்கியருளும் தன்மை யும் இவனுடைய சிறப்புப் பண்புகளாகும். தன் அமைச்சர் களுக்கும் மற்றோர்க்கும் இவன் அளித்த தண்ணடையும் பிற கொடைகளும் தன்னையும் வாசவதத்தையையும் சுமந்துவந்த பிடி இறக்க, பஞ்சமந்திரத்தை ஓதி அப் பிடிக்குச் செய்யவேண்டிய இறுதிக் கடன்களை ஆற்றியமையும், இவன்றன் நன்றிமறவாத் தன்மைக்குச் சான்றுகளாம்.

2.14 அறப்போரிலும் மறப்போரிலும் பேராற்றல் சான்ற இவன் காதற் களப்போரிலும் வல்லவன் என்பதனைப் பேரழகும், பெருங்குணமும் வாய்ந்த பெண்கள் நால்வரை மணம் புரிந்ததி னின்றும் அறியலாம்.

யூகி

2.15 உதயணனின் இளமைத் தோழனும், பார்ப்பன மகனும், போர்ப்பயிற்சியும் சூழ்ச்சித் திறனும் கலைபயில் தெளிவும் கட்டுரை வன்மையும் கொண்டவன் இவன் என்பதைப் பெருங்கதை கொண்டு தெளியலாம். நண்பன் உற்ற துயரை முன்சென்று போக்கலும், "கெட்டகாலை விட்டனர் என்னாது நட்போர் என்பது நாட்டினை"[20] என்று உதயணனால் மனந்திறந்து பாராட்டப்பெற்றவன். மதிநலம் நன்கு வாய்க்கப்பெற்ற யூகி,

"பெருவிறற் றோழன் இடனறி சூழ்ச்சி யூகி"[21]

என்றும், "அரும் பெறல் சூழ்ச்சியன் ஒழுக்கில் திரியா யூகி"[22] என்றும் பாராட்டப்பெற்றவன். சுருங்கக்கூறின் இவனை, 'நட்புக் கோர் இலக்கணம்' என நவிலலாம். இவன் சந்திரகுப்த மன்னனின் மதியமைச்சன் சாணக்கியனினும் மேம்பட்டவனாகப் பெருங் கதையில் தீட்டப்பட்டுள்ளான் என்பர்.[23]

20. பெருங்கதை: 2 : 9 : 118-19.
21. ,, 2 : 10 : 172.
22. ,, 1 : 54 : 93.
23. Prof. T. P. Meenakshisundaram; A History of Tamil Literature; P. 85.

### உருமண்ணுவா

2.16 உதயணனின் உயிர்த்தோழன் ; பல்வகைப் பெருமையும் பாங்குறப் பெற்றவன். யூகிக்கு அடுத்த நிலையிலிருக்குமிவன் மாற்ருரைத் தோற்ருேடச் செய்வதில் வல்லவன் ; மிக்க புகழினன். உதயணனுல் ஏனுதி மோதிரமும் சேனுதிபதிப்பட்டமும் பெற்றவன். எச்சமயத்திலும் மனநடுக்கங்கொள்ளாத உளவலிவும், திண்மையும் ஆண்மையும் வாய்க்கப்பெற்ற பெருவீரன். நட்பு, ஊக்கம், வீரம், பகைவர்க்கு அஞ்சாமை முதலிய குணங்கள் கொண்ட கொள்கைச் செம்மல்.

"ஓங்கிய பெரும்புகழ் உருமண்ணுவா "[24]

என்றும்,

"ஒட்டிய நண்பின் உருமண்ணுவா "[25]

என்றும் பாராட்டப்பெற்றவன்.

### வயந்தகன்

2.17 உதயணனின் அமைச்சர்களுள் ஒருவன்; குலத்தில் அந்தணன் ; வில் வித்தையில் வல்லவன்; குறிப்பறிந்து செயலாற்றுபவன். பகைவன் விடுத்த யானையைத் தன் யானையாக நினைத்துச்சென்ற உதயணனுக்கு அறிவுரை புகன்ற அறிவுச் செம்மல். வானநூலில் வல்லவன். நலந்தரும் நகரங்கள் பதினைன்றும், நாடோறும் ஆயிரம் பொன்னும் இவன் பெற்றமையே இவன் பெருமையும் புகழும் நன்கு கூறுவனவாம்.

### வாசவதத்தை

2.18 பெருங்கதையின் மகளிர் பாத்திரங்களில் நம் நெஞ்சில் முதலாவதாக இடம் பெறுவது வாசவதத்தை பாத்திரமாகும். உச்சயினி வேந்தன் பிரச்சோதனன் தேவியருள் பதுமகாரிகை பெற்றெடுத்த திருச்செல்வி இவள். இந்திரன் அருளால் தோன்றினமையின் இவள் இப் பெயர் பெற்ருள். பெண்மை நலமெல்லாம் இவள் வாய்க்கப் பெற்றவள் என்பதனை,

---

24. பெருங்கதை : 1 : 54 : 47.
25. „ 3 : 23 : 2

தெய்வத் தாமரைத் திருமகட் கெடுத்தோர்
ஐயப் படுஉ மணியிற் கேற்ப
ஒண்மையும் நிறையும் ஓங்கிய ஒளியும்
பெண்மையும் பெருமையும் பிறவும் உடைமையிற்
பாசிழை யாயத்துப் பையென நின்ற
வாசவ தத்தை [26]

எனவரும் பகுதியால் அறியலாம்.

2.19 யாழிசையை உதயணன்பால் கற்றுத் தேர்ந்த இவள் கலை நுணுக்கம் வாய்ந்தவள். தன்பால் கொண்ட அளவுக்கு மீறிய காமத்தால் அரசகருமங்களைக் கவனிக்கவில்லை என்றும் சின்னாள்களுக்கு இவள் உதயணனை விடுத்துக் கரந்துறைய வேண்டும் என்றும் யூகி கூறிய அளவில், அத் திட்டம் தன் கணவனின் புகழ் மாண்புக்கும் நாட்டு நலனுக்கும் உகந்தது என்று கருதித் தன் இன்பத்தைத் துறந்து ஏற்றுக்கொண்டாள். இவள் பிரிவாற்ருமையால் உதயணன் உயிர் துறக்கவும் ஒருப்பட்டான் என்ருல், இவள்பால் அவன் கொண்ட காதலின் திண்மை ஒருவாறு காணலாம். இவளுடைய அழகுச் செவ்வியைப் பின்வரும் பகுதியால் காணலாம்.

யாற்றற லன்ன கூந்தல்; யாற்றுச்
சுழியெனக் கிடந்த குழிநவில் கொப்பூழ்;
வில்லெனக் கிடந்த புருவம்; வில்லின்
அம்பெனக் கிடந்த செழுங்கடை மழைக்கண்;
பிறையெனச் சுடருஞ் சிறுநுதல்; பிறையின்
நிறையெனத் தோன்றுங் கரையில் வாண்முகம்;
அரவென நுடங்கும் மருங்குல்; அரவின்
பையெனக் கிடந்த வைதேங் தல்குல்;
கிளியென மிழற்றுங் கிளவி; கிளியின்
ஒளிபெறு வாயி னன்ன ஒள்ளுகிர்;
வாழையந் தாளுறழ் குறங்கின் வாழைக்
கூம்புமுகி ழன்ன வீங்கிள வனமுலை;
வேயெனத் திரண்ட மென்ருேள்; வேயின்
விளங்குமுத் தன்ன துளங்கொளி முறுவல்;
காந்தண்முகி ழன்ன மெல்விரல்; காந்தள்
பூந்துடுப் பன்ன புனைவளை முன்கை;
அன்னத் தன்ன மென்னடை; அன்னத்துப்
புணர்வின் அன்ன தண்டாக் காதல்

26. பெருங்கதை: 1 . 34 : 149-154.

அணிக்கவின் கொண்ட அதிநா கரிகத்து
வனப்புவீற் றிருந்த வாசவ தத்தை.[27]

என்னும் அழகு கொஞ்சும் இவ் வடிகள் வாசவதத்தையின் எழிலை எடுத்தியம்புகின்றன.

2.20 வாசவதத்தை தன் கணவன் பிற மகளிர்பால் மனம் செலுத்தலை விரும்பவில்லை. கணவன்மாட்டு இத் தவறு கண்ட போதெல்லாம் சீறியும் சினந்தும் நிற்கிருள். பதுமாவதி, மானனீகை, விரிசிகை ஆகிய மூவர் திருமணத்திற்கும் இவள் முதலில் மறுப்பே தெரிவிக்கின்ருள்.

*பதுமாவதி*

2.21 உதயணன் மகத மன்னன் தருசகனுடைய தாயின் சகோதரி மகளும், காசிராசனின் புதல்வியுமாவள். இராசகிரி நகரத்தில் ஏழுநாள் நடைபெற்ற காமன் விழாவில் இவள் உதயணனைக் கண்டாள். கண்கள் கலந்த பான்மையில் காதல் அரும்பிற்று. அது கன்னிமாடத்தில் உதயணனைப் பிறரறியாமல் கரந்துறையச் செய்தது. தருசகனேடு போரிட வந்த பகைவரை உதயணன் வென்று துரத்தியதால் பதுமை அவனுக்குத் திருமணத்தில் தரப் பட்டாள். பதுமாவதி அரும்பண்புகள் வாய்ந்தவள். உதயணனின் பட்டத்துத் தேவியாகிய வாசவதத்தையிடம் பெருமதிப்பும், அன்பும் பூண்டவள். ஒருமுறை வாசவதத்தை போல் தானும் யாழ்ப்பயிற்சி பெற விழைவதாகப் பதுமாவதி உதயணனிடம் கூற அதுபோது, உதயணன் அமைதியுடனிருக்க அவனேடு புலத்தல் கூடாது என்று பதுமாவதி வாளா இருக்கின்ருள். இஃது அவளுடைய பெரும் பண்பினைப் புலப்படுத்தும். வாசவதத்தையை முதலில் கண்ட பொழுது பதுமாவதி அவளை வணங்கினுள். பின் உதயணனிடம்,

"பெருந்தகு கற்பின்எம் பெருமகன் தன்னெடு
பிரிந்த திங்கள் எல்லாம் பிரியாது
ஒருங்கவண் உறைதல் வேண்டுவல் அடிகள்"[28]

என்றவிடத்து அவளுடைய மனப்பண்பினைக் காணலாம். பதுமா வதியின் பாதாதிகேச வருணனை வாசவதத்தையின் அழகுச் செவ்விக்கு இவள் சற்றேனும் குறைந்தவள் அல்லள் என்பதனைக்

27. பெருங்கதை: 4 : 11 : 64-83.
28- „ 4 : 8 : 92-94.

காட்டும். மானனீகையைப் பற்றி அவளுடைய தலைமயிரை அரிய வேண்டும் என்று வாசவதத்தை முடிவு செய்தபோது அதனின்றும் உதயணன் வேண்டுகோட்படி மானனீகையைக் காப்பாற்றுகின்றாள். அதுபோது வாசவதத்தையிடம் பதுமாவதி,

"சிறி யருளுதல் சிறுமை யுடைத்திது
விறுயர் மடந்தாய் வேண்டா செய்தனை
அன்புடைக் கணவர் அழிதகச் செயினும்
பெண்பிறந் தோர்க்குப் பொறையே பெருமை" [30]

என்று கூறும் இவள் தம் அறிவுரை இவளுடைய குணநலத்தைக் காட்டும்.

*மானனீகை*

2.22 கோசல அரசனுடைய மகளாகிய மானனீகை பாஞ்சால அரசனால் சிறைபிடிக்கப்பட்டுப் பாஞ்சால நாடு அழைத்துச் செல்லப்பட்டு, அங்குப் பட்டத்துத் தேவியின் பணிப் பெண்ணாக அமைகிறாள். பாஞ்சாலனைப் போரிற் கொன்று உதயணன் மானனீகையைக் கைப்பற்றித் தன்னாட்டிற்கு அழைத்து வந்து வாசவதத்தையின் தலைமைப் பணிப்பெண்ணாக அமர்த்தினான். இவள் பந்தாடுதலில் வல்லவள். யவன மொழியில் தேர்ச்சியும், சிற்பக் கலையில் தேர்ந்த அறிவும் வாய்ந்தவள்.

2.23 இவை தவிர இன்னும் பாத்திரங்கள் பல பெருங்கதைக் காப்பியத்தில் இடம் பெற்றாலும் நம் நெஞ்சில் இங்குக் குறிக்கப் பெற்ற பாத்திரங்கள் சிறப்பாக நிற்கின்றார்கள் எனலாம்.

## வருணனைத் திறம்

2.24 மகத நாட்டை வருணிக்க வந்த கவிஞர் ஒரு நாட்டின் சிறந்த இலக்கணங்கள் அனைத்தையும் அந் நாட்டு வருணனையில் பெய்து காட்டியுள்ளார் என்பதனைப் பின்வரும் பகுதியால் தெளியலாம்.

---

29. பெருங்கதை: 3 : 5 : 10-28.
30. „ 4 : 14 : 96-99.

(1) நாட்டு வருணனை

சிறந்த சீர்த்திக் குறிஞ்சி கோலிக்
கல்லென் சும்மையொடு கார்தலை மணந்த
முல்லை முதுதிணைச் செல்வ மெய்திப்
பாலையு நெய்தலும் வேலி யாகக்
கோல மெய்திக் குறையா வுணவொடு
துறக்கம் புரியுந் தொல்லையி னியன்றது
பிறப்பற முயலும் பெரியோர் பிறந்தது
சிறப்பிடை யறுத தேசிக முடையது
மறப்பெருந் தகையது மாற்றோ ரில்லது
விறற்புக முடையது வீரிய மமைந்த
துலகிற் கெல்லாந் திலகம் போல்வ
தலகை வேந்த ருணை சேட்ப
தரம்பு மல்லலுங் கரம்பு மில்லது
செல்வப் பெருங்குடி சிறந்தணி பெற்றது
நல்குர வாளரை நாடினு மில்லது
நன்பெரும் புலவர் பண்புளி பன்னிய
புகழ்ச்சி முற்று மகிழ்ச்சியின் மலிந்த
தின்னவை பிறவு மெண்ணுவரம் பிகந்த
மன்பெருஞ் சிறப்பின் மகத நன்னாடு[31]

என்று நாட்டின் வளப்பமும்,

(2) ஊர் வருணனை

யாறுங் குளனும் வாய்மணந் தோடித்
தண்டலை தோறுந் தலைபரந் தூட்டி
வண்டிமிர் பொய்கையும் வாவியுங் கயமும்
கேணியுங் கிணறு நீணிலைப் படுவம்
நறுமலர் கஞலி யுறநிமிர்ந் தொழுகிச்
சாலி கவினிய கோலச் செறுவிற்
செல்வங் கொடுத்து நல்குத லறாஅ
இன்பங் கெழீஇய மன்பெருஞ் சிறப்பிற்
பல்குடித் தொல்லூர் புல்லுபு சூழ[32]

என்று ஊர்களின் வளமும் கிளத்தப்பட்டுள்ளன.

மகளிரின் அழகு நலப் புனைவு முன்னரே கண்டோம். இதனால் கொங்குவேள் வருணனைத் திறத்தில் வல்லவர் என்பதனை நன்குணரலாம்.

---

31. பெருங்கதை : 3 : 2 : 36-54.
32. „ 3 : 3 : 1-11.

### (3) மாலைக்கால வருணனை

2.25 ஆடவர்க்குப் போர் கருதியாதல் பொருளீட்டல் கருதியாதல் தம் காதலியைப் பிரிந்து போதல் கடமையாகும். மனைமாட்சி நிறைந்த கற்புடை மகளிர் அப் பொறுக்கலாற்ருப் பிரிவுத்துயரைப் பொறுத்து ஒழுகுதலே கடமை யாகும். அவ்வாறு பிரிந்து சென்ற தலைவர் நம் துயரைத் துடைக்க மீண்டும் திரும்பி வருங்காலம் இம் மாலைக்காலமே யாகும் என்று நினைவூட்டுவனவேபோல் மனைப் படப்பை வேலியிற் படர்ந்து செல்லும் முல்லையின் வெள்ளிய அரும்புகள் மலர்ந்து காட்டின.

ஆண்கட னகற லதுநோன் ஞெழுகுதல்
மாண்பொடு புணர்ந்த மாசறு திருநுதற்
கற்புடை மகளிர் கடனெனக் காட்டி
வினைக்கும் பொருட்கு நினைத்துநீத் துறையுநர்
எல்லை கருதிய திதுவென மெல்லியற்
பணைத்தோண் மகளிர்க்குப் பயிர்வன போல
மனைப்பூங் காவின் மருங்கிற் கவினிய
பைந்தார் முல்லை வெண்போது நெகிழ.[33]

2.26 வடநாட்டு முல்லையைப் பாடினும் தமிழ்நாட்டுப் பண்போடு, தற்குறிப்பெற்ற அணியும் விளங்கப் பாடும் கொங்கு வேளிர் தமிழ்ப் பண்பு போற்றும் திறமும் கவிதை நலமும் சிறக்கப் பாராட்டத் தக்கனவாகும்.

### (4) போர்க்கள வருணனை

2.27 பெருங்கதையில் போர்கள் பல நடைபெறுகின்றன. உஞ்சை, மகத, வத்தவ, பாஞ்சால நாட்டு மன்னரிடையே ஒற்றுமை நிலவாத காரணத்தால் பகைமை காரணமாகப் போர்கள் மூண்டன. ஆருணி வீரர்கள் அழிக்கப்பட்டுப் பாஞ்சால மன்னன் உதயணனுல் கொல்லப்பட்ட போரின் வருணனை பின்வருமாறு அமைந்துள்ளது:

சிலைத்தன தூசி மலைத்தன யானை
ஆர்த்தனர் மறவர் தூர்த்தனர் பல்கணை
விலங்கின ஒள்வாள் இலங்கின குந்தம்
விட்டன தோமரம் பட்டன பாய்மாத்
துணிந்தன தடக்கை குனிந்தன குஞ்சரம்
அற்றன பைந்தலை இற்றன பல்கொடி
சோர்ந்தன பல்குடர் வார்ந்தன குருதி

33. பெருங்கதை: 3:7:7-14.

குழிந்தது போர்க்களம் எழுந்தது செந்துகள்
அழிந்தன பூழி விழுந்தனர் மேலோர்.[34]

யானை, குதிரை, மறவர் முதலியோர் பொருத நிலையும், அதன் விளைவுகளும் எழுது சித்திரமெனச் சொல்லோவியந் தீட்டிக் காட்டுகிறார் ஆசிரியர்.

### உவமை நயங்கள்

2.28 அறிந்த பொருளைக்கொண்டு அறியாத பொருளை விளக்குவது உவமை எனலாம். பெருங்கதையில் சிறந்த உவமைகள் கொங்கு வேளிராற் கையாளப்பெற்றுள்ளன.

யானை, பாகர்களைக்கொன்றுவிட்டு ஊருக்குள் ஓடியது. அவ்வூர் மக்கள் நடுங்கிப் பின்வாங்கி ஓடினர். அச் செய்தியைக் கேள்வியுற்ற மன்னன் கப்பல் கவிழ்ந்த மீகாமன் போலக் கலங்கினான் என்று குறிப்பிட்டுள்ளார்.

நாவாய் கவிழ்ந்த நாய்கன் போல
ஓவா அவலமொடு காவலன் கலங்கி[35]

என்பது உவமத் தொடராகும்.

2.29 தென்கடலிலே போடப்பட்ட அழகிய மணிபதித்த சிறந்த முளையொன்று வடகடலிலே மிதந்து கொண்டிருக்கும் நுகத்தடியினது ஒரு துளையிலே சென்று கோத்தாற் போல உதயணனும் வாசவதத்தையும் ஒருவரையொருவர் நோக்கி அன்பு மீதூர நின்றனர் என்பதை,

"தென்கட லிட்டதோர் திருமணி வான்கழி
வடகட னுகத்துளை வந்துபட் டாஅங்கு[36]

என்று கூறும் உவமையின் அழகும் எண்ணுதற்குரியதாகும். இறையனார் களவியல் உரைகாரரும்[37] சிந்தாமணியாசிரியரும்[38] இவ்வுவமையைக் கையாண்டுள்ளனர்.

---

34. பெருங்கதை: 3 : 27 : 107-116.
35. ,, 2 : 9 : 46-47.
36. ,, 1 : 32 : 17-19.
37. "வடகடலிட்ட ஒருநுகத்தின் ஒருதுளையில் தென்கடலிட்ட ஒருகழி சென்று கோத்தாற் போல"—இறை. சூ. 2 உரை.
38. "பரவை வெண்டிரை வடகடற்படு நுகத்துளையுட்
டிரைசெய் தென்கட விட்டதோர் நோன்கழி சிவணி
அரச அத்துனை யகவயிற் செறிந்தென" —சீவகசிந்தாமணி; 2749.

### எண்வகைச் சுவைகள்

2.30 இலக்கியங்களுக்கு அழகும் நயனும் கூட்டிப் பெருஞ் சிறப்பளிப்பன சுவைகளாகும். இலக்கியத்திற்கு இனிமை சேர்க்கும் சுவைகள் எட்டு என்பர்.

நகையே அழுகை இளிவரல் மருட்கை
அச்சம் பெருமிதம் வெகுளி உவகையென்று
அப்பால் எட்டே மெய்ப்பா டென்ப [39]

என்பது தொல்காப்பியனார் கூற்றாகும்.

இவ் எண்வகைச் சுவைகளும் பெருங்கதையினுள் வந்துள்ள பான்மையினை இனிக் காண்போம்.

### நகைச்சுவை

2.31 உதயணன் தேவியராம் வாசவத்தை, பதுமாவதி இருவரும் தம் தோழிமாரோடு ஆடிய பந்தாட்டத்தினை உதயணன் கண்ணுற்றான். மானனீகை என்னுந் தோழி விறல்பட ஆடிய ஆட்டம் அவன் நெஞ்சைப் பெரிதும் கவர்ந்தது. அவள் அழகும் அவன் மனத்தை அலைக்கழித்தது. எனவே, அவள் காதலைப் பெறத் திட்டமிட்டான். வாசவதத்தையின் திருமுகத்தினை ஒப்பனை செய்வான் போன்று அவள் முகத்தில் யவன மொழியில் தன் மனக் காதலை மடை திறந்தாற் போன்று திறந்துகாட்டி மானனீகைக்கு ஒரு காதற் கடிதம் குறிப்புப் பொருள் அமைய எழுதிவிடுத்தான். மானனீகையும் உதயணன் முடங்கலுக்கு மறுமொழியாக ஒரு கடிதம் வரைகின்றாள். அக் கடிதத்தில் தன்னை மறப்பது பெருமகனாகிய உதயணனுக்குக் கடன் என எழுதினாள். உதயணன் காதலை வேண்டித் தவிக்கவே இறுதியில் உடன்பட்டுத் தமிழ் முறைப்படி இரவுக் குறியிடம் குறிக்கின்றாள். இதனை ஒற்றியறிந்த காஞ்சன மாலையென்னும் வாசவத்தையின் தோழி, நிகழ்ந்தவற்றை அஞ்சாது வாசவதத்தைக்கு எடுத்துரைக்கின்றாள். வாசவதத்தை மானனீகையைச்சிறைப்படுத்திவிட்டு, மானனீகை உதயணனுக்குக்குறிப் பிட்ட இரவுக் குறியிடம் சென்று உதயணன் வரவை எதிர்நோக்கி யுள்ளாள். உதயணன் அவண் போந்து ஒருசார் ஒதுங்கி நின்ற வாசவதத்தையை மானனீகையாக மதித்துத் தன் கையை அவள் தோள்களில் வைத்தான். உடனே வாசவதத்தை அவன் கையைத்

39. தொல் : மெய்ப்பாட்டியல் : 3.

தள்ளினுள். மானனீகை தன்னேடு ஊடினுள் என்று நினைத்த உதயணன்,

முரசுமுழங்கு தானை அரசொடு வேண்டினும்
தருகுவல் இன்னே பருவரல் ஒழியினி
மானே! தேனே! மான னீகாய்![40]

என்று மொழிந்து அவள் காலைப் பற்ற முனைந்தான். மேலும், காலைப் பெயர்த்து ஊடினள் போல நின்றுள் வாசவதத்தை. மேலும், வாசவ தத்தை ஊடலை நீட்டிக்கவே, அவள் காலில் விழுந்து மீண்டும் மீண்டும் வணங்கினுன். உடனே வாசவதத்தை கொல்லென நகைத்து,

....................மிக்கோய் கூறிய
மானுந் தேனு மான னீகையும்
யானன் றென்பெயர் வாசவ தத்தைகாண்.[41]

என்று சொன்ன அளவில் உதயணன் மருண்டோடி மண்டபத்தினுள் மறைந்தனன்.

இக் காட்சியினை உன்னுந்தொறும் நகைச்சுவை கொப்பளிப் பதனைக் காணலாம்.

*அவலச் சுவை*

2.32 உஞ்சைக் காண்டத்தில் உழைச்சன விலாவணை, உரிமை விலாவணை ஆகிய காதைகளும், இலாவாண காண்டத்தில் யூகிக்கு விலாவித்தது, தேவிக்கு விலாவித்தது ஆகிய காதைகளும் நெஞ்சைப் பிழியும் அவலச் சுவைக்கு எடுத்துக்காட்டுகளாம்.

யூகி என்ற மதி அமைச்சன் இறந்து பட்டான் என்று கேள்வி யுற்ற காப்பியத்தின் தலைமக்களாகிய உதயணனும் வாசவதத்தையும் பின்வருமாறு பெருந்துயருற்றனர்:

மாழாந்து உயிர்வாழ்வு ஒழிகெனச்
சிதர்பொறி எந்திரம் போலச் சிதர்ந்து
தாரும் பூணும் மார்பிடைத் துயல்வரச்
சோருங் கண்ணினன் துளங்கிமெய்ம் மறப்ப[42]

இடியே றுண்ட நாகம் போல வருந்தினர்.

40. பெருங்கதை: 4 : 13 : 227-229.
41. ,, 4 : 13 : 248-250.
42. ,, 2 : 10 : 109-112.

### 3. இளிவரற் சுவை

2.33 உதயணன் மாறுவேடத்தில் இராசகிரிய நகரஞ் சென்றான். காமன் கோட்டத்திற்கு வழிபாடாற்ற மன்னனின் தங்கை பதுமாவதி சிவிகையிற் சென்றனள். வழிநெடுகிலும் மக்கள் மொய்த்துநின்று இக் காட்சியைக் கண்டனர். உதயணனும் அத்தகு ஆர்வத்திற்குரிய அரசகுமாரியைப் பார்க்க அடங்கா ஆர்வங் கொண்டு கூட்டத்தினை ஊடறுத்துச் சென்றான். அதுபொழுது ஆண்டிருந்த காவலர் அவனைக் கடிந்து தடுத்தனர். இந் நிலை தனக்கு எய்தியதனை நினைந்துநினைந்து உதயணன் பின்வருமாறு வருந்தினன் :

.................நெஞ்சுநிறை துயரமொடு
நீக்கச் சென்றனென் நெருநல் ; இன்றிவண்
நீக்கப் பட்டனென் ஆதலின் நிலையா
ஆக்கமுங் கேடும் யாக்கை சார்வா
ஆழிக் காலிற் கீழ்மேல் வருதல்
வாய்மை. [43]

### 4. மருட்கைச் சுவை

2.34 இறந்தவரை எழுப்பித் தரும் முனிவர் ஒருவர் இராசகிரி மலைச்சாரலில் உளர் என அமைச்சர்கள் உதயணனிடம் வியப்போடு கூறுகின்றனர்.

இருநிலம் புகுதலும் ஒருவிசும் பிவர்தலும்
வருதிரை நெடுங்கடல் வாய்க்கொண் டுமிழ்தலும்
மந்தரம் ஏந்தலும் என்றிவை பிறவும்
பண்டியல் விச்சை பயிற்றிய மாக்களைக்
கண்டும் அறிதும் கண்கூ டாகச்
செத்தோர்ப் புணர்க்கும் விச்சையொடு புணர்ந்தோர்க்
கேட்டும் அறியலம். [44]

முனிவரின் செயல்கள் வியப்பு எல்லையைத் தொட்டு நிற்கின்றன.

### 5. அச்சச் சுவை

2.35 யூகியின் சூழ்ச்சியால் பிரச்சோதனன் ஆளும் உச்சயினி நகரம் எரியூட்டப் பெறுகின்றது.

---

43. பெருங்கதை : 3 : 6 : 31-36.
44. ,, 3 : 4 : 86-92.

அண்மையில் மக்களை ஈன்ற இளநங்கையர் தாம் ஈன்ற குழவிகளைத் தழுவிக்கொண்டு உள்ளத்தின் அழிவைப் புலப்படுத்திக் கண்களில் கண்ணீர் சுரந்து பாய, சூறைக்காற்றால் தாக்கப்பட்ட வாழை மரங்கள் போன்று நிலைகலங்கி, "இனி, யாம் இத் துன்பத்தைத் தாங்கும் ஆற்றல் பெற்றிலோம்" என அலமந்தனர். மலர்கொண்டு ஒப்பனை செய்தாலும் அம் மலரினைத் தாங்கும் ஆற்றல் அற்றவர்களும், பூந்துகள் நிறைந்த தாழ்ந்த கரிய கூந்தலையுடையவரும், முதிர்ந்த துகிலினையுடையோரும் ஆகிய மகளிர்கள் தங்கள் கரிய மையுண்ட கண்கள் கலக்கமெய்திச் சுழல, எரிக் கொடுமை தாங்கமாட்டாதவராய்த் தம்மைப் பாதுகாக்குமாறு தம் எதிர் வருவோரை வணங்கி நின்றனர். மேகலையணிந்த தாயர் சிலர் தரையில் தவழாநின்ற தம் இளங்குழவியை எடுத்து இடுப்பில் வைத்து ஒரு கையால் அணைத்துக்கொண்டு, அவிழ்ந்து நெகிழா நின்ற தம் சேலையை மற்றோர் கையாற் பற்றிக்கொண்டு, ஒளிருகின்ற மலர்மாலையோடே சரிந்து வீழும் தம் கூந்தலைத் தாங்கிக்கொள்வ தற்குப் பிறிதொரு கை இன்மையாலே படைப்புக் கடவுளைப் பழித்து நின்று, "தீக்கடவுளே! எளியேம் இறந்துபடுவோம்! எம்மைப் பாதுகாத்தருள்க!" என்று கூறித் தம் மனைக்குப் பக்கத்தேயுள்ள பொய்கையினுள் புகுவாராயினர்.

ஈற்றுப் பெண்டிர் இளமகத் தழீஇ
ஊற்றுநீர் அரும்பிய உள்ளழி நோக்கினர்
காற்றெறி வாழையிற் கலங்கிமெய்ந் நடுங்கி
ஆற்றேம் யாமென்று அலறினர் ஒருசார்;
போதுகொண் டணியிற் பொறுக்க லாற்றாத்
தாதுகொண் டிருந்த தாழிருங் கூந்தலர்
கருங்கேழ் உண்கண் கலக்கமொ டலமரப்
பெருஞ்சூற் பெண்டிர் பேரழல் நோக்கி
வருவோர்க் கண்டு வணங்கினர் ஒருசார்;
தவழும் புதல்வரை ஒருகையாற் றழீஇப்
பவழம் சேர்ந்த பல்காழ் அல்குலர்
அவிழ்ந்த பூந்துகில் அங்கையின் அசைஇ
நகைப்பூங் கோதையொடு நான்ற கூந்தற்கு
மிகைக்கை காணாது புகைத்தீ எறிப்பப்
படைத்தோன் குற்றம் எடுத்துரைஇ இறக்கேம்
அங்கித் தேவன் அருளென அயன்மனைப்
பொங்குநீர்ப் பொய்கை புக்கனர் ஒருசார்.[45]

அச்சச்சுவையின் ஆழத்தினை இப் பகுதியிற் காணலாம்.

45. பெருங்கதை: 1 : 43 : 136-152.

## 6. பெருமிதச் சுவை

2.36 கல்வி, வீரம், புகழ், கொடை என்னும் நான்கு பண்பு களின் நிலைக்களமாகப் பெருமிதச் சுவை தோன்றும். உதயணனிடம் போரியற்றும் நுட்பத்தினைப் பாங்குறக் கற்றுத் தேர்ந்த பிரச் சோதனன் மக்களை நோக்கி, அரங்கேற்ற நாளன்று, ஆன்றோர் நவின்ற அருள் மொழியெல்லாம் பெருமிதச்சுவையினை வெளிப் படுத்துவனவாம்.[46]

## 7. வெகுளிச் சுவை

2.37 பிரச்சோதன மன்னனிடம் வராகன் என்னும் பணியாள் ஓடிவந்து, வாசவதத்தையை உதயணன் பிடிமீதேற்றித் தன்னூருக்கு வஞ்சகமாகப் பெயர்த்துச் சென்றான் என்று கூறினான். இதனைக் கேட்டதும் மன்னன் கண்கள் செந்தீயெனச் சிவப்ப, தீப்படச் சீறி, திணிதோள் ஓச்சி, திண்தூண் புடைத்து, ஏற்றுச் சிங்கம்போல் கர்ச்சித்து நின்றான் என்று கொங்குவேளிர் காட்டும் பகுதி வெகுளிச் சுவைக்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும்.[47]

## 8. உவகைச் சுவை

2.38 உவகைச் சுவையின் திறத்தினைச் சீவகசிந்தாமணி சிறக்க வெளியிடுவதனால் 'மண நூல்' என்ற பெயரும் அதற்குண்டு. பெருங்கதை சீவக சிந்தாமணியினும் உவகைச் சுவையில் ஒருசிறிது உயர்வுடையதாக விளங்குகிறது என்பர் அறிஞர்.[48] பெருங் கதையின் மிகப் பலவான பகுதிகள் புனல் விளையாட்டு, பொழில் விளையாட்டு முதலியனவற்றை நன்கு விளக்கி நிற்கின்றன.

மெல்லியல் மாதரொடு மேவன கிளந்து
புல்லியும் தளைத்தும் புணர்ந்தும் பொருந்தியும்
அல்குலும் ஆகமும் ஆற்றநலம் புகழ்ந்தும்
அமரர் ஆக்கிய அமிழ்தெனக் கிளையோள்
தன்முளை யெயிற்றுநீர் தானென அமிர்தம்
ஒழுகா நின்ற காலை[49]

என்ற பகுதியில் உவகைச் சுவை ஊற்றெடுக்கக் காணலாம்.

---

46. பெருங்கதை : 1 : 37 : 127–148.
47. ,, 1 : 47 : 100-119.
48. ,, திரு. பொ. வே. சோமசுந்தரனார்; பெருங்கதை முன்னுரை:, பக். 2.
49. ,, 1 : 14 : 159-164.

*நாடக நயம்*

2.39 ஊரெல்லாம் தீப்பற்றி எரிய மக்கள் இங்கும் அங்கும் ஓடுகின்றனர். பற்றியெரியும் தீப்பக்கம் போகாமல் தடுக்கும் மங்கையர் தங்கள் கணவரைத் தடுத்து நிறுத்துகின்றனர். ஊரெங்கும் காற்றின் வேகமும் முகிலின் முழக்கமும் நொடிதோறும் மிக்குவரும் நேரத்தில் காவலர்கள், "மன்னன் மகள் வாசவத்தையைப் பிடியின் மீதேற்றி மன்னனிடத்தே நலமுறச் சேர்க்க வேண்டும். அரசர் பெருமான் கட்டளையும் அத்தகைத்தாகும்" என்று இசைந்து கூறிநின்றனர். அதுகேட்ட வாசவதத்தையின் உவகை பெரியோர்க்கு ஆற்றிய சிறுநன்றிச் செயல் பெருகுதல் போன்று பெருகிற்று. உள்ளத்தே தோன்றிய உவகையைப் புறத்தே மறைக்கும் வழி தேடினள். அவ்வுகையைப் பிறரறியாதபடி தன் அறிவுவன்மை யாலே ஒருவாறு கட்டுப்படுத்தினள். களிப்புடைய வண்டும், சுரும்பும் தம்முட் புணர்ந்து காமக்களியாட்டம் ஆடற்கு இடமான மலர்மாலை புனைந்த தம் தலை நிலம் நோக்கிக் குவிய நின்று, தன் சாற்பெரு விரலானே நிலம் கிளைத்து நின்றாள். தன் உள்ளங்கவர்ந்த உதயணனைப் பார்த்தற்கு அவள் கண்கள் பெரிதும் விதுப்புற்றன. அவனை வாரி விழுங்குவது போன்று வேட்கை மீதூர அவள் துன்புற்று நின்றாள். அவளது நிறையும் நாணும் அவளிடமிருந்து விடை பெற்றுச் சென்றன. அவளுடைய காதல் நெஞ்சம் உள்ளங் கவர்ந்தானோடு பிடியேறுதலைப் பெரிதும் விரும்பி உடன்பட்டு விட்டது. ஆயினும் அவள் வாயால் மட்டும் தன் உடன்பாட்டை உரைக்கும் மதுகை அற்று ஒழிந்தனள்."

இப் பகுதியில்[50] நாடக நயம் மிளிருதல் காணலாம்.

*இலக்கிய நயந் தோன்றும் இன்பக் கடிதம்*

2.40 வாசவதத்தையின் தோழி மானனீகை யாவள். இவள் அழகு நலமும் கலைத்தேர்ச்சியும் நிரம்பியவள். 21 பந்துகளை மாற்றி மாற்றி மேலே விடுத்து விடுத்துப் பந்தாடுதலில் வல்லவள். ஒரு முறை இவள் பந்தாட்டத்தைக் கண்ட உதயணன் அவள்பால் தன் நெஞ்சத்தைப் பறி கொடுக்கின்றான். எனவே, வாசவதத்தைக்கு மானனீகை செய்த ஒப்பனை அழகுடைத்தாயில்லை என்று கூறி தானே அழகு திருத்தி ஒப்பனை செய்கிறான். அதுபொழுது

50. பெருங்கதை : 1 : 44 : 134-155.

மானனீகையுந் தானு மறிந்துள்ள யவன மொழியில் தன் நெஞ்சத்தைத் திறந்து ஒரு காதல் கடிதத்தை எழுதுகின்றான். அக் கடிதத்தில் காதல் நோயால் தவிக்கும் ஓர் ஏழை நெஞ்சின் படப்பிடிப்பினை நாம் நன்கு அறிந்துகொள்ள முடிகின்றது. அக் கடிதம் இலக்கிய இன்பமும் செந்தமிழ் நலமும் கொண்டதாக விளங்குகின்றது.

ஓடியா விழுச்சீர் உதயணன் ஓலை
கொடியேர் மருங்குல் குயின்மொழிச் செவ்வாய்
மான னீகை காண்க...............
சிந்தரி நெடுங்கண்என் நெஞ்சகங் கிழிப்பக்
கொந்தழல் புண்ணொடு நொந்துயிர் வாழ்தல்
ஆற்றேன்..................இந்நோய்
ஆழ்புனற் பட்டோர்க்கு அரும்புணை போலச்
சூழ்வளைத் தோளி காமநற் கடலில்
தாழ்வுறுமல் கொள்க..................
நினைத்த வாசகம் நிரப்பின்று எழுத
இடத்தளவு இன்மையின் கருத்தறி வோர்க்குப்
பரந்துரைத் தென்னை பாவை இக்குறை
இரந்தனென் அருள்.[51]

## உணர்ச்சிக்கேற்ற ஒலி நயம்

2.41 கொங்குவேள் புலப்படுத்த வேண்டிய கருத்தினையும் உணர்ச்சியினையும் வல்ல சொற்களால் நல்ல முறையில் ஒலிநயந் தோன்ற எடுத்துக்காட்டி, விளக்கவந்த காட்சியை நன்கு விவரித்துள்ளார்.

2.42 வாசவதத்தையும் பதுமாவதியும் தம் தோழியரை இரு கூருகப் பிரித்துப் பந்தாட்டம் மேற்கொண்டனர். அவ்வாடலை ஆடவர் காணல் மரபன்று. எனவே, உதயணன் பெண் வேடம் புனைந்து ஒரு பிடியிலேறிச் சென்று, அம் மகளிர் பந்தாட்டத்தைக் கண்டான். மானனீகை என்னுந் தோழி இருபத்தொரு பந்துகளைத் தன் கையில் தாங்கி மாற்றி மாற்றிப் பந்துகளை மேலே எறிந்து திறமையோடு வியக்கத்தக்க முறையில் பந்தாடினாள். இவள் பந்தாட்டத்தைக் குறிப்பிட வந்த கொங்குவேள் பின்வருமாறு குறிப்பர் :

---

51. பெருங்கதை : 4 : 13 : 63-91.

சுழன்றன தாமம் குழன்றது கூந்தல்
அழன்றது மேனி அவிழ்ந்தது மேகலை
எழுந்தது குறுவியர் இழிந்தது சாந்தம்
ஓடின தடங்கண் கூடின புருவம்
அங்கையின் ஏற்றும் புறங்கையின் ஓட்டியும்
தங்குற வளைத்துத் தான்புரிந் தடித்தும்.[52]

பந்தாட்டம் போன்றே ஒலிநயம் சிறக்க இப் பகுதியில் அமைந் திருக்கக் காணலாம். மேலும், பந்துகள் இங்குமங்கும் அவள் கையிலிருந்து தாவுவன போன்றே, கொங்குவேளிர் இவ்விடத்தை வருணிக்கு முகத்தான் கையாண்டிருக்கும் சொற்கள் காட்சியைப் புலப்படுத்தி நிற்கின்றன :

மாறுமா றெழுந்து மறிய மறுகி
ஏறுப விழிபவா காய நிற்பன
......................................
ஓடா நடவா வொசியா வொல்காப்
பாடாப் பாணியி னீடுயிர்ப் பினளாய் [53]

மானனீகை பந்தாடினள்.

2.43 உதயணன் அரசியற் கருமங்களை முறைப்படச் சூழ்ந்து செய்யாமல் வசவதத்தையோடேயே இன்பம் ஆர்ந்து வருகின்றான். இவ்வாறு காமத்தில் கருத்தூன்றி, மற்ற அரசியற் கருமங்களில் பற்றேதுமின்றி உதயணன் வாழும் வாழ்க்கையினைக் கொங்கு வேளிர் சொல்லோசையினாலேயே புலப்படுத்திவிடும் அருமை பாராட்டத் தக்க தாகும். உணர்ச்சிக்கேற்ற ஒலிநயம் இப் பாட்டில் அமைந் திருக்கக் காணலாம்.

போகப் பெருநுகம் பூட்டிய காலை
மாக விசும்பின் மதியமு ஞாயிறும்
எழுதலும் படுதலு மறியா வின்பமொ
டொழுகுபுன லகழினை யுடையெனக் கிடந்த
முழுமதி னெடுங்கடை முதற்பெரு நகரம்
தாரணி யானை பரப்பித் தலைநின்
ருருணி யரச னுள்வது மறியான்
தன்னுயி ரன்ன தம்பியர் நினையான்
இன்னுயி ரிடுக்க ணின்னதென் றறியான்
அவையுங் கரணமு மவைவகுத் திடுவான்.[54]

---

52. பெருங்கதை : 4 : 12 : 225–230.
53. „ 4 : 12 : 201–207.
54. „ 2 : 9 : 183-192.

2.44 உதயணனைப் பிரச்சோதன மன்னனின் சிறையிலிருந்து மீட்பதற்கு அவன் ஆருயிர் நண்பனும் அமைச்சனுமான யூகி சூழ்ச்சி செய்கிறான். அவன் ஏவலில் பாகீரதி என்ற ஒரு தேவராட்டி, சென்ற ஆண்டு உஞ்சைப் பெருநகரில் நீர்விழா நடைபெறாது போய்விட்டதால் நளகிரி என்னும் பட்டத்து யானை முன்னர் மதவெறி கொண்டதென்றும், இந் நீராட்டு விழா நடைபெறாவிட்டால் மீண்டும் யானைக்கு மதம் பிடித்து ஊருக்குத் துன்பம் விளையும் என்றும் தெய்வம் வந்து ஏறியவள் போன்று பேசுகின்றாள். இவ்விடத்தில் கொங்குவேள் கையாளும் சொற்களில் பொருத்தமான ஓசைநயம் அமைந்து, விளக்கப்பட வேண்டிய காட்சி ஓவியமாகத் தீட்டப்பெற்றிருக்கக் காணலாம்.

கொடும்பூண் மார்பிற் கூந்தல் பரப்பிப்
பிடிக்கை யன்ன பெருந்தோள் ஓச்சி
இடிக்குரல் முரசின்முன் எழுந்தனள் ஆடி
விழாக்கோ ளாளரைக் குழாத்திடைத் தரீஇத்
திருநீ ராட்டணி மருவீ ராயிற்
பிணக்குறை படுத்துப் பிளிறுபு சீறிய
இன்றுஞ் சென்றியான் குஞ்சரம் புகுவல்.[55]

## முன்னோர் மொழிபொருளைப் பொன்னேபோற் போற்றல்

2.45 கொங்குவேளிர் தமக்கு முந்தைய இலக்கியங்களை நன்கு பயின்றவர் ஆவர். இக் கருத்தைப் பல சான்றுகள் காட்டி நிறுவலாம். முதலாவதாக, திருக்குறளைப் பொன்னேபோல் போற்றிக் கொங்குவேளிர் தம் காவியத்தில் பல்வேறிடங்களில் பாங்குற எடுத்தாண்டுள்ளார் :

2.46 அன்புடை நெஞ்சமோடு உதயணனைக் காதலித்த வாசவதத்தைக்கு அவள் தந்தை வேறிடத்தே மணம் பேசுகிறான். அதனை அறிந்த அவள் வருந்தி நொந்து புலம்புகின்றாள்.

"விதுப்புறு நடுக்கமொடு விம்முவனள் ஆகி
இதுமெய் யாயின் இன்னுயிர் வேண்டி
வாழ்வோர் உளரேனிற் சூழ்கதன் வினையென
ஆவி நுண்டுகில் யாப்புறுத் தாயினும்
சாவ துறுதியான்"[56]

என்னும் பகுதியும் முப்பாலின் மூன்றும் பாலில்

55. பெருங்கதை : 1 : 37 : 244-250.

56. ,, 1 : 36 : 61-65.

செல்லாமை உண்டேல் எனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை [57]

என்ற குறளும் பெரிதும் இயைபுடையன எனலாம்.

ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய்,[58]

என்னும் குறளின் கருத்தையே பிரச்சோதனன் தன் மக்கள் ஆய கலைகள் அனைத்தும் பயின்று நிரம்பினர் எனக் கூறக் கேட்டு மகிழ்ந்த தேவியர் மகிழ்ச்சியின் நிலையாகக் கூறி மகிழ்கிறார் கொங்கு வேளிர்.[59]

உதயணனைச் சூழ்ந்த வேடர்கள் படைவீரர்களால் தோல்வி யுற்று வெகுண்டோடியதைப் புலவர்,

மத்துறு கடலில் தத்துறு நெஞ்சினர்
பைவிரி நாகத் தைவாய்ப் பிறந்த
ஒலிப்புயிர் பெற்ற எலிக்கணம் போல
ஒழிந்தோர் ஒழிய [60]

என்று கூறும் பொழுது

ஒலித்தக்கால் என்னும் உவரி எலிப்பகை
நாகம் உயிர்ப்பக் கெடும்.[61]

என்னும் அரிய குறளின் கருத்து நினைவுக்கு வருமன்றோ?

தொடரும் பொருளும் ஒத்து வருதலைப் பின்வரும் பகுதிகளிற் காணலாம்.

(அ) ஒன்றா வுலகத் துயர்ந்த புகழல்லாற்
பொன்றாது நிற்பதொன் றில்.[62]
பொன்றா வியற்கைப் புகழது.[63]

(ஆ) கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
குத்தொக்க சீர்த்த விடத்து.[64]

---

57. திருக்குறள் : 1151.
58. திருக்குறள் : 69.
59. பெருங்கதை : 1 : 37 : 78-82.
60. ,, 1 : 56 : 272-75.
61. திருக்குறள் : 762.
62. ,, 233.
63. பெருங்கதை 2 : 8 : 10.
64. திருக்குறள் : 490.

ஒடுங்கி யிருந்தே உன்னியது முடிக்கும்
கொடுங்காற் கொக்கின்.[65]

(இ) சுட்டுக்கோல் போல வெரியும் புகுவரே
நட்டார் எனப்படு வார்.[66]
கட்டழற் புகூஉம் சுட்டுறு கோல்போல்.[67]

(ஈ) மூர்க்கன்றான் கொண்டதே கொண்டு விடானுகு மாகாதே
உண்டது நீலம் பிறிது.[68]
நீல முண்ட நூலிழை வண்ணம்
கொண்டது விடாமை.[69]

(உ) அளையுறை பாம்பும் அரசும் நெருப்பும்
முழையுறை சியமும் என்றிவை நான்கும்
இளைய எளிய பயின்றனவென் றெண்ணி
இகழின் இழுக்கந் தரும்.[70]
பாம்பு மரசும் பகையுஞ் சிறிதென
ஆம்பொரு ளோதின ரிகழா ரதனால்.[71]

2.47 மேற்காட்டிய எடுத்துக்காட்டுகளால் கொங்குவேள் தமக்கு முற்பட்ட இலக்கியங்களிற் பயிற்சியுடையவரென்பதும், முந்தையோர் தொடர்களைப் பொன்னேபோற் போற்றித் தம் நூலிற் தக்க விடங்களில் அணிபெறக் கையாண்டுள்ளார் என்பதும் நன்கு போதரும்.

## தமிழ் வழக்கு

2.48 வடநாட்டுக் கதையைப் பாட வந்தாலும் தமிழ் மரபை விடாது போற்றி நினைந்து இந் நூலைக் கொங்குவேளிர் இயற்றி யுள்ளார் என்பதற்குப் பல சான்றுகளைக் காட்டலாம்.

வாசவதத்தையும் உதயணனும் முதன்முறை கண்ட போதே பள்ளத்தினில் பாயும் வெள்ளம்போல் இருவர் உள்ளமும் ஒன்று கலந்தன. இதனைக் கொங்குவேள் பின்வருமாறு கூறுவர் :

---

65. பெருங்கதை: 3 : 17 : 61-62.
66. நாலடியார் : 208.
67. பெருங்கதை: 2 : 8 : 155.
68. பழமொழி: 168.
69. பெருங்கதை: 2 : 9 : 88.
70. ஆசாரக்கோவை: 84.
71. பெருங்கதை: 4 : 10 : 130-131.

புள்ளி வெம்பனி கரந்த கள்விதன்
காரிகை யுண்டவென் பேரிசை யாண்மை
செறுநர் முன்னர்ச் சிறுமை யின்றிப்
பெறுவென் கொல்லென மறுவந்து மயங்கி
எவ்வமிக் கவனும் புலம்ப,[72]

புலம்பினள் என்பர். மேலும்,

அவளும்,
..................என் நெஞ்சகம் புகுந்து
கள்வன் கொண்ட உள்ளம் இன்னும்
பெறுவன் கொல்லென மறுவந்து மயங்கி.[73]

உருகி நின்ருள். இருவரும் கண்டவுடனே காதல் கொள்ள, அக் காதல் காரணமாக மணம் நிகழ்ந்தது என்று கொங்குவேள் தமிழ் முறைப்படி காட்டினுர்.[74] பின் வந்த கம்பநாடரும் இம் முறையைப் பின்பற்றினுர்.[75]

2.49 கொங்குவேள் உதயணனைத் 'தமிழியிய'ல் வழக்கினுன் என்று ஓரிடத்தில்[76] குறிப்பிட்டுள்ளார். இதற்குப் பொருளை நாம் காணுகின்ற பொழுது பரிபாடலில்,

தள்ளாப் பொருளியல்பிற் தண்டமிழாய் வந்திலார்[77]

என்னும் தொடர் நினைவிற்கு வாராமற் போகாது. இத் தொடருக்குப் பொருள் எழுதவந்த பரிமேலழகர், "இப் புணர்ச்சியை (களவுப் புணர்ச்சி) வேண்டுகின்ற பொருள் இலக்கணத்தை உடைய தமிழை ஆராயாத தலைவர் களவொழுக்கத்தைக் கொள்ளமாட்டார்" என்றனர்.

2.50 இப் பகுதிக்கு டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் காணும் குறிப்புரை தமிழ் மரபிற்குக் களவொழுக்கம் எத்துணை இன்றி யமையாதது என்பதனை மேலும் அறிவுறுத்தும்.[78]

72. பெருங்கதை: 1 : 33 : 124-128.

73. ,, 1 : 33 : 150-152.

74. வடமொழி நாடகத்தில் இவ்வாறின்றி உதயணன் மட்டுமே முதலில் கண்ட தாகக் கூறப்படுகிறது. இவ்வாறே பதுமாவதியும் உதயணனைக் காணுதே தந்தை சொற்படி மணப்பதாகக் கூறுவர்—டாக்டர் அ. சிதம்பரநாத செட்டியார் முன்பனிக் காலம், பக். 66.

75. அண்ணலும் நோக்கினன் அவளும் நோக்கினுள், இருவரும் மாறிப்புக்கு இதயம் எய்தினுர்!—கம்ப: பால: மிதிலைக்காட்சிப் படலம்: 35-37.

76. பெருங்கதை : 4 : 17 : 67.

77. பரிபாடல்: 9 : 25.

78. டாக்டர் உ. வே. சா. பரிபாடல் குறிப்புரை: ப. 99.

ஊரில் அமளி ஏற்பட யானையின்மீது வாசவதத்தையை ஏற்றிச் சென்ருன் உதயணன். பிரச்சோதனனின் வீரர்கள் மீட்கச் சென்று இயலாதுபோய் வறிதே மீண்டனர். மன்னன் தன் மதி அமைச்சர்களோடு இது குறித்து முறைப்படிச் சூழ்ந்தான். அது போது சாலிங்காயன் என்னும் தலைமை அமைச்சன் பின்வருமாறு கூறினுன்: "நம் செல்வி வாசவதத்தையை மனத்தில் கொண்டு இச் செயலை ஆராய்ந்து தெளிந்தால் அவ்வுதயணன் தானும் குல நலத்தாலும் குணநலத்தாலும் நன்மைக்குத் தகுந்த நன்குடைமை யானும் இப் பேருலகத்தே நின்னேடு ஒப்பவனே ஆகாலானும், மேம் பாடுடைய முறைமையினையுடைய நூல்களிலே சான்ரேர் வகுத்த விதியோடு இணங்கிய ஊழின் செயலே இச் செய்கையாகும்" என்று அறிவுறுத்தினுன்.[79]

*அரிய செய்திகள் சில*

2.51 முல்லைக்கலியில் கொல்லேற்றுக்கோடு அஞ்சுபவனுக்கு ஆய மகளைத் திருமணத்தில் தருவதில்லை என்ற குறிப்புப் பெறப் படுகின்றது.[80] இதுபோன்று பெருங்கதையிலும் சாங்கியத்தாய் வாயிலாக மகட்கொடை நேர்தற்கு வாய்ந்த எண்வகை ஆண்மை நலன்களைக் குறிப்பிட்டுள்ளார். அவை வருமாறு:

இளமையும் வனப்பும் இல்லொடு வரவும்
வளமையும் தறுகணும் வரம்பில் கல்வியும்
தேசத் தமைதியும் மாசில் சூழ்ச்சியொடு
எண்வகை நிறைந்த நன்மகற் கல்லது
மகட்கொடை நேரார் மதியோர்.[81]

காதலின் வெற்றியினை கூறப்புகுகின்ற கொங்குவேள் மதங் கொண்டு செருக்கிய இருமத யானைகள் பாகரின் தோட்டிக்கடங் காமல் மனம்போன போக்கில் வலிந்து சென்றன என்றும், ஆயினும் உதயணனும் வாசவதத்தையும் அவ்வாறு தம் மனத்தகத்தே கையிகந்து சென்ற காமத்தைத் தத்தம் உயர்குடிப்பிறப்பு என்னும் பண்புடைமையாலே இருவரும் தத்தமக்குள் பிறர் அறியா வண்ணம் அடக்கி நின்றனர் என்றும் நயம்பட நவின்றுள்ளார்.[82]

---

79. பெருங்கதை: 1 : 47 : 137–140-
80. "கொல்லேற்றுக் கோடஞ்சு வானை மறுமையும்
புல்லாளே ஆய மகள்" —முல்லைக்கலி: 3 : 63-64.
81. பெருங்கதை: 1 : 36 : 89-93.
82. ,, 1 : 32 : 34-49.

2.52 குழந்தையின் சிறப்பினை நந்தமிழ் நூல்கள் பலவிடங்களில் நலமுற நவிலக் காணலாம். அகநானூற்றுப் புலவர்,

இம்மை யுலகத் திசையொடும் விளங்கி
மறுமை யுலகமும் மறுவின் றெய்துப
செறுநரும் விழையுஞ் செயிர்தீர் காட்சிச்
சிறுவர்ப் பயந்த செம்ம லோரெனப்
பல்லோர் கூறிய பழமொழி எல்லாம்
வாயே யாகுதல் வாய்த்தனம்[83]

என்று மழலைச் செல்வத்தின் மாண்பினைப் பாராட்டுவார். பாண்டியன் அறிவுடைநம்பியும் மழலை மாருக் குதலையின் பெருமையினைப் புகல்வதைப் புறத்திலும் காணலாம்.[84] பின்னூளைய புறப்பொருள் வெண்பா மாலை ஆசிரியர் பகைவர் நாடு அழிகின்றபோது அந்நாட்டுத் தளர்நடைப்புதல்வரும், தாங்கொணுத் துயருறுவரே என்று மனம் மாழ்குகின்றுர்.[85]

அம் முறையில் உச்சயினி நகரத்தில் நீராட்டு விழாத் தொடங்கவும் சிறுர் பலர் தெருக்களில் நிற்கும் நிலைமையும் நோக்கி, மன்னன் படைகளுக்கு வழி விட்டு நிற்கவும் என்று காவலர் கேட்டுக் கொள்ளவும் கலங்காது, அக் காவலர் மொழிக்கு மறுமொழியாக இளஞ்சிறுர்கள், ''இப் புதுநீராட்டு விழவு நன்னுளில் அரசன் ஆணை செல்லாது; இன்று எம்மாணையே எங்கும் செல்லும்'' என்று கூறி ஆரவாரித்தனர்.[86]

2.53 இப் பகுதியின் நயம் தெரிந்து, தேர்ந்து திருத்தக்க தேவர் தம் நூலில் இக் கருத்தினை எடுத்தாண்டுள்ளதனைப் பின்வரும் பாடலால் அறியலாம்:

ஆணை யாணை யகலுமி னீரென,
வேணுக் கோலின் மிடைந்தவ ரொற்றலின்
ஆணை யின்றெம தேயென் றணிநகர்
காணுங் காதலிற் கண்ணெருக் குற்றவே.[87]

யாரேனும் தவறு செய்து விடுவார்களேயானுல், அப் பிழை செய்தோர் தம் நிறையுள்ள பொற்பாவையைத் தண்டமாக அளித்தல்

83. அகநானூறு : 66 : 1-6
84. புறநானூறு : 183
85. புறப்பொருள் வெண்பா மாலை : வஞ்சி : கொற்றவள்ளை : வெண்பா.
86. பெருங்கதை : 1 : 38 : 18 : 23.
87. சீவகசிந்தாமணி : 634.

அக்கால மரபாக இருந்திருத்தல்வேண்டும். பண்டைக்காலத்தில் ஒருசாரார் இதனை வழக்காக மேற்கொண்டிருந்தனர் என்பதனைப் பரணர் பாட்டால் அறியலாம்.[88] அம் முறையில்,

> ஆடகப் பொன்னினும் மளவி னியன்ற
> பாவை யாகும் படுமுறை யதுவெம்
> கோவின் ஆணை போமின் நீரென[89]

என்று பெருங்கதையில் வருவதும் காணுதற்குரியதாகும்.

### மகளிர் காமமும் கற்பும்

2.54 பெருங்கதையில் வரும் மகளிர் அழகுச் செவ்வியும் காம நலமும் கனிந்தவராகக் காட்சி தருகின்றனர். பெண்ணை இன்பத்திற்கு நிலைக்களனாகக் குறிப்பிடப்பெறும் நிலை உளது. ஊடலும் கூடலுங் கொண்டு மகளிர் ஆடவர்க்கு இன்பம் ஊட்டினர் என்னும் செய்தி அறியப்படுகிறது. விரிசிகையைக் கண்ணுற்ற நகர மாந்தர், அவள் மானிட மகளுமல்லள்; தேவ மகளுமல்லள். ஆயினும்,

> பரவை மாக்கடல் பயங்கெழு ஞாலத்(து)
> உருவின் மிக்க உதயணற் சேர்ந்து
> போகம் நுகர்தற்குப் புரையோர் வகுத்த
> சாபந் தீர்ந்து தானே வந்த
> கயக்கறு முள்ளத்துக் காமங் கன்றிய
> இயக்கி யிவளே என்மக ளென்று[90]

கூறி நின்றனர்.

2.55 உதயணன் தம் மனைவியரோடு இரவும் பகலும் இணைந்து வாழ்ந்தனன் என்று குறிப்பிடப் பெறுகின்றான். இச் செயலினைக் கவிஞர்,

> அன்புநெகிழ்ந் தணைஇ யின்சுவை யமிழ்தம்
> பனியிருங் கங்குலும் பகலு மெல்லாம்
> முனிவிலன் நுகர்ந்து முறைமுறை பிழையாது
> துனியும் புலவியும் ஊடலுந் தோற்றிக்
> கனிபடு காமம் கலந்த களிப்பொடு
> நற்றுணை மகளிர் நால்வரும் வழிபட[91]

88. குறுந்தொகை. 292.
89. பெருங்கதை : 1 : 41 : 371-73.
90. ,, 4 : 17 : 49-54.
91. ,, 4 : 17 : 115-120.

வாழ்ந்தனன் என்று கிளத்துகின்ருர். இதனுல் தொல்காப்பியஞர்,

காமஞ் சான்ற கடைக்கோட் காலை
ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனுங் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே[92]

என்ற உண்மை களி மிகுந்த இளமை வாழ்விலும் அருள் மிகுந்த முதுமை வாழ்விலும் துலக்கமுறக் காணலாம்.

2.56 மகளிர் கற்பைக் கூறுகின்ற பொழுது,

கையது வீழினும் கணவ னல்லது
தெய்வம் அறியாத் தேர்ந்துணர் காட்சிப்
படிவக் கற்பிற் பலகோ மகளிருள்
தொடியோள் தம்மனை தோழி எனத்தன்
குடிவழி யாகக் கொண்ட கொள்கையின்
இத்தவம் உவக்கும் பத்தினி[93]

என்று கவிஞர் குறிப்பிட்டுள்ளார். "கையின் கண்ணதாகிய அரும் பொருள் நழுவிப்போய் விட்ட பொழுதிலும், கணவனை நினைந்து கைதொழுதல் அன்றிக் கடவுளை நினையாத தெளிந்துணர்ந்த மெய்க் காட்சியினையும் சிறந்த நோன்பாகிய கற்பினையும் உடைய மகளிர் என்று கூறப்படுவதனுல் பெண்மையின் பெருநலம் அறியப் பெறுகின்ருேம்.

## தொழிற் சிறப்பாற் பெற்ற அரும்பொருள்கள்

2.57 உருமண்ணுவா என்னும் அமைச்சன் இருந்து ஆளும் சயந்தி நகரத்தை யடைந்த உதயணன் பல்வேறு அரும்பொருள் களைப் பெறுகின்ருன். இப் பொருள்களைக் குறிப்பிடும் ஆசிரியர் கூற்றில் நயமும் வரலாற்றுண்மையும் பொதிந்திலங்கக் காணலாம்.

2.58 பொதியமலை சந்தன மரத்திற்கும் திமிச மரத்திற்கும் பெயர் பெற்றது. விந்தமலை யானைக்கொம்பிற்கும், மேருமலை பொன்னுக்கும், மேற்கடல் பவளத்திற்கும், தென்கடல் முத்திற்கும், வித்தியாதரர்மலை வெள்ளிக்கும், ஈழநாடு செம்புக்கும், இமயமலை வயிரமணிகளுக்கும், கடார நாடு இரும்பிற்கும் பெயர் போனவை. மேலும், யவன நாடு தச்சர்களுக்கும், அவந்தி நாடு கொல்லர்

92. தொல் : கற்பியல் : 51.

93. பெருங்கதை : 1 : 36 : 256–261.

களுக்கும், மகத நாடு மணித் தட்டாருக்கும், பாடலிபுத்திரம் பொற் கொல்லருக்கும், வத்தவ நாடு வண்ணத் தொழிலாளருக்கும் புகழ் வாய்ந்தவைகளாகும்.[94] இப் பகுதி பட்டினப்பாலையின்[95] பகுதி ஒன்றை நமக்கு நினைவூட்டுகின்றது.

### சமணக் கொள்கைகள்

2.59 சீத்தலைச் சாத்தனுர் பௌத்த சமயப் பிரசாரத்திற்கு முதலிடந் தந்து மணிமேகலையை இயற்றிருக்க, இளங்கோவடிகள் இலக்கிய நயத்திற்கு முதலிடந்தந்து சிலப்பதிகாரத்தினை இயற்றி யிருக்கக் காணலாம். கொங்கு வேளிர் இளங்கோவடிகள் வழியில் நின்று பெருங்கதைக் காப்பியத்தை யாத்துள்ளார்.[96] சமண சமயக் கொள்கைகளை நூல் இடையறவு படாத வகையில் இடையிடையே பெய்துள்ளார். ஆன்மாவின் அறிவை மறைக்கும் தீவினையைச் சமணர் காதிகர்மம் என்பர்.

காதி வெவ்வினை கடையறு காலை[97]

கருமந் தீர்த்த உயிர் மேலுலகம் செல்லும் என்னும் சமணக் கோட்பாடு

வினைதீர் உயிரின் மிதந்தது[98]

என்னும் அடியில் பெறப்படுகின்றது. தகாத உணவைத் தவிர்க்க வேண்டுவது சமணர் கடமை. இதனைக் கொங்குவேள்,

அல்லூண் நீத்தலின் அஃகிய உடம்பினன்[99]

என்னும் தொடரினுல் புலப்படுத்தியுள்ளார். முற்பிறப்பை அறியும் அறிவை 'ஓதி' என்றனர் சமணர். இதனை ஆசிரியர்,

ஒன்றிய உறுநோய் ஓதியின் நோக்கி[100]

என்னும் பாவடியில் விளக்கியுள்ளார். மேலும், அருகத்தானம், அராந்தாணம், சேதியம், ஜினுலயம், பள்ளி முதலியவற்றைப் பற்றிய குறிப்புகள் நூலின் பலவிடங்களிலும் இடம்பெற்றுள்ளன.

---

94. பெருங்கதை : 1 : 58 : 30–45.

95. பட்டினப்பாலை : 187-191.

96. Prof. T. P. Meenakshisundaram ; A History of Tamil Literature, P. 87.

97. பெருங்கதை : 3 : 27 : 149.

98. ,, 1 : 40 : 185.

99. ,, 4 : 7 : 159.

100. ,, 5 : 3 : 92.

**ஆசிரியர்**

2.60 பெருங்கதையின் ஆசிரியர் பெயர் கொங்குவேள் என்று தெரியவருகின்றது.

நீதிப் புகழுத யேந்திரன் காதை நிகழ்த்து தற்குக்
கோதற்ற மங்கையின் மூன்று பிறப்புற்ற கொள்கை யன்றி
மேதக்க சொற்சங்கத் தார்வெள்க வேகொங்கு வேளடிமை
மாதைக்கொ டுத்தரஞ் சொன்னது வுங்கொங்கு மண்டலமே.[101]

இக் கொங்கு மண்டலச் சதகச் செய்யுளால் கொங்குவேள் பிறந்த ஊர் மங்கையென்பதும், இவர் இந் நூலை இயற்றுதற்கு மூன்று பிறவிகள் எடுத்தாரென்பதும், சங்கத்துச் சான்றோர் கேட்ட கேள்விகளுக்குத் தம் வேலைக்காரி ஒருத்தியைக் கொண்டு விடை பகருவித்தாரென்பதும் தெரியவருகின்றன. மங்கையென்பது விசயமங்கலம் என்னும் ஊராகும். சிந்திரப் பிரப தீர்த்தங்கருடைய ஆலயம் இவ்வூரில் உண்டு. அஃது இப்போது கோயம்புத்தூர் ஈரோட்டிற்கு இடையே உள்ளது. பழங்காலத்தில் குறும்பு நாட்டைச் சார்ந்த ஊராகும்.[102] மூன்று பிறவிகள் என்பது இயல்பான பிறப்பு, வானப் பிரத்தம், துறவறம் ஆகிய மூன்று நிலைகள் ஆகலாம் என்பர் அறிஞர்.[103] பெருங் கவிஞர் வீட்டு வேலைகாரர்கள் தாமும் நல்ல கல்வி கேள்வியறிவு உடையராய்த் திகழ்ந்தனர் என்பதற்கு, கம்பன் வீட்டுக் கட்டுத்தறியுங் கவி சொல்லும் என்னும் பழமொழியும், திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களின் தவசிப் பிள்ளைகளிற் சிலர் நல்ல கல்வி கேள்வி வாய்த்த வராய் விளங்கினர் என்று டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் அவர்கள் கூறியிருப்பதும் நல்ல சான்றுகளாகும்.

2.61 கொங்கு வேளிர், கொங்கு நாட்டு வேளாள வகுப் பினரைச் சார்ந்த சிற்றரசர்களுள் ஒருவர். மூவேந்தரையடுத்துத் தமிழ்நாட்டில் சிறக்க மதிக்கப்பெற்ற சிற்றரசர் வேளிரே யாவர்.[104] இவர் முடிமன்னர்பால் மகட்கொடை நேர்தற்குரிய பெருமை வாய்ந்தவராவர். ஆயினும், கொங்குவேள் சமண சமயச் சார்புடைய புலவர் என்பது பெருங்கதை நூலின் பலவிடங்களில் இவர் அருக

101. கொங்குமண்டல சதகம் : 99.
102. கொங்குமண்டல ஊர்த்தொகை : 36
103. டாக்டர் உ. வே. சா. பெருங்கதை முன்னுரை : பக். XIVII & XIVIII.
104. பேராசிரியர் மு. இராகவையங்கார் : வேளிர் வரலாறு : பக். 3.

சமயக் கொள்கைகளைப் பெய்திருப்பது கொண்டு தெரியலாம். இலாவண காண்டத்தில்,

அழகுபடப் புணர்ந்த வலங்குமணித் தவிசின்மிசை
நிறைகதிர் வெண்மதி நிலாவொளி விரிந்து
முறையின் மூன்றுட னடுக்கின போலத்
தாம முக்குடை தாமுறை கவிப்ப
வுலக வெள்ளத் தாழும் பல்லுயிர்க்
கலகை யாகிய வருந்தவக் கிழவன். [105]

என்று அருக தேவனைச் சிறப்பாகக் குறிப்பிட்டிருப்பது கொண்டு அறியலாம்.

## பெருங்காப்பியமன்று சிறுகாப்பியமே

2.62 பெருங்காப்பிய இலக்கணங்களாகத் தண்டியலங்காரம் குறிப்பிடும் செய்திகளிற் பல பெருங்கதையிற் பொருந்திவரக் காணலாம். நூலின் முதலும் இறுதியும் கிடைக்காத காரணத்தால் கிடைத்துள்ள பகுதி கொண்டு பார்ப்பினும், பெருங்கதை காப்பிய இலக்கணக் கூறுகள் கொண்ட நூலாக உள்ளது. ஆயினும், இதனைப் பெருங்காப்பியமெனச் சொல்ல முடியாது.

2.63 வாழ்த்து, தெய்வம் வணங்குதல், உரைக்கும் பொருளை உணர்த்தும் இம் மூன்றும் நூலின் தொடக்கத்தே இருந்திருத்தல் கூடும். அறம், பொருள், இன்பம் என்னும் பகுதிகள் கிடைத்துள்ள பகுதிகளில் நிரம்ப உள்ளன. துறவுக் காண்டத்தில் வீடு பேறு குறிக்கப்பெற்றிருக்கலாம். ஆயினும், அது கிடைக்கவில்லை. தன்னிகரில்லாத் தலைவனுகப் பெருங்கதைக் காப்பியத்தில் உதயணனைக் கொள்ள முடியாது. மலை வருணனை, கடல் வருணனை, நாட்டு வருணனை, நகர வருணனை, இருசுடர்த் தோற்றம் மறைவு இவற்றில் சில புனையப் பெற்றுள்ளன. தூது, மேற்செலவு, போர், வெற்றி, சந்தியெனும் உபாயம் முதலியனவும் இந் நூலில் இடம் பெற்றுள்ளன. சொல்லணிகளும், பொருளணி களும் எண்சுவைகளும் பொருந்திக் காண்டம் முதலிய பேருறுப்பும் காதை அமைப்புப் போன்ற சிற்றுறுப்பும் கொண்டு பெருங்கதை திகழ்கின்றது. எனவே, சிறுகாப்பியத்தில் ஒன்ருகப் பெருங் கதையைக் கொள்ளலாம்.

---

105. பெருங்கதை : 2 : 6 : 151-56.

2.64 பேராசிரியர் சேசுதாசன் அவர்கள் பெருங்கதை, இலக்கியச் சிறப்பற்ற நூல் என்று பழிப்பர்.[106] அகவல் யாப்பின் ஒருமுழுமையினைப் பெருங்கதையில் காணலாம் என்றும், மனத்தைக் கொள்ளை கொள்ளும் வருணனையும், கதையினைப் பேரார்வம் தோன்ற கிளத்திச் செல்லும் திறனும் கொங்குவேளிர்க்குக் கைவந்த கலைத் திறம் எனவும் பாராட்டுவர் அறிஞர் தெ. பொ. மீனாட்சிசுந்தரம்.[107]

2.65 பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை பெருங்கதை மாண்பினைப் பின்வருமாறு தொகுத்துரைப்பார் :

"எவ்வளவு ஆற்றலோடும் அழகோடும் அகவல் என்னும் பாவினைக் கையாளலாம் என்பதனை இந் நூலிற் கண்டு தெளியலாம். பல்வேறு வருணனைகள் நம் சோர்வைப் போக்குகின்றன; கதையில் நமக்குள்ள ஆர்வம் எங்கும் தடைபடுவதில்லை. இந் நூலாசிரியர் சீரிய கவிதையாற்றலைக் கொண்டுள்ளாரென்பதும், இவருக்குப் பின் இன்றுவரை வந்துள்ள கவிஞர்கள் யாரும் சொற்களைக் கையாள்வதிலும், நடைச்சிறப்பு மாண ஆள்வதிலும் இவரை வெல்லவில்லையென்பதும் உண்மையாகும். இனிய சொல்லாட்சி, நடையினிமை, தங்கு தடையற்ற கவிதையோட்டம் முதலியன இக் கவிஞரைத் தமிழ்க் கவிஞருள் முன்னணியில் இடம்பெறச் செய்வனவாகும்." [108]

மேலும் அவர்,

"மொழியின் அழகும், அகவற் பாவினை ஆளுந் திறமும், பொருளுக்கேற்ற ஓசை வேறுபாடுகளும், பந்தாடுதலின் பகுதி ஒவ்வொன்றினையும் நுட்பமாக அறிவுறுத்திக் கற்பவர் உள்ளத்தில் ஆழ்த்தும் பாவனை மேம்பாடும் பெரிதும் இன்புறத் தக்கன" [109] என்று கூறுவர்.

2.66 பெருங்கதைக் காப்பியத்தினை நன்கு ஆராய்ந்த கோவை கிழார் திரு. சி. எம். இராமச்சந்திரன் செட்டியார் அவர்கள் பெருங்கதை மாண்பு குறித்துப் பின் வருமாறு குறிப்பிட்டுள்ளார் :

106. History of Tamil Literature, P. 118.

107. A History of Tamil Literature, pp, 83 & 87.

108. A History of Tamil Language and Literature, P- 138.

109. காவிய காலம் : பக். 92.

" நூலில் காணும் வடமொழிப் பெயர்களை விட்டு விட்டு நூலைப் படித்தால் அதனை எவரும் வடநாட்டுக் கதையல்ல, தமிழ்நாட்டுக் கதையென்றே கூறுவார்கள். தமிழ் இலக்கணம் வழுவாது, பொருட் செறிவு குறையாது ஓர் ஒப்பற்ற காப்பியமாக வகுப்பது என்றால் ஆசிரியருடைய கல்வித்திறம், ஆராய்ச்சித் திறமை, செய்யுள் நடைப்பெருமை, நீரோட்ட அமைதி இவைகளை எவ்வாறு வியப்பது? வேளிர் வடநாட்டுக் கதையை நார் ஆக ஆக்கிச் செந்தமிழ்ப் பூங்காவில் மலர்ந்த தமிழ்ப் பண்புகளாகிய நறுமலர்களைத் தொடுத்து இந் நூலை மாலையாக்குகின்றார் எனலாம்." [110]

"நடையமைப்பினாலும் பொருட்சிறப்பினாலும் காப்பியங்களுள் தலைமையுடையதாகக் கருதத் தக்கது" என்பர் திரு. கி. வா. ஜகந்நாதன். [111]

2.67 இறுதியாக, பெயர் அறியாப் பெரும்புலவர் ஒருவர் சிறந்த நூல்களுள் ஒன்றாகப் பெருங்கதை நூலினைக் குறிப்பிட்டிருக் கின்றார். அப் பாடலைக் கூறி என் கட்டுரையினை முடிக்கின்றேன்.

திருத்தக்க மாமுனிசிந் தாமணி கம்பர்
விருத்தக் கவித்திறமும் வேண்டேம்—உருத்தக்க
கொங்குவேள் மாக்கதையைக் கூறேம் குறளணுகேம்
எங்கெழிலென் ஞாயி றெமக்கு.

---

110. கொங்குவேள் : பக்கங்கள் 103, 69 & 70.

111. தமிழ்க் காப்பியங்கள் : பக். 127.

# கருத்துரைகளும் விளக்கமும்

*தமிழ்த்துறைத் தலைவர் டாக்டர்* **ந. சஞ்சீவி**

*முன்னுரை*

தமிழில் ஒவ்வொரு காலச் சூழ்நிலைக்கும் ஏற்பத் தனித்தனித் திறமும் தரமுமுடைய காப்பியங்கள் தோன்றின. சிலப்பதிகாரம், மணிமேகலை, சிந்தாமணி, பெரியபுராணம் முதலிய காப்பியங்கள் சிற்சில வேறுபாடுகளுடன் தனித்தனித் தரம் (Standard) அமைந்து காணப்படுகின்றன. எது காப்பியம்? என்னும் வினவிற்கு எளிதில் விடையிறுக்க இயலாது. ஆயினும், டால்ஸ்டாய், ஆபர்கிராம்பி முதலானோர் காப்பியத்தின் தன்மைகளை எடுத்தும் விளக்கியும் சொன்னவர் ஆவர். தமிழ்க் காப்பியங்களுக்கு இலக்கணம் 'பெருங்காப்பிய நிலை பேசுங் காலை' எனத் தொடங்கும் தண்டி யலங்கார நூற்பாவில் அமைந்துள்ளது. இவ் விலக்கணம் வடநூல் நூல் மரபையொட்டி வந்தது என்பர். தமிழ்க்காப்பியங்களை நன்கு ஆராய்ந்து, தமிழ்க்காப்பியங்களுக்கென்று ஏன் ஓர் இலக்கணம் காண முடியாது? அந்த வகையில் அறிஞர் உலகம் முயலவேண்டும்

2.2 விஷ்ணு புராணத்தில் பெருங்கதையின் கதை பேசப் பட்டுள்ளது. டாக்டர் உ. வே. சாமிநாதையர் பெருங்கதையினைப் பதிப்பித்துள்ளதிலிருந்தே பெருங்கதையின் இலக்கியச் சிறப்பு நமக்குத் தெளிவாகின்றது. 'பிருகத்கதா' என்ற வடமொழி நூலே பெருங்கதை நூல் தமிழில் இயற்றப்பட அடிப்படையாய் அமைந்திருக்க வேண்டும் என்பர். வரலாற்றுப் பேராசிரியர் திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார், 'தென்னிந்தியா குறித்துப் பிறநாட்டார் குறிப்புகள்' (Foreign Notices of South India) என்றொரு நூல் எழுதியிருப்பது போல, 'தென்னிந்தியா குறித்து வடமொழி நூல்கள் வழங்கும் செய்திகள்' (Sanskrit Notices of South India) என்றொரு நூல் எழுதப்படல் வேண்டும்.

அப்போது நம் தமிழ்நாடு குறித்தும் தமிழ் இலக்கியங்கள் குறித்தும் விரிவான செய்திகளை விளக்கமாக அறிய முடியும்.

'பெருங்கதை' நற்கருத்துகள் பலவற்றைக் கொண்டதொரு நல்ல இலக்கியமாகும். இன்று இக் காப்பியங் குறித்த தம் ஆராய்ச்சியினைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறையில் 'பெருங்கதை' யினைத் தம் ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொண்டு இரண்டு ஆண்டு களாக ஆராய்ந்து வரும் டாக்டர் சி. பாலசுப்பிரமணியம் அவர்கள் ஆசிரியர் ஐந்தாவது கருத்தரங்கை நிகழ்த்துவார். நல்ல உழைப்புத் திறம் வாய்ந்த சில தமிழாசிரியர்களுள் அவர் ஒருவர். இவ்வாறு அறிமுகவுரை நிகழ்த்திக் கருத்தரங்கக் கட்டுரையைப் படிக்கும்படி கேட்டுக்கொண்டார்.

### கட்டுரையாளரின் முன்னுரை

கட்டுரையாளர் தொடக்கவுரையாகத் தாம் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன்னர்த் 'தமிழ் இலக்கிய வரலாறு' என்னும் நூல் எழுதுகையில் 'பெருங்கதை' குறித்துச் சில செய்திகள் திரட்ட முற்பட்டபொழுது அந் நூலில் நல்ல பல கருத்துகள் அமைந்துள்ளதனைக் கண்டதாக உரைத்தார். குறிப்பாக,

> அன்புடைக் கணவர் அழிதகச் செய்யினும்
> பெண்பிறந் தார்க்குப் பொறையே பெருமை

என்ற அடிகளில் அமைந்துள்ள கருத்துத் தம்மைச் சிறப்பாகக் கவர்ந்ததாகக் கூறினர். எனவே, பல்கலைக் கழகத் தமிழ்த்துறை விரிவுரையாளனாக வந்தபின், 'பெருங்கதையினைத்' தாம் விரிவான ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொண்டதாகக் கூறிக் கட்டுரையைப் படிக்கத் தொடங்கினர்.

## பெருங்கதை மாண்பு

என்னும் இக் கட்டுரை படிக்கப்பெற்றது.

### கருத்தரங்கில் கலந்துகொண்டோர் உரை

### 1. திரு. மு. சண்முகம் பிள்ளை

சிறந்த இலக்கிய நூலான பெருங்கதை வீழ்ச்சியடைந்ததற்கு இடைக்காலத்தில் எழுந்த சமயப் பூசலே காரணம். இதற்குச் சான்றாகப் பின்வரும் 'இலக்கணக்கொத்து' நூலின் பாயிர உரைப் பகுதியை எடுத்துக்காட்டினர் :

"சிலப்பதிகாரம், மணிமேகலை, சங்கப்பாட்டு, கொங்கு வேண்மாக்கதை, பத்துப்பட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க் கணக்கு, இராமன் கதை, நளன் கதை, அரிச்சந்திரன் கதை முதலிய இலக்கியங்களை ஒரு பொருளாக எண்ணி வாணுள் வீணுள் கழிப்பர்."

இவ்வுரைப்பகுதி பிற்காலத்தெழுந்த சைவசமயப் பற்றினுல் எழுந்தது என்பது தெளிவு. ஆனுல், பின் வந்த உரையாசிரியர்கள் பலரும் இப் பெருங்கதையினை மேற்கோளாகக் கையாண்டுள்ளனர்.

2.2 இக் கட்டுரையின் முதற் பக்கத்தில் இரண்டாம் பத்தியில் 'காசி' எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இந் நூலில் உள்ளது போன்றே 'வாரணசி' என்று குறிப்பிடப் பெற்றிருக்கவேண்டும்.

2.2 மேலும், இம் முதற்பக்கத்தில், 'இவ் வடமொழிக் காப்பி யத்தைத் தழுவிப் பெருங்கதை தமிழில் இயற்றப்பெற்றிருக்க வேண்டும் என அறிஞர் கருதுவர்' என்று குறிப்பிட்டுள்ளதனை மாற்றி 'இன்ன அறிஞர் குறிப்பிட்டுள்ளார்' என்று விளக்கமாகத் தந்திருக்கவேண்டும்.

2.7 மூன்ரும் பக்கத்தில் 'அறிஞர் பலர் இந் நூல் 7-ஆம் நூற்ருண்டில் இயற்றப்பட்டதாதல் வேண்டும் என்று கருது கின்றனர்' என்றிருப்பது 'அறிஞர் இருவர்' என்று வரையறைப் படுத்திச் சொல்வது நலம் பயக்கும். ஏனெனில் இருவர் கருத்துக் களே இங்கு மேற்கொளாக எடுத்துக்காட்டப் பெற்றுள்ளன.

2.15 ஐந்தாம் பக்கத்தில் யூகி பார்ப்பன மகன் எனக் குறிக்கப்பட்டுள்ளான்; பதிற்றுப்பத்துக் காலத்திலேயே வேள்வியும், பிராமணர்களும் சிறப்பாகப் பேசப்பட்டுள்ளனர். பெருங்கதையில் யவனர் பற்றிய குறிப்பு இடம்பெற்றிருப்பது, இதன் பழமையினைக் காட்டுவதற்கொரு சான்ரும். 'ஐம்பெருங்காப்பியம்' என்னும் வழக்கு மிகப்பழமையுடைய வழக்கு அன்று என்றும் எடுத்துரைத்தனர்.

திரு. க. த. திருநாவுக்கரசு

காப்பியத்தில் பல்வேறு உறுப்புகளும் நன்ருக இணைந்து காணப்படவேண்டும் என்னும் கருத்தை வற்புறுத்தினுர். ஒரு

காப்பியத்தை ஆராய்வோர் முதற்கண் அக் காப்பியத்தில் பல்வேறு இயைபுகளும் பொருந்தியிருக்கின்றனவா என்பதனைக் கருத்தில் கொள்ளவேண்டும்.

பெருங்கதைக் காப்பியத்தில் வரும் தலைவன் தன்னிகரில்லாத் தலைவனா என்றால் இல்லை; காரணம், நூலாசிரியரின் நோக்கம் சமயப் பிரசாரமாக அமைந்துவிட்டமையே. இதனால் காப்பியத்தில் உணர்ச்சிப் பஞ்சம் காணப்படுகின்றது; செய்திப் பட்டியல் போல் வரும் சில வருணனைகள் படிக்கச் சோர்வினையளிக்கின்றன. காப்பியத்தில் உள்ளுணர்த்தும் திறம் (Suggestiveness) இல்லை. எனவே, பெருங்கதையினை ஒரு கலைக்காப்பியமாகக் கொள்ள முடியாது என்று குறிப்பிட்டார்.

திரு. இ. சுந்தரமூர்த்தி

2.24 சிறுபாணாற்றுப்படையில் இடம்பெற்றுள்ள பாடினியின் உடல் வருணனையும் பெருங்கதையில் இடம்பெற்றுள்ள வாசவ தத்தையின் உடல் வருணனையும் ஒப்பிட்டு நோக்கத்தக்கனவாகும். கலிங்கத்துப் பரணியின் போர்க்களவருணனை பெருங்கதையின் போர்க்கள வருணனையைப் பின்பற்றியதாக இருக்கலாம்.

மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்னார்
உயிர்நீப்பர் மானம் வரின்.

நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்
பண்புடை யாளர் தொடர்பு.

இத் திருக்குறட்பாக்கள் பெருங்கதையில் முறையே,

வான்மயிர் துடக்கிற் றானுயிர் வாழாப்
பெருந்தகைக் கவரி யன்ன பீடழிந்து
(உஞ்சைக். 35 : 234-235)

எனவும்,

நவில்தொறும் இனிய ஞானம் போலப்
பயில்தொறும் இனியநின் பண்புடைக் கிழமை
(நரவாண. 7 : 148 - 149)

எனவும் பொன்னேபோல் போற்றிவைக்கப் பெற்றிருத்தல் காணலாம்.

ஆராய்ச்சி மாணவர்களின் கருத்துரை :

திரு. மா. செல்வராசன்

பெருங்கதையில் அமைந்துள்ள கதை, வேறு எந்த நூலில் இடம்பெற்றுள்ளது எனக் காணவேண்டும்; இதற்கு ஒப்பு நோக்கு ஆராய்ச்சியினை மேற்கொள்ளவேண்டும். பெருங்கதை மணிமேகலைக்கு முன்னால் தோன்றியிருக்கக்கூடுமா என்பதனையும் ஆராய்ந்து பார்க்கவேண்டும். பெருங்கதை தனித்தன்மை குன்றி யிருப்பதற்குக் காரணம் அக் காப்பியத்தில் தன் சிந்தனை (Originality) இல்லாமையே ஆகும். சிலப்பதிகாரத்தில் வரும் கோவலனைத் தன்னிகரற்ற தலைவனாகக் கருதமுடியுமா? இவை குறித்தெல்லாம் நாம் சற்று விழிப்புடன் ஆராய்ந்து பார்க்க வேண்டும்.

திரு. அ. நாகலிங்கம்

2.2 'பிருகத்கதா' என்னும் வடமொழிக் காப்பியத்தைப் படித்து ஆராயவேண்டும். கேசாதி பாத வருணனை இந் நூலில் சுவையாக இடம்பெற்றிருக்கக் காணலாம். சிந்தாமணிக் காப்பியத்தில் மகளிர் ஆடும் பந்தாட்டம் சுவைப்பது போன்றே பெருங்கதையில் இடம் பெற்றிருக்கும் பந்தாட்டமும் சுவைக்கின்றது.

திரு. சு. இராமர்

எகிப்து இலக்கியத்தில் பெண்கள் ஆண்களைப் பார்த்துக் காதல் செய்ததாகப் பாட்டு உண்டு. 'தமிழ் இலக்கியத்தில் மகளிர் காதல் எவ்வாறு பேசப்பட்டுள்ளது?' என ஆராய வேண்டும். சிலப்பதி காரத் தலைவி கண்ணகியிடம் நிறைவுகள் பல இருந்தன என்பது உண்மையே! ஆயினும், ஒன்றிரண்டு குறைகள் இருந்தன என்பதனையும் கருத்தில் கொள்ளவேண்டும்.

தலைவர் நிறைவுரை

5.28-5.29 சிலப்பதிகாரம், மணிமேகலை, பெரியபுராணம் முதலியன தனித்தனித் தரம் (Standard) வாய்ந்த காப்பியங் களாகும். இவற்றிற்கிடையேயுள்ள பொதுத்தன்மைகளை ஒப்பிட்டுக் காணவேண்டும். பெருங்கதை நூலாசிரியர் கூரிய நோக்குடையவர் என்பது அவர் கையாண்டுள்ள சில உவமைகளால் தெரிய

வருகின்றது. 'குன்றிமணி போன்ற குயிலின் கண்' என்பது ஓர் எடுத்துக்காட்டு ஆகும். மேலும், வருணனையும் மனத்தை ஈர்ப்பது போல் உளது. 'பல்லுயிர் மடிந்த நள்ளென் யாமம்' என்னும் தொடர் நள்ளிரவினை நம்முன் நன்கு தோன்றுவிக்கின்றது. நல்லாசிரியரின் சிறப்பாக நாம் அறிகின்ற செய்தி அவர் 'பல்லவை இருந்த நல்லாசிரியர்' என்பதாகும்.

2.24 மேலும், சில அரிய செய்திகள் இந் நூலில் இடம் பெற்றுள்ளன. ஐவகை நில வருணனை இக்காப்பியத்தில் சிறப்பான முறையில் இடம் பெற்றுள்ளது. மகளிர் கூந்தலில் தெய்வம் உறைகிறது என்னும் கருத்து அக்காலத்தில் நிலவியது. மகளிர் கூந்தலைப் பஞ்சகவ்வியத்தால் நீராட்டுதல் வழக்கம் என்று தெரிகிறது.

இன்னும் இந் நூல் மானிடவியல் துறைக்குச் சில செய்திகளைச் சேர்க்கின்றது. வேறு எந்நூலிலும் காணப்படாத புதிய செய்தி 'சவரர்' எனும் பழங்குடி மக்களைப் பற்றியதாகும். இக் காவியத்துள் வரும் 'கண்ணுறு கலக்கம்,' 'நலனுராய்ச்சி,' 'நாடுபாவிற்று,' 'படை வீடு' முதலிய காதைத் தலைப்புகள் தமிழ்ச் சொல் வளத்தை எடுத்து நவில்வனவாக உள்ளன. நகரம் தீப்பற்றி எரிகையில் ஒரு பெண் கையற்ற நிலையில் அவள் உயிர் தப்புவிக்க மேற்கொள்ளும் போராட்டம் அவலச் சுவையின் ஆழத்தின் எல்லையாகும்; நாடகக் கலை நுட்பங்கள் காப்பியத்தின் பல இடங்களில் காணத்தக்கனவா யுள்ளன. யாழ் பற்றிய செய்தியும், இசை குறித்த செய்தியும், கூத்து குறித்த செய்தியும் தமிழ் இசைச் சங்கத்தில் இசை ஆராய்ச்சியில் ஈடுபட்டிருக்கும் கட்டுரையாளரால் காட்டப்பெறுதது எனக்கு வியப்பைத் தருகின்றது. மேலும், இன்றைய சென்னை யிலுள்ள 'கிரீன் வேஸ் சாலை'யினை (Green Ways Road) நினைவூட்டும் அமைச்சர் தெரு பெருங்கதையில் பேசப்பட்டுள்ளது. அரிய கருத்துகள் பல இக் காப்பியத்தில் ஆங்காங்கே இடம் பெற்றிருக்கக் காணலாம். சான்றாக,

> 'இழிந்த மக்களொடு இன்பம் ஆர்தலின்
> உயர்ந்த மக்களொடு உறுபகை இனிது'

எனவரும் கருத்தினை நோக்கினால் வாழ்வியல் உண்மை ஒன்று எவ்வாறு வற்புறுத்தப் பெற்றிருக்கின்றது என்பதனைக் காணலாம். ஓசைநயந்தரும் பாடற்குதிகள் பல செவிக்கு இனிமையூட்டுகின்றன.

நாட்டுவருணனை திருவள்ளுவர் காட்டிய நாட்டு இலக்கணத்திற்கு விளக்கமாக அமைந்துள்ளது. இந்தக் காப்பியத்தை முற்றும் படிக்க முடியாதவர்கள்கூட, டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்களின் 'பெருங்கதை'யின் முன்னுரையினையும், பிற்சேர்க்கை (Index) யினையும் கட்டாயம் படிக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

## கட்டுரையாளரின் விளக்கவுரை

### திரு. மு. சண்முகம் பிள்ளை வினுக்களுக்கு விடை

2.2 'காசி' என்று குறிப்பிடப்பட்டிருக்கும் சொல், கலித் தொகையில் 'வாரணவாசி' என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஆகவே, 'வாரணசி' என்றே குறிப்பிடப்படவேண்டும் என்ற கூற்று ஏற்புடையதே. அடுத்து, 'இவ் வடமொழிக் காப்பியத்தைத் தழுவிப் பெருங்கதை தமிழில் இயற்றப்பெற்றிருக்கவேண்டும் என அறிஞர் கருதுவர்' என்று அமைந்திருக்கும் பகுதியில், 'அறிஞர் கருதுவர்' என்பதனை 'இன்ன அறிஞர் கருதுவர்' என்று விளக்கமாகக் கூற வேண்டும் என்று குறிப்பிட்டார். டாக்டர் உ. வே. சாமிநாதையர் பெருங்கதையின் முன்னுரையில் எழுதியிருக்கும் தொடரினையே யான் அகழ்ந்து கொடுத்துள்ளேன். டாக்டர் உ. வே. சா. அவர்களே அறிஞர் யாவர் எனத் தெரிவிக்கவில்லை. வழிவழிச் செய்தியைக் கொண்டு அவர் அவ்வாறு எழுதியிருக்கலாம்.

### திரு. க. த. திருநாவுக்கரசு கருத்துகளுக்கு விளக்கம்

பேராசிரியர் க. த. திருநாவுக்கரசு அவர்கள் குறிப்பிட்டுள்ளது போன்றே பெருங்கதையில் கட்டுக்கோப்புக் காணப்படவில்லை என்பதனை உடன்படுகின்றேன்; வருணனைகளிற் சில சோர்வினைத் தருவதாக உள்ளன என்று அவர் குறிப்பிட்டதும் உண்மையே யாகும். சமயப் பிரசாரம் ஆசிரியரின் நோக்கம் என்று அவர் குறிப்பிட்டாலும் அப்பிரசாரத்தினையும் வன்மையாகவோ நயமாகவோ கூறி ஆசிரியர் வெற்றியடைந்திருக்கிறார் என்று கூற முடியாது. பெருங்கதையின் சில பகுதிகள் நீக்கப்பட்டால் காப்பியத்தின் தொய்வு குறைந்து காப்பியம் மேலும் சுவைக்கும் என்பது உறுதி.

### திரு. இ. சுந்தரமூர்த்தி கருத்துகளுக்கு விளக்கம்

2.24 திரு. சுந்தரமூர்த்தி அவர்கள் குறிப்பிட்டது போன்றே சிறுபாணாற்றுப்படையில் அமைந்துள்ள பாடினியின் வருணனை பெருங்கதை நூலாசிரியர் புலவர் கொங்குவேளுக்கு வழிகாட்டியாக இருந்திருக்கலாம். அது போன்றே கொங்குவேள் திருக்குறட் கருத்துகளையும் தொடர்களையும் தம் நூலின் பலவிடங்களிலும் எடுத்துக்கொண்டுள்ளார் என்பதனை நன்கு அறியலாம்.

### திரு. மா. செல்வராசன் எழுப்பிய வினாவிற்கு விளக்கம்

சிலப்பதிகாரத்தைப் பொறுத்தவரையில் கண்ணகியே கதைத் தலைவி ஆகிறாள். சிலப்பதிகார உரையாசிரியர் அடியார்க்கு நல்லாரும், 'கண்ணகியை முற்கூறினார், அவள் கதைக்கு நாயகி யாதலின்' என்று குறிப்பிட்டுள்ளது கொண்டு கண்ணகியே சிலப் பதிகாரக் காப்பியத்தின் கதைத்தலைவி என்பதனை அறியலாம்.

### திரு. சு. இராமர் எழுப்பிய வினாவிற்கு விடை

'அச்சமும் மடனும் நாணும் முந்துறுதல் நிச்சமும் பெண்பாற் குரியவென்ப' என்று தொல்காப்பியனார் கூறியபடி பண்டைத் தமிழ் மகளிர் அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு முதலிய பண்புகளைச் சிறக்கப் பெற்றிருந்தமையின் அவற்றின் காரணமாக மகளிர் எகிப்திய மகளிர்போல் ஆடவரைப் பார்த்து முதலில் காதல் கொள்ளவில்லை என ஒருவாறு அமைதி கொள்ளலாம்.

---

# தமிழில் அணியிலக்கண நூல்கள்

புலவர் இ. சுந்தரமூர்த்தி, எம். ஏ.,
திருக்குறள் ஆராய்ச்சிப்பகுதி,
சென்னைப் பல்கலைக்கழகம்.

1. அணியின் சிறப்பு 3.1–3.11

   *மொழியும் இலக்கணமும் 3.1—அணியும் அலங்காரமும் 3.2-3.3—அணியும் அதன் பயனும் 3.4–3.8—அணியின் தொன்மை 3.9–3.11.*

2. அணியிலக்கணத்தின் வளர்ச்சி 3.12–3.34

   *அணி நூல்களின் தோற்றம் 3.14–3.15—வீரசோழியம் 3.16–3.17—தண்டியலங்காரம் 3.18–3.19—அணியியலும் தண்டியலங்காரமும் 3.20-3.23—மாறனலங்காரம் 3.24—இலக்கண விளக்கம் 3.25—தொன்னூல் விளக்கம் 3.26—3.28—முத்துவீரியம் 3.29—சாமிநாதம் 3.30—சந்திராலோகம் 3.31—குவலயாநந்தம் 3.32—தொனி விளக்கு உரை 3.33-3.34.*

3. சார்பு நூல்கள் 3.35–3.42

   *சித்திரக்கவிகள் 3.36—அலங்காரமாலை 3.37—இலக்கண தீபம் 3.38—உவமைத் தொகுப்பின் பயன் 3.39—உவமான சங்கிரகம் 3.40—3.42.*

4. மறைந்த அணி நூல்கள் 3.43–3.44

5. ஒப்பு நோக்கு ஆய்வு 3.45–3.54

   *தண்டியலங்காரமும் மாறனலங்காரமும் 3.45-3.47—மெய்யுவமையும் பண்புவமையும் 3.48-3.49—மெய்ப்பாட்டியலும் சுவையணியும் 3.50-3.52—உவமையே அணிகளுக்கு அடிப்படை 3.53-3.54.*

6. தொகுப்புரை 3.55–3.56

---

7-1-1972-ல் நடைபெற்ற தமிழ்த்துறை ஆசிரியர் மாணவர் கருத்தரங்கக் கட்டுரை.

## 1. அணியின் சிறப்பு

### மொழியும் இலக்கணமும்

3.1 தமிழிலக்கணம் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி யென்னும் ஐந்து நுட்பமான கூறுபாடுகளையுடையது. இப் பாகு பாடனைத்தும் பொருந்தி விளங்கும் நூல்கள் இன்று சிலவே உள்ளன. பல மறைந்தொழிந்தன. [1] இந் நூல்கள் நுவலும் இலக்கண நெறி களே மொழியின் வளர்ச்சிக்கு உறுதுணையாய் நின்று மொழியினைப் பேணிப் பாதுகாத்து வருவன. எழுத்தும் சொல்லும் மொழிக்கு இலக்கணம். ஏனைய அம் மொழியில் அமைந்த இலக்கியங்களுக்கு இலக்கணமாம்.

### அணியும் அலங்காரமும்

3.2 இவ் ஐவகை இலக்கணக் கூறுபாடுகளுள் அணியிலக் கணம் செய்யுளுக்கே அழகு தந்து இன்பம் பயப்பது. முன்னையோர் இதனை 'அணி' யெனக் குறிப்பிடாது 'உவமை' என்று வழங் கினர். தருக்க நூலோரும், பண்டைத் தமிழிலக்கண நூலோரும் உவமையைப் பெரும்பாலும் பொருளின் புலப்பாட்டிற்குக் காரண மாகக் கொண்டனர். பண்டையிலக்கண நூலில் பொருளின் உறுப்பாகக் கூறியவற்றையும், பிறவற்றையும் பிற்காலத்து வட மொழியாளர் செய்யுட்கு அலங்காரமெனக் கொண்டு நூல்கள் செய்தனர். அலங்காரம் என்ற வடமொழிச் சொல் தமிழில் அழகு என்ற பொருளில் வழங்கிவருகிறது. செய்யுளிலே காணப்படும் அழகினை அணியென்றனர். ஒரு பொருளோடு மற்றொரு பொருளை அணித்தாக்குவதையும் 'அணி' என்று கூறலாமன்றோ?

3.3 இலக்கண நூலார் அணி, அலங்காரம் என்ற இரு சொற்களையும் ஒரு பொருளிலேயே வழங்குவர். வடமொழி மதம் பற்றி நூல்கள் எழுந்த பிற்காலத்தில் தமிழிலும் வடமொழி அலங் காரம் போன்று அணிநூல்கள் பல எழுந்தன.

---

1. பார்க்க. மறைந்து போன தமிழ் நூல்கள்—பொருளடக்கப் பகுதி—மறைந்து போன தமிழ் இலக்கண நூல்களாக மொத்தம் 44 நூல்களை அறிஞர் மயிலை, சீனி வேங்கடசாமி அவர்கள் குறிப்பிடுவர்.

## அணியும் அதன் பயனும்

3.4 உண்மையைப் பேருணர்ச்சியுடன் இதயத்திற்கு உயிர்த் துடிப்புக் குன்ரு வகையில் எடுத்துச் சொல்வது கவிதை. அது அறிவின் முதலும் முடிவுமாக இருப்பது. அக் கவிதைக்கு உயிர் நிலையாக விளங்குவது கற்பனை. அக் கற்பனையைப் படைப்பதற்குப் பெரிதும் உறுதுணை புரிவன அணிகளே.

3.5 தொல்காப்பியர் தமது பெருநூலுள் செய்யுளியலுக்கு முன்னர் மெய்ப்பாடு, உவமையியல்களை அமைத்துள்ள முறைமை கொண்டும் செய்யுளுக்கு அணி மிகமிக வேண்டப்படுவதொன்று என்பது நன்கு விளக்கமாகும்.

> ‘மாடக்குச் சித்திரமும் மாநகர்க்குக் கோபுரமும்
> ஆடமைத்தோ ணல்லார்க் கணியும் போல்’[2]

செய்யுளின் அழகுக்கு அழகு கூட்டுவது அணியாகும். அணிகள் பொருட்சுவை பயக்கும் பொருளணி எனவும், சொற்சுவை பயக்கும் சொல்லணி எனவும் இரு வகைப்படும்.

3.6 பொருளின் இயல்பான தன்மையினை அறிந்து தெளிதற்கு உவமைகள் பெரிதும் உதவுகின்றன. பொருளாவது அல்லது கருத்தாவது எவ்வளவு சிறிதாயினும் உவமை அதனைப் பெரிதாக மிகை படுத்தி நன்கு விளக்கம் தரும்.

> ‘காண்டல் கருதல் உவமம் ஆகமம்
> ஆண்டைய அருத்தா பத்தியோ டியல்பு
> ஐதிகம் அபாவம் மீட்சி ஒழிவறிவு
> எய்தியுண் டாம்நெறி யென்றிவை தம்மால்
> பொருளின் உண்மை புலங்கொள வேண்டும்’[3]

என மணிமேகலையில் வரும் அடிகளும் பொருளின் உண்மைத் தன்மையை அறிதற்கு உவமையும் ஓர் அளவை எனக் கூறும். பரிமேலழகரும்,[4] அருள் நந்தி சிவாசாரியாரும்[5] இதன் பயனை மேலும் நன்கு விளக்குவர்.

---

2. *நன்னூல், சிறப்புப் பாயிரம், 55.*
3. *மணிமேகலை, 27 : 9-13.*
4. *குறள், 242, பரி, உரை.*
5. *சிவஞான சித்தியார் சுபக்கம், அளவையிலக்கணம் 1.*

3.7 இங்ஙனம் உவமையால் ஒரு பொருளோடு மற்ரெரு பொருளை இயைபுபடுத்திப் பார்ப்பது ஓர் இயற்கைத் தூண்டுதல் மட்டுமன்று; அறிவு வளர்ச்சிக்கு அடிப்படையுமாகும். இவ்வுவமையின் பயன் குறித்து இளம்பூரணர்,

> 'இதனாற் பயன் என்னை மதிப்பதோ வெனின் புலன் அல்லாதன புலனாதலும் அலங்காரமாகிக் கேட்டார்க்கு இன்பம் பயத்தலும் 'ஆப்போலும் ஆமா!' என உணர்த்தியவழி, அதனைக் காட்டகத்துக் கண்டான் முன் கேட்ட ஒப்புமைபற்றி இஃது 'ஆமா' வென்று அறியும். 'தாமரை போல் வாள் முகத்துத் தையலிர்' என்றவழி அலங்காரமாகிக் கேட்டார்க்கு இன்பம் பயக்கும்'[6]

என்று கூறுவர்.

3.8 மொழியின் வளர்ச்சியோடு அணியும் ஒன்றுபட்டுக் காலப்போக்கில் பல்வேறு வடிவங்களும், வண்ணங்களும் குறிப்புணர்வுகளும் கொண்டதாய் வளம் பெற்றுள்ளது. ஆகவே மொழிவரலாற்றில் அணிகள் பிறந்து வளர்ந்து பல்வேறு கிளைகளாகப் பெருகி வந்துள்ள வரலாறும் ஒரு தனிக்கூறும்.

### அணியின் தொன்மை

3.9 தமிழில் இப்பொழுது நமக்குக் கிடைத்துள்ள முழுமையான பழமையான இலக்கணநூல் தொல்காப்பியமே. தொல்காப்பியர் தம் நூலை எழுத்து, சொல், பொருள் என மூவகையாகப் பகுத்து யாப்பினையும் அணியினையும் பொருளதிகாரத்தினுள் அடக்கியுள்ளார். தொல்காப்பியர் காலம் கி. மு. 3 அல்லது 4-ஆம் நூற்றுண்டு என்று கருதப்படுகிறது.[7] அதற்கு முன்னரும் இலக்கண நூல்கள் இருந்திருக்க வேண்டும் என்பதைத் தொல்காப்பியர் கூறும் 'என்ப,' 'என்மனர் புலவர்', 'மொழிப' என்பன போன்ற அவர்தம் சொல்லாட்சியே நமக்கு நன்கு விளக்கும். மேலும், உவமவியலிலும் தொல்காப்பியரே,

> 'விரவியும் வருஉம் மரபின என்ப'[8]

---

6. தொல். உவம. இளம். உரை, தோற்றுவாய்.

7. இராசமாணிக்கனர், டாக்டர், மா. தமிழ் மொழி இலக்கிய வரலாறு, பக். 83-84.

8. தொல். உவம. 2.

'சிறப்பே நலனே காதல் வலியொடு
அந்நாற் பண்பும் நிலைக்களம் என்ப'[9]

'உவமப் போலி ஐந்தென மொழிப'[10]

என்று முந்தையோர் கொள்கைகளைத் தம் நூற்பாவில் விளக்குவர். இதனால் அணி இலக்கண மரபுகள் தொல்காப்பியருக்கு முன்னரும் இருந்திருத்தல் வேண்டும் என்பது நன்குதெளிவாகும்.

3.10 வடமொழியில் உள்ள ரிக் வேதத்தில் சொல்லை அழகு படுத்தும் முறைகள் கையாளப்படுகின்றன. ஓசையணிகளும் (சப்த அலங்காரம்) பொருளணிகளும் (அர்த்த அலங்காரம்) காணப்படுகின்றன. சம்ஸ்கிருதத்தின் முதல் காப்பியம் என்று கருதப்படும் வால்மீகி இராமாயணத்தில் காப்பியமுறைகளும், அணிகளும் உணர்ச்சிகளும் மலிந்து கிடக்கின்றன. இரு கிரவுஞ்சப் பறவைகள் விளையாடிக் கொண்டிருந்தபோது, அவற்றுள் ஒன்றை வீழ்த்திய வேடனின் கொடுஞ்செயலைக் கண்டு மனம் உருகிய வால்மீகி முனிவர், அவ்வுணர்ச்சியை உணர்த்திய விதமே அலங்கார ஆய்வின் சிறந்த நிலை என்பர். வேதத்திற்குப் பொருள் உரைத்தவரான யாஸ்கர், நிருக்தம் என்ற நூலில் உவமையணியைக் குறிக்கும் சொற்களைத் தொகுத்துள்ளார். இவர் காலம் கி. மு. 700 என்பர். கி. மு. 500 அளவில் சமஸ்கிருதத்திற்கு இலக்கணம் வகுத்த பாணினி உவமையணியின் உறுப்புகளைச் சொல்லி யிருக்கிறார்.[11]

3.11 இவை அணியின் தொன்மையையும் அவை பண்டு தொட்டே மொழிகளில் விளங்கிவரும் திறத்தையும் காட்டு கின்றன.

## 2. அணியிலக்கணத்தின் வளர்ச்சி

3.12 தொல்காப்பியர் காலத்தில் அணியிலக்கணத்திற் கெனத் தனி இலக்கண நூல் இருந்ததாகத் தெரியவில்லை. தொல் காப்பியர் கூறிய உவமவியலுள் பிற்காலத்தெழுந்த சில

---

9. தொல். உவம. 4.

10. „ „ 24.

11. கலைக்களஞ்சியம், தொகுதி ஒன்று, பக். 211.

அணிகளையும் நாம் அடக்கிக் கூறலாம்.[13] தொல்காப்பியர் கூறுவது உவமை ஒன்றுதான். அகத்திணையியலில் ஏனையுவமம், உள்ளுறை யுவமம் என்பனவற்றை விளக்குகிறார். இவர் காலத்தில் உவமை யொன்றே அணியாகக் கருதப்பட்டது போலும். காலப் போக்கில் உவமையொன்றே மக்களுடைய கலை வளர்ச்சிக்கு ஏற்பப் பல

---

12.

| தொல்காப்பியம் | தண்டியலங்காரம் |
|---|---|
| வினை, பயன், மெய், உரு (1) | பண்பு, தொழில், பயன். பண்பி னுள் மெய்யும் உருவும் அடங்கும் என்பர் (30) |
| சுட்டிக்கூறு உவமம் (7) | தொகையுவமம் (31) |
| பொருளே உவமம் செய்தனர் மொழியினும் மருளறு சிறப் பின் அஃது உவமமாகும்(9) | விபரீத உவமை (31) |
| உவமப்போலி (24) | ஒட்டணி (51) |
| வேறுபட வந்த உவமத் தோற்றம் (32) | உவமையின் வகை (31) |
| தடுமாறுவமம் (35) | ஐயவுவமை, இதர விதர வுவமை (31) |
| அடுக்கிய தோற்றம் விடுத் தல் பண்பே (36) | சந்தான உவமை (38) |
| நிரனிறுத்தமைத்தல் நிரனிறை (37) | நிரனிறையணி (66) |

(அடைப்புக்குறிகளுக்குள் உள்ள எண்கள் நூற்பா எண்கள்)

'வேறுபடல்' என்பதற்குப் பேராசிரியர் தரும் விளக்கமும் அதற்கு இணையான உவமைகளும் *

| | |
|---|---|
| 1. உவமைக்கும் பொருளுக்கும் ஒப்புமை மாறுபடக் கூறு தல் | விரியுவமை |
| 2. ஒப்புமை மறுத்துப் பொருளை நாட்டிக் கூறுதல் | உண்மையுவமை |
| 3. ஒப்புமை மறுத்த வழிப் பிறிதோருவமை நாட்டுதல் | மறுபொருளுவமை |

* தொல்காப்பியப் பொருளதிகாரம் கனகசபாபதிப் பிள்ளை பதிப்பில் திரு. ம. நா. சோமசுந்தரம் பிள்ளை அவர்கள் எழுதிய ஆராய்ச்சிக் குறிப்புகள்.

கிளைகளாக விரிந்தது. பேராசிரியரும் உவமம் ஒன்றினையே அணியாகக் கொண்டார். இதனை,

> "இனி இவ்வோத்தினிற் கூறுகின்ற உவமங்களுட் சிலவற்றையும் சொல்லதிகாரத்தினுள்ளும் செய்யுளியலுள்ளுஞ் சொல்லுகின்ற சில பொருள்களையும் வாங்கிக் கொண்டு மற்றவை செய்யுட் கண்ணே அணியாமென இக்காலத் தாசிரியர் நூல் செய்தாருமுளர்"[13]

என்று கூறும் பேராசிரியரின் உரையாலும் இனிது அறியலாம்.

---

| | | |
|---|---|---|
| 4. | உவமையும் பொருளும் முற் கூறி நிறீஇப் பின்னர் மற்றைய ஒவ்வாவென்றல் | தடையுவமை |
| 5. | உவமைக்கு இரு குணங் கொடுத்துப் பொருளினை வாளாது கூறுங்கால் உவமையினை இரண்டாக்கி ஒன்றற்குக் கூறிய அடை ஒன்றற்குக் கூறாது கூறுதல் | உம்மையுவமை |
| 6. | ஒப்புமை குறைவுபட உவமித்து மற்றொரு குணங் கொடுத்து நிரப்புதல் | இசையுவமை |
| 7. | ஒவ்வாக் கருத்தினான் ஒப்புமை கோடல் | கருத்துவமை |
| 8. | உவமத்திற்கன்றி உவமத்திற்கு ஏதுவாகிய பொருட்குச் சில அடை கூறி அவ்வடையானே உவமிக்கப்படும் பொருளைச் சிறப்பித்தல் | மோகவுவமை |
| 9. | உவமானத்தினை உவமேயமாக்கியும் அது விலக்கியுங் கூறுதல் | விலக்குவமை |
| 10. | இரண்டு பொருளானே வெவ்வேறு கூறியவழி ஒன்று ஒன்றற்கு உவமையென்பது கொள்ளவைத்தல் | வேற்றுப்பொருள்வைப்பு |

13. தொல். பொருள். உவம. 37, பேரா. உரை.

3.13 தொல்காப்பியர் காலத்தில் இருந்த எழுத்து, சொல், பொருள என்ற மூவகைப் பாகுபாடு இறையனார் களவியலுரை காலத்து நான்காயிற்று. இவ்வுரை எழுந்த காலம் கி. பி. எட்டாம் நூற்றாண்டு என்பர். இவ்விறையனார் அகப்பொருளுரையில்,

> "அரசன் இனி நாடு நாடாயிற்றாகலின் நூல் வல்லாரைக் கொணர்கவென்று எல்லாப்பக்கமும் ஆட்போக்க, எழுத்ததிகாரமும், சொல்லதிகாரமும், யாப்பதிகாரமும் வல்லாரைத் தலைப்பட்டுக் கொணர்ந்து, 'பொருளதிகாரம் வல்லாரை எங்குந் தலைப்பட்டிலேம்' என வந்தார். வர, அரசனும் புடைபடக் கவன்று, 'என்னை? எழுத்தும் சொல்லும் யாப்பும் ஆய்வது பொருளதிகாரத்தின் பொருட்டன்றே? பொருளதிகாரம் பெறேமே யெனின், இவை பெற்றும் பெற்றிலேம்' எனச் சொல்லா நிற்க"[14]

என்று வருவதால், அக் காலத்தில் எழுத்து, சொல், பொருள், யாப்பு என நால்வகை இலக்கணம் வழங்கின வென்பது துணியப்படும். அஃதாவது தொல்காப்பியனார் காலத்தில் பொருளதிகாரத்தினுள் அடங்கிய யாப்பு கடைச் சங்கத்தார் காலத்தில் அதினின்றும் பிரிந்து ஓரதிகாரமாயிற்று என்பதாம்.[15]

## அணி நூல்களின் தோற்றம்

3.14 இக்காலத்தினை அடுத்தே அணியிலக்கணம் வடமொழி யறிவினால் வளர்ச்சி பெற்றுத் தனி இலக்கணமாகத் தழைத்திருத்தல் வேண்டும். ஆயினும் யாப்பிலக்கணம் போல் அணியிலக்கணம் அத்துணை சிறந்த வளர்ச்சி பெறவில்லை. வடமொழி அலங்கார இலக்கணம் தமிழ் மொழியிலுள்ள உவமையிலககணத்தோடு பொருள் வேற்றுமை கொண்டிருப்பதே இதற்குக் காரணம் எனலாம்.

3.15 வடமொழியில் தோன்றிய அலங்கார நூல்களுள் போஜன் (கி. பி. 1018-1054) என்பவரால் இயற்றப்பட்ட சரஸ்வதி கண்டாபரணமும், மம்மபட்டர் (கி. பி. 1100) எழுதிய காவ்யப் பிரகாசமும், இராசன காருய்யகன் (கி. பி. 1100-1150) என்பவர் இயற்றிய ஸாகித்ய மீமாஞ்சையும், வித்யாதரன் (கி. பி. 1282-1327) யாத்த ஏகாவளியும், ஜய தேவன் (கி. பி. 1200-1300) உரைத்த

---

14. இறையனார் அகப்பொருள், சூத்திரம் 1, களவியல் வரலாறு.

15. சூரியநாராயண சாஸ்திரியார், வி. கோ. : தமிழ் மொழியின் வரலாறு, பக். 43.

சந்திரா லோகமும், விசுவநாதன் (கி. பி. 1300-1383) இயற்றிய சாகித்ய தர்ப்பணமும், அப்பைய தீட்சிதர் (கி. பி. 1520-1593) எழுதிய சித்திர மீமாஞ்சை, குவலயானந்தம் முதலான நூல்களுமே பிற்காலத்துத் தமிழில் எழுந்த பல்வேறு அணியிலக்கண நூல்களுக்கும் அடிப்படையாய் அமைந்தன எனலாம். இனித் தமிழில் எழுந்த அணியிலக்கண நூல்களை அதன் கால முறையில் சுருக்கமாகக் காண்போம்.

### வீரசோழியம்

3.16 தமிழில் தோன்றிய அணியிலக்கண நூல்களுள் காலத்தால் முந்தியது வீரசோழியம் ஆகும். இது கி. பி 11-ஆம் நூற்றாண்டில் தோன்றியதாகும். இதற்கு முன்னரே தமிழில் அணி நூல்கள் தோன்றிவிட்டன என்பதற்குப் பத்தாம் நூற்றாண்டில் தோன்றிய திவாகர நிகண்டே தக்க சான்றாகும். இதனுள் பொருளணிகள் இருபத்தெட்டும், சொல்லணிகள் இருபத்தொன்றும் பல்பொருட் கூட்டத்தொரு பெயர்த் தொகுதியில் கூறப்பட்டுள்ளன. இங்ஙனம் கூறுதற்கு ஆதாரமாக அவர் காலத்தில் வேறு அணி நூல்களும் இருந்திருக்க வேண்டும் என்பது இதனால் புலனாகும்.

3.17 வீரசோழியம் சிற்றரசர் புத்தமித்திரரால் பேரரசர் வீரராசேந்திர சோழனுடைய வேண்டுகோளுக்கிணங்க எழுதப்பட்ட நூலாகும். தொல்காப்பியமும் காவியா தரிசமுமே இந் நூலுக்கு முதல் நூல்களாம். இந்நூலின் அலங்காரப் படலத்தில்,

"உரையுட லாக வுயிர்பொரு ளாக வுரைத்த வண்ணம்
நிரைநிற மாகநடை யேசெல வாநின்ற செய்யுட்களாந்
தரைமலி மானிடர் தம்மலங் காரங்கள் தண்டிசொன்ன
கரைமலி நூலின் படியே யுரைப்பன் கனங்குழையே"[16]

என்று கூறுவதால் தண்டியாசிரியர் கூறியவண்ணமே இவர் அலங்காரப்படலத்தை யாத்துள்ளார் என்பது நன்கு தெரியவரும். இந் நூல் ஐந்திலக்கணமும் கூறுகிறது. பொருளணிகள் முப்பத்தைந்தும், சொல்லணிகள் ஏழும் இந் நூலுள் உண்டு. பிறன் கோட் கூறல் என்னும் வகையால் தந்திர உத்தி, குணம், உரை முதலியவற்றையும் சொல்லணியின்பாற் வகைப்படுத்தி இந் நூல் உரைக்கிறது.

---

*16. வீரசோழியம், அலங்காரப் படலம், 1.*

### தண்டியலங்காரம்

3.18 வீரசோழியத்தை அடுத்துத் தோன்றிய நூல் தண்டியலங்காரம். காலம் கி. பி. பன்னிரண்டாம் நூற்ருண்டு. இதுவும் வடமொழியில் தோன்றிய காவியாதரிசத்தின் மொழிபெயர்ப்பாகும். காவியாதரிசத்தைத் தழுவித் தமிழில் தண்டியலங்காரம் எழுந்தது போன்றே கன்னடத்தில் 'கவிராஜமார்க்கம்' என்னும் நூலும், சிங்களத்தில் 'ஸிய-பஸ்-லகார' என்னும் நூலும் எழுந்தது இதன் பெருமையைக் கூறும் என்பர்.[17]

3.19 இது காவியாதரிசத்தின் மொழி பெயர்ப்பு நூலாயினும் இந் நூலின் சிறப்புப் பாயிரம் காவியாதரிசத்தைப் பற்றி எதுவும் கூருமல தொல்காப்பிய நெறிகளைக் கொண்டு இந் நூல் இயற்றப் பெற்றது என்று கூறுகிறது. இதனை,

"பன்னிரு புலவனின் முன்னவன் பகர்ந்த
தொல்காப் பியநெறி பல்காப் பியத்தும்
அணிபெறு மிலக்கண மரிதினில் தெரிந்து
வடநூன் வழிமுறை மரபினின் வழாது"

என்ற தண்டியலங்காரத்தின் சிறப்புப் பாயிரத்தால் நாம் உணரலாம். 'வட நூன வழி முறை மரபு' என இங்குக் கூறுவதும் எண்ணுதற் குரியது.

### அணியியலும் தண்டியலங்காரமும்

3.20 சிலப்பதிகாரத்தில் அடியார்க்கு நல்லார் காட்டும் இரு நூற்பாக்களும்,[18] மாறனலங்கார உரையாசிரியர் காட்டும் நூற்பாவும்[19] 'அணியியலில்' உள்ளன என்று கூறுவர். அந் நூற்பாக்கள் தண்டியலங்காரத்திலும் உள்ளன. இதனுல் இந் நூலுக்கு 'அணியியல்' என்னும் பெயரும் உண்டு என்பர்.

---

17. கலைக்களஞ்சியம், தொகுதி ஒன்று, பக். 212.

18. 'உரையும் பாடையும் விரவியும் வருமே'

'உதாரமென்ப தோதிய செய்யுளிற்
குறிப்பி னெருபொருள் நெறிப்படத் தோன்றல்'

சிலம்பு. உரைபெறுகட்டுரை, 4; மணிமேகலை படுத்தகாதை, அடி 26-27 உரை.

19. மாறனலங்காரம் நூற்பா 25 உரை.

3.21 "அடியார்க்கு நல்லாரால் அணியியலென்று எடுத்துக் காட்டப்பட்ட சூத்திரங்கள் தமிழ்த் தண்டியலங்காரத்துள் காணப் பட்டமையின் அங் நூலில் உள்ளனவாகவே இப் புத்தகத்தில் ஆங்காங்குக் குறிக்கப்பட்டன. ஆயினும் முற்காலத்து அணியிய லென்று பெயருள்ள அலங்கார நூலொன்று இருந்ததென யாப்பருங்கல விருத்தியுரை முதலியவற்ருல் புலப்படுகின்றமையின் இங் நூற் பெயர் இங்கே வேறு எழுதப்பட்டது'' என டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள் தம் குறிப்புரையில் கூறுவதும் இங்குக் கருதத் தக்கது.[20]

3.22 தண்டியலங்காரத்தின் தற்சிறப்புப் பாயிர உரையில் 'அணியினது இலக்கணம் உணர்த்தினமையான் அணியதிகாரம் என்னும் பெயர்த்து' எனக் குறிப்பிடப்படுவதால் 'அணியதிகாரம்' என்றும் இங் நூல் வழங்கப்பெறும் என்பர். ஆனுல் யாப்பருங்கல விருத்தி உரையாசிரியரும்,[21] நேமிநாத உரையாசிரியரும்[22] 'அணியியல்' என்னும் பெயருடன் மேற்கோளாகக் காட்டும் நூற்பாக்கள் இத்தண்டியலங்காரத்தில் காணப்படவில்லை. ஆதலால் இங் நூலுக்கு முன்னரே 'அணியியல்' என்னும் பெயருடைய நூல் ஒன்று இருந்தது என்பதும் விளங்கும். தண்டியாசிரியர் பிற நூற் செயயுள்கள் பலவற்றையும் உதாரணமாக எடுத்தாண்டது போல, தமக்கு முன்னிருந்த 'அணியியல்' என்னும் நூலிலிருந்தும் சில சூத்திரங்களை எடுத்துத் தண்டியலங்காரத்தில் இணைத்திருக்க வேண்டும். இவ்வாறு தண்டியலங்காரத்தில் கலந்த நூற்பாக்கள் அணியியல் நூற்பாக்கள் ஆதலால் அடியார்க்கு நல்லாரும், மாறனலங்கார உரை ஆசிரியரும் அங் நூற்பாக்களை 'அணியியல்' என்னும் பெயரோடு சுட்டியிருத்தல் கூடும்.[23] தண்டியலங்காரம் பொருளணிகள் 35ஐயும், சொல்லணிகளுள் மடக்கு, சித்திரக்கவி ஆகிய இரண்டையும் விரித்துக்கூறுகிறது. இறுதியில் வழுவையும் மலைவையும் விரிவாகக் கூறுகிறது.

3.23 பதினெட்டாம் நூற்ருண்டில் வாழ்ந்த பிரயோக விவேக நூலார் தண்டியாசிரியர் நூற்பாவுஞ் செய்து உரையும் உதாரணமும்

---

20. *சிலப்பதிகாரம், உ. வே. சா. ஐந்தாம் பதிப்பு, பக். 598.*
21. *யா. வி. சூ. 23. உரை.*
22. *நேமிநாதம், எழுத்து 4, உரை.*
23. *புலவர் சோம. இளவரசு, இலக்கண வரலாறு, பக். 133.*

எழுதினர் என்பர்.[24] சென்ற நூற்றுண்டில் தி. ஈ. சீநிவாச ராகவாசாரியாரென்பார் இத் தண்டியலங்காரத்தையொட்டி 'தண்டியலங்கார சாரம்' என்னும் வசன நூலை எழுதியுள்ளார். காபபிய இலக்கணத்தைப் பற்றிய பல அரிய செய்திகளை அது நமக்குத் தருகிறது.

### மாறனலங்காரம்

3.24 தண்டியலங்கார நூலைப் பெரும்பாலும் பின்பற்றித் தொல்காப்பியம் முதலிய நூல்களில் கண்ட செய்திகளைத் தழுவியும் புதிய பல அணிகளைக் கூறியும் இயற்றப்பட்டது மாறனலங்காரம். பதினாரும் நூற்றுண்டில் வாழ்ந்த திருக்குருகைப் பெருமாள் கவிராயர், ஆழ்வார்மேல் கொண்ட பத்தியினுல் அவர் பெயரினுலேயே இயற்றப்பட்ட நூலாகும். தண்டியாசிரியர் போலவே இவரும் எடுத்துக்காட்டுச் செய்யுட்களைத் தாமே இயற்றினர் என்பர். அறுபத்து நான்கு அணிகளைக் கூறிச் செல்லும் இந் நூலில் காப்பிய சம்பந்தமான பல செய்திகள் உண்டு. சொல்லணியில் மடக்கும், சித்திரகவியும் விரிவாகக் கூறப்படுகின்றன. எச்சவியலில் வழுவும் மலேவும் எடுத்துரைக்கப்படுகின்றன.

### இலக்கண விளக்கம்

3.25 கி.பி. பதினேழாம் நூற்றுண்டில் வைத்தியநாத தேசிகரால் இயற்றப்பட்ட நூல். முன்னூல்களின் தொகுப்பாய் அமைந்து மககளின் மனத்தில இடம்பெற்ற நூல்களுள் இதுவும் ஒன்று. ஐந்திலககணமும் கூறும் நூல். இலககண பாடம கூறி வருகையில் ஆசிரியர் தமக்குத் தோன்றிய கருத்துகளைக் குறித்து வைத்தும், திருத்தியும் புத்துரை வகுத்தும் பாடம் கற்பித்தார். அதுவே 'இலக்கண விளககம் என்னும் நூலாக உருப் பெற்றது எனபர்.[25] இதனைக 'குட்டித் தொல்காப்பியம்' என்றும் கூறுவதுண்டு. பெரும்பாலும் தண்டியலங்காரத்தைப் பின்பற்றியே எழுதிய நூலாகும்.

---

24. பிரயோக விவேகம், காரகப்படலம், 2, உரை.

25. சோமசுந்தர தேசிகர் ச. (பதினேழாம் நூற்றுண்டு) தமிழ்ப் புலவர்கள் வரலாறு, பக். 98.

## தொன்னூல் விளக்கம்

3.26 பிறநாட்டாரும் தமிழ் கற்றுப் புலமை பெற்று இலக்கண நெறி இயற்றும் அளவிற்குச் சிறந்து விளங்கினர் என்பதற்கு இந் நூல் ஓர் எடுத்துக் காட்டாம். இத்தாலி தேசத்து வித்தகரான வீரமாமுனிவர் 18ஆம் நூற்றுண்டில் ஐந்திலக்கணமும் விரித்து உரைத்த அரிய நூல் தொன்னூல் விளக்கம். தொன்னூல் பொன்னூலாக இலங்குகிறது என்பர் டாக்டர் சேதுப்பிள்ளை அவர்கள்.[26]

3.27 முந்திய இலக்கண நூல்கள் பொருளணியை முற்கூறிச் சொல்லணியைப் பிற்கூறியிருக்கும் மரபை விடுத்து, இந் நூலில் அணியதிகாரத்தில் 'சொல்லணி' முன்னர் வைக்கப்பட்டுப் 'பொருளணி இயல்' பின்னர் வைக்கப்பட்டுள்ளது புதுமையாகும்.

3.28 தண்டியலங்காரம், மாறனலங்காரம் முதலிய அணி நூல்கள் கூறும் கோமுத்திரி, கூட சதுக்கம் முதலிய சித்திரக் கவிகளை இக் காலத்தில் புலவர் பெருமக்கள் பெரிதும் மதித்துப் போற்றுவதில்லை. எனவே வீரமாமுனிவர் இவற்றையெல்லாம் வழக்காற்றில் வழங்காச் சொல்லணிகள் என்று தம்முடைய நூலுள் இவற்றிற்கு விளக்கம் தாராது ஒதுக்கியுள்ளார்.[27] அணியதிகாரத்தில் சிலவற்றைச் சேர்த்தும் சிலவற்றை நீக்கியும் இயற்றியுள்ளார். தற்குறிப்பேற்ற அணியினை 'ஊகாஞ்சித அணி' (சூ. 346) என்று கூறுவர். இவர் கூறுகின்ற 'விடையில் வினு அணி'யும் (சூ. 362), 'வினுவில்' விடை அணியும்' (சூ. 363) புதுமையானவையாம்.

## முத்துவீரியம்

3.29 பத்தொன்பதாம் நூற்றுண்டின் பிற்பகுதியில் உறை யூரைச் சேர்ந்த முத்துவீர உபாத்தியாயரால் இயற்றப்பட்ட நூலாகும். இது ஐந்திலக்கணமும் கூறும் நூல். இன்றைக்கு இந் நூலினைப் பயில்வாரே இல்லையெனலாம். இந் நூலும் சொல்லணியியலை முன்வைத்துப் பின்னர் பொருளணியியலையும், இறுதியாகச் செய்யுளணியையும் கூறுகிறது. 58 வகையான

26. இலக்கண வரலாறு, பக். 207.

27. தொன்னூல் விளக்கம், நூ. 324 உரை.

பொருளணிகளும், 14 வகையான சொல்லணிகளும் இந் நூலில் விரிவாகக் கூறப்படுகின்றன.

### சாமிநாதம்

3.30 சாமிகவிராசர் என்னும் புலவரால் இயற்றப்பட்ட இந் நூல் பத்தொன்பதாம் நூற்றுண்டின் பிற்பகுதியில் எழுந்ததாகும்.

'எழுத்து சொற் பொருள் யாப்பு
அலங்காரம் என்னும் ஐந்து
அமிழ்தின் இலக்கண விரிவோர்
ஒன்றொரு மூன்றியலாய்
அடக்கியிச் சுவாமி நாதத்தில்
மொழிகு வேனே'

என்னும் இந்நூலின் நூற்பாவால் இந் நூல் ஐந்திலக்கணமும் உணர்த்தும் நூல் என்பது தெளிவாகும். இன்று இந் நூல் முற்றும் உள்ளதா என்று தெரியவில்லை. [28]

### சந்திராலோகம்

3.31 இந் நூல் நூறு அணிகளைப் பற்றிக் கூறுகிறது. சென்ற நூற்றுண்டில் வாழ்ந்த திருத்தணிகை விசாகப் பெருமாளையர் இந் நூலைத் தமிழில் உரைநடையாக மொழி பெயர்த்துள்ளார். இதுவே 'இலக்கணச் சுருக்க வினு விடை' என்னும் நூலில் அமைந்த அணியிலக்கணப் பகுதியாகும். அவர் இயற்றிய 'பால போத இலக்கணம்' என்னும் நூலிலும் இது பின்னர் இடம் பெற்றிருந்தது. 1904-இல் இதனையே மதுரைத் தமிழ்ச் சங்கத்தார் 'யாப்பணியிலக்கண வினு விடை' என்னும் பெயரிலும், 1937-இல் சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகத்தார் 'அணியிலக்கணம்' என்னும் பெயரிலும் வெளியிட்டுள்ளனர். உரை நடையில், ஏற்ற உதாரணச் செய்யுள்களோடு இந் நூல் நன்கு விளங்குகிறது. மு. இராகவையங்காரின் தந்தையார் முத்துச் சாமி ஐயங்கார்

---

28. தமிழ்ப் பொழிலில் (துணர். 4) திரு. இ. கோவிந்தசாமிப் பிள்ளை அவர்கள் இந் நூலின் எழுத்ததிகாரத்தில் உள்ள எழுத்தாக்க மரபு, பதமரபு ஆகிய இரண்டு இயல்களையும் வெளியிட்டுள்ளார். இலக்கண வரலாறு—பக். 221.

என்பாரும் இந் நூலினை ஆசிரியப்பாவில் மொழி பெயர்த்துள்ளார் என்று தெரியவருகிறது.

### குவலயாநந்தம்

3.32 சந்திராலோகத்தின் வடமொழியுரையே 'குவலயாநந்த'மாகும். அப்பைய தீட்சிதர் என்பவர் இதனை இயற்றினர். தமிழில் மாணிக்கவாசகர் என்பார் மொழிபெயர்த்துள்ளார். பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் (1895) வாழ்ந்த சங்கர நாராயண சாஸ்திரி என்பவர் இதனைக் கட்டளைக் கலித்துறைப் பாவில் மொழிபெயர்த்தும், முகவூர் மீனாட்சிசுந்தரக் கவிராயர் எடுத்துக்காட்டுச் செய்யுள்களை மொழிபெயர்த்தும் வெளியிட்டுள்ளனர். இந் நூலில் 120அணிகள்பற்றிய இலக்கணம் கூறப்படுவது குறிப்பிடத் தக்கது.

### தொனி விளக்கு

3.33 இந் நூல் வடமொழி அலங்கார இலக்கண நூல்களுள் சிறந்தது எனப் போற்றப் பெறும் 'த்வந்யா லோகத்தின்' மொழி பெயர்ப்பாகும். காஷ்மீரத்தில் அவந்திவர்மன் அவையில் இருந்த புலவர்களுள் ஒருவரான ஆனந்தவர்த்தனரால் இயற்றப்பெற்றது. இதனைத் தமிழில் பின்னங்குடி சா. சுப்பிரமணிய சாஸ்திரி அவர்கள் நூற்பாவாக மொழி பெயர்த்து (1944), உரையையும் தாமே இயற்றி வெளியிட்டுள்ளார். மேற்கோள் பாடல்களையும் வட மொழியினின்றும் மொழி பெயர்த்துக் காட்டியுள்ளார்.

3.34 மேலே சுட்டப்பட்ட வீரசோழியம் நூல் முதலாக தொனி விளக்கு உரை ஈறாக எழுந்த நூல்கள் அனைத்தும் வடமொழியின் கூட்டுறவால் மலர்ந்தவையாம். இவை அனைத்திற்கும் பெரும்பாலும் மூலநூலாகத் திகழ்வன வடமொழி நூல்களே. இவற்றுள்ளும் தண்டியலங்காரமே இன்று மிகுதியாகப் பயிலப்படுகிறது. காரணம் அதன் எளிமையும் இனிமையுமே. பொதுவாக அணிகளையும் அதன் இலக்கணத்தைக் கூறும் நூல்களையுமே இதுவரை கண்டோம்.

## 3. சார்பு நூல்கள்

3.35 இதற்குப் பின்னர் இவைகளைப் பின்பற்றி எத்துணையோ சார்பு நூல்கள் எழுந்தன. தனியாகச் சொல்லணிகளை மட்டும் கொண்டதாகவும், சொல்லணியினுள்ளும் ஒரு சில பிரிவினை மட்டும்

விளக்குவதாகவும் பல நூல்கள் எழுந்தன. இவை யெல்லாம் இன்று போற்றுவாரின்றிக் காணப்படுதற்குக் காரணம் இந் நூல்கள் அனைத்தும் செயற்கை அழகுதரும் அணியலங்கார நெறியினைக் கொண்டிருப்பதுதான்.

*சித்திரக் கவிகள்*

3.36 சான்ருகச் சிலவற்றைக் காண்போம். 'சித்திரக் கவிகள்' என்னும் நூல் எழுத்து வருத்தனை, மாத்திரை வருத்தனை முதலிய பற்பல சித்திரக் கவிகள் அடங்கிய தொகுதியாகும். நா. க. உ. கல்விக் களஞ்சியப் புலவரால் 1888இல் இயற்றப் பெற்றது. அதே ஆண்டில் 'சோடசபங்கியும் இரட்டை நாகபந்தமும்' எனனும் நூலும் திரு. காமுசெட்டியார் என்பவரால் இயற்றப் பெற்றது இந் நூலில் 16 பாடலகள் நிரோட்டமாக உள்ளன. தண்டபாணி சுவாமிகள் 'மாலை மாற்று ஏகபாதம்' என்னும் சித்திரக்கவி நூலை 1879இல் வெளியிட்டுள்ளார். 1902இல் 'சித்திரகவிப் புஞ்சம்' என்னும் நூலை மதுரகவிப் புலவர் வெளியிட்டுள்ளார். 1903இல் சோழவந்தான் அ. சண்முகம் பிள்ளை அவர்கள் 'மாலை மாற்று மாலை மூலம்' என்னும் சித்திரக கவிகள கொண்ட ஒரு நூலை யாத்துள்ளார்.

*அலங்கார மாலை*

3.37 நூறு அலங்காரங்களின் பெயர்களைக் கூறும் 'துறைசைச் சதாலங்கார' நூலைத் திரு. சபாபதியா பிள்ளை அவர்கள் 1884ஆம் ஆணடிலும், 'திருவரங்கத்திலெழுந் தருளிய அரங்கரலங்காரமாலை' என்னும் நூலைத் திரு. நாராயணசாமிப் பிள்ளை அவர்கள் 1888ஆம் ஆண்டிலும் வெளியிட்டுள்ளனர். இவை இறைவனைச் சார்த்திப் பாடிய நூல்களாம். ஒவ்வொரு செய்யுளிலும் ஒவ்வோர் அலங்காரத்தின் இலக்கணமும் இலக்கியமும் அரங்கநாதனைப் பற்றி வந்துள்ளமையால் 'அரங்கர் அலங்கார மாலை' என்னும் பெயர் பெற்றது. இவ்வாறே திருக்கழுக்குன்றம் வேதகிரீசர் மேற்பாடிய 'ஆரணச் சைலரலங்கார பஞ்சகம்' என்னும் நூல் உவமை முதல் ஏது ஈருக நூறு அலங்காரங்களைக் கூறுகின்றது. இஃது வெண்பா, கட்டளைக்கலித்துறை, ஆசிரியப்பா, ஆசிரிய விருத்தம், சந்த விருத்தம் எனனும் பா விகற்பங்களால் இயற்றப்பட்ட நூலாகும். இது திருஞானசம்பந்த முதலியாரால் 1900ஆம் ஆண்டில் வெளியிடப்பட்டது.

### இலக்கண தீபம்

3.38 செந்தமிழ் 14-ஆம் தொகுதியில் (1915—1916) வெளியிடப்பெற்ற 'இலக்கண தீபம்' என்னும் ஒரு நூலும் ஐந்திலக்கணத்தைப்பற்றி மிகச் சுருக்கமாக 14 பாடல்களில் கூறுகிறது. இச் சிறுநூல செய்யுளியற்றப் புகுவார் பிறவிலககணங்களும் அறிந்துகொள்ளுதற்கு ஏதுவாகப் பெயர்களையெல்லாம் தொகுத்துச் சொல்லுகின்றது. அணிநூல்களில் கூறப்படும் அத்துணைப் பெயர்களையும் ஒரே பாடலில் இந் நூல் சுருக்கித் தந்து விடுகிறது. அது வருமாறு:

ஈரிரு வகைச்செய்யு ளுந்தொடர் நிலைக்கு அங்கம்
　　எழுநான்கும் எக்குணமுமாம்·
எவ்வகைச் செய்யுட்கு மிருநெறிகள் மற்றவைகள்
　　எய்துங் குணங்கள்பத்தும்
பேரிடும் பொருளணிகள் முப்பத்து நாலும்விரி
　　பெருகு நூற்றிரண்டு
பின்னையெழு வகைமடக்கு அடிநான்கில் ஐம்மூன்று
　　பேதத்தின் நூற்றைந்து மேற்
சேரவடி முழுதுமொரு சொல்லும் ஓரெழுத்தாத்
　　திரும்பிய மடக்கும் இருபான்
சித்திரமு மானசொல் லணிமுழுதும் வழுமலைவு
　　திரிபொன் பதும்ஆறுமென்று
ஆரிய மொழிந்தபடி தமிழான் மொழிந்திடும்
　　அலங்கார லக்கணமெலாம்
அறிந்துசொல் வதிலக்கணக்கவிதை யல்லாதது
　　அவலக்க ணக்கவிதையே. (எண், 9)

காலப் போக்கில் வளர்ந்த பல்வேறு அணியின் பெயர்களையும் இப்பாடல் தொகுத்துத் தருவதும் அணியின் வரலாற்று வளர்ச்சியைக் காட்டும்.

### உவமைத் தொகுப்பின் பயன்

3.39 இவ்வாறு அணிகள் வளர்ந்ததைத் தொகுத்து அளித்ததைப் போலவே உவமையையும் உவமப்பொருள்களையும் முன்னோர்கள் தொகுத்தளித்துள்ளார்கள். உவமையினின்றும் பிறந்த அலங்காரம் எப்படியெல்லாம் பல்கிப் பெருகுகிறது என்பதனை இது காட்டும். இலக்கியச் செல்வங்களிலே வழிவழியாக எடுத்துக்காட்டி

வரும்—உவமை மணிகளை ஒருங்கு திரட்டிப் பார்த்தால் அவர்களின்—நுண்மாண் நுழைபுலத்தையும், பழக்கவழக்கத்தையும் பண்பாட்டையும் இன்னபிற செய்திகளையும் இனிது அறியமுடியும். சங்கத் தொகை நூல்களிலும், பக்தி இலக்கியங்களிலும் இயற்கை யோடு இயைந்த உலகியற் காட்சிகள், வாழ்வோடு நெருங்கிய தொடர்புடைய பொருள்கள், நிகழ்ச்சிகள் முதலியன உவமையாகத் தரப்பட்டிருத்தலைக் காணலாம். பிற்காலக் காவியங்களிலும், பிரபந்தங்களிலும் வரவர—இயற்கையுணர்வு குறைந்து செயற்கைப் புனைவுகளும் கற்பனைக் கருத்துகளும், புராண வரலாறுகளும் உவமைகளாக இடம் பெறும் இயல்பும் புலனாகிறது.[29]

### உவமான சங்கிரகம்

3.40 முக்கியமாக இன்ப வாழ்வுக்குத் துணை நிற்கும் மகளிரின் உறுப்புகளை உவமைகளால் வருணித்தலையே எல்லாவகை நூல்களிலும் பரக்கக் காணலாம். இன்ப உணர்ச்சி கருதியோ என்னவோ பெண்பாலார் உறுப்புகளுக்கு இணையாக உவமைகளைத் தொகுத்துப் பார்ப்பதில் முன்னையோர் சிலர் முனைந்தனர். கி.பி. 14ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவராகக் கருதப்படும் சீவில்லிபுத்தூர்த் திருவேங்கடையர் செய்த ‘உவமான சங்கிரகம்’ என்னும் நூல் இவற்றுள் சிறப்பாகக்கருதத் தக்கது. மகளிரின் கூந்தல் தொடக்க மாகக் காலடிவரையில் ஒவ்வோர் உறுப்புக்கும் ஒப்பாகச் சொல்லத் தகுந்த உவமைகளை இதனுள் தொகுத்துத் தருகின்றார் ஆசிரியர்.

3.41 உவமான சங்கிரக நூல்கள் எந்தெந்தப் பொருள்களை எவ்வெவற்றிற்கு உவமையாகக் கூறவேண்டும் என்பதனைத் தொகுத்துத் தருகின்றன. தமிழில் மூன்று உவமான சங்கிரக நூல்கள் உள்ளன. அவற்றுள் ஒன்று ஆறுமுக நாவலரால் ‘இரத் தினச் சுருக்கத்துடன்’ சேர்த்து வெளியிடப் பட்டதாகும். மற்றொன்று கொங்கு நாட்டுப் புலவர் இயற்றிய ஆசிரிய விருத்தத்தால் ஆன நூல். மூன்றாவது நூல் செந்தமிழ் பதினான்காம் தொகுதியுள் (பக் 161-165) வெளியிடப் பட்டுள்ளது. ஆறுமுக நாவலரால் வெளி யிடப்பட்டுள்ள இந்த நூலில் திருவேங்கடையர் இயற்றியுள்ளதாகக் கூறப்பட்டுள்ளது. ஆனால் அவ்வாறு குறித்திருப்பது தவறு என்றும், அதனை இயற்றியவர் திருமேனிகுருகை இரத்தின கவிராயரே

29. திருக்குறள் அணிநலம்-பக். 135.

என்றும் செந்தமிழ் பதினுன்காம் தொகுதியுள் திரு. சடகோப ராமாநுசாசார்யர் கூறியுள்ளார் (பார்க்க. பக். 537—உரையா சிரியர்கள்—மு. வை. அரவிந்தன்). உவமான சங்கிரகத்தைப் போலவே புகழேந்திப் புலவரால் செய்யப்பெற்றதாகக் கருதப்பெறும் ‘இரத்தினச் சுருக்கம்’ என்ற நூலும் வெண்பாவால் அமைந்து உவமைப்பொருளைத் தொகுத்து உரைக்கின்றது.

3.42 உலக வசனங்களாகிய பழமொழிகளை அகராதி வரிசையில் தொகுத்து ‘உவமைச் சொல் அகராதி’ என்னும் நூலைத் திரு. சுப்பராயலுநாயகர் அவர்கள் 1872இல் அளித்துள்ளார்.

### மறைந்த அணிநூல்கள்

3.43 இது போன்று இன்னும் பல்வேறு நூல்கள் அணியிலக் கணத்தைப் பற்றியும் அதனைச் சார்ந்தும் தோன்றியிருக்க வேண்டும் என்று கருதப்படுகிறது. அவற்றுள் எத்துணை நூல்கள் மறைந்தனவோ? மறக்கப்பட்டனவோ? ‘மறைந்து போன தமிழ் நூலகள்’ என்னும் நூலில் அறிஞர் மயிலை சீனி வேங்கடசாமி அவர்கள் அழிந்து போன இலக்கண நூல்கள் பலவற்றைக் குறிப்பிடுகிருர். இவற்றுள் 1. அணியியல் 2. கவிமயக்கறை 3. புணர்ப்பாவை 4. போக்கியம் 5. இரணியம் 6. வதுவிச்சை 7. பெரிய முப்பழம் என்னும் நூல்கள் அணியிலக்கண நூல்களாக இருக்கலாமோ என்ற ஐயம் எழுகிறது. இவை பெரும்பாலும் உரைகளில் சித்திரக்கவிகளைப் பற்றிக் கூறுகின்ற இடத்தில் குறிப்பிடப் பட்டுள்ளமையால் அணிநூல்களாகக் கருதலாம்.

3.44 இவற்றுள்ளும் சில நூல்கள் ஏனைய இலக்கணங்களைப் பற்றியும் கூறியிருக்கலாம். மொத்தம் அழிநத நூல்களுள் (44) நூற்றுக்குப் பதினுறு விழுக்காடு அணிநூலகள் எனலாம். இவை அனைத்தும் இன்று கிடைக்கப்பெறின் தொன்மைத் தமிழிலக் கணத்தின் அணி நுட்பத்தை நன்கு தெளியலாமன்றே?

## 5. ஒப்பு நோக்கு ஆய்வு

*தண்டியலங்காரமும் மாறனலங்காரமும்*

3.45 மாறனலங்காரம் தண்டியலங்காரத்தின் வழி நூல். தண்டியலங்காரம் கூறிய பொருளணிகள் 35. ஆனல் மாறனலங்

காரம் 64 அணிகளைக் கூறுகின்றது. இவ்வாறு விரிதற்குரிய காரணத்தை ஆய்வோமாயின் பல செய்திகள் நமக்குத் தெளிவாகலாம். சில அணிகள் வேறணிகளின்பாற் படுதலினுற் குறைத்தார். பொருள்கோள் முதலியவற்றை அணியாகச் சேர்த்தார். உவம விரியுள் கூறியவற்றைத் தனி உவமைகளாகவும் கூறியுள்ளார்.

3.46 தண்டியாசிரியர் கூறிய 'நுட்பம்' என்னும் அலங்காரம் 'பரிகரத்துள்' அடங்குதலால் அதைக் குறைத்தார். சொல்லிலக்கணத்திலும், பொருளியலிலும் புறத்திணையியலிலும் கூறியுள்ளதுமான, மற்ற அணி நூல்களில் கூறப்படாதனவு மாகிய 'பூட்டுவில்,' 'இறைச்சிப் பொருள் கோள்,' 'பொருண்மொழி' என்னும் மூன்றையும் செய்யுட்கணி செய்தலால் இவற்றையும் அணியுடன சேர்த்துமிகுத்தார். வகை முதலடுக்கு, இணையெதுகை, உபாயம், உறுசுவை, புகழ்வதினிகழ்தல் முதலியனவும் அழகு தருவதாயிருத்தலாலும், இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் இயம்பும் முறையாலும் இவற்றையும் அணிவகையாக விரித்துரைத்தார். தண்டியாசிரியர் உவம விரியுள் சேர்த்தும், ஏனையோர் வேறு வேருக இணைத்துமிருக்கிற ஐயம், தெரிதரு தேற்றம், பொதுநீங்குவமை என்பவற்றுள் ஐயத்தையும், தெரிதரு தேற்றத்தையும் பிறிதோரணியாககிக் கூறியுள்ளார். தன்கோட் கூறலென்னும் உத்தியானும், தன் குறியிடுதல் என்னும் உத்தியானும், பின்னேன் வேண்டும் விகற்பங் கூறி முடிக்கும் வழி நூலிக்கணம் பற்றியே இவர் இவ்வாறெல்லாம் விரித்துரைத்திருப்பர் என்று கருதுவர். [30]

3.47 இவ்வாறே ஏனைய அணியிலக்கண நூல்களையும் ஒன்ருேடொன்று ஒப்பு நோககியும், உற்று நோக்கியும் ஆராய்ந்தால் அணிகள் விரிந்து பலகிப் பெருகிய வகையினை ஒருவாறு அறியலாம். [31] இதுபோன்றே தொல்காப்பியர் கூறிய நால்வகை

30. மாறனலங்காரம், முன்னுரை, பக். 13.

31. ஐவகை இலக்கணம் கூறும் நூல்கள்

| எண் | நூலின் பெயர் | காலம் | மொ. அணிகள் பொருள் | சொல் |
|---|---|---|---|---|
| 1. | தொல்காப்பியம் | கி. மு. 3 அல்லது 4 | உவமை மெய்ப்பாடு | |
| 2. | வீரசோழியம் | கி. பி. 11 | 35 | 7 |
| 3. | இலக்கணவிளக்கம் | கி. பி. 17 இறுதி | 35 | 2 |
| 4. | தொன்னூல்விளக்கம் | கி. பி. 18 | 30 | 30 |
| 5. | முத்து வீரியம் | கி. பி. 19 | 58 | 14 |

(குறிப்பு) நன்னூலும் ஐந்திலக்கணமும் கூறிய நூல் என்பர்.

உவமையினைத் தண்டியாசிரியர் மூன்றாகப் பகுத்துக் கொண்டார். இதனைக் கூர்ந்து ஆய்வோமானால் பல செய்திகள் தெரிய ஏதுவாகும். மெய்ப்பாட்டியலும் சுவையும் பற்றி ஆய்ந்தாலும் பல செய்திகள் கிடைக்கக்கூடும்.

### மெய்யுவமையும் பண்புவமையும்

3.48 பழந்தமிழ் இலக்கணமான தொல்காப்பியத்தில் உவமை வினை, பயன், மெய், உரு எனப் பொதுத் தன்மையால் நான்கு வகையாகப் பகுக்கப் பட்டுள்ளது.[32] ஆனால், தண்டியலங்கார ஆசிரியர் மெய்யுவமை எனத் தனியாக ஒன்றினைக் கூறாது மெய், உரு இரண்டையும் சேர்த்துப் பண்புவமையில் அடக்கி உவமையினை மூன்றாகப் பகுத்தார்[33] ஆயின் மாறனலங்காரம் முதலான நூல்கள் தொல்காப்பியர் பிரித்தவாறே நால்வகையாகப் பகுத்து மெய்யுவமத்தையும் உருவுவமத்தையும் தனித்தனியே கூறுகின்றன.[34] மாறனலங்காரம் இதனை 'உறுப்புவமை' என்றும்,[35] வீரசோழியம் இதனை 'வடிவுவமை' என்றும் கூறும்.[36]

3.49 தண்டியாசிரியர் கூறியவாறு வடிவும் வண்ணமும் பண்பில் அடங்குமாயினும், இவை இரண்டும் தம்முள் கட்புலனாம் பண்பினாலும், உற்றுணரும் பண்பினாலும் வேறுதல் உடையன. மெய்யாகிய வடிவினை இருட்பொழுதிலும் கையினால் தொட்டறிந்து கொள்ளமுடியும்; வண்ணமாயின் அவ்வாறு தொட்டறிந்து கொள்ளல் இயலாது. இது குறித்தே முன்னோர் வடிவும் வண்ணமும் எனத் தனித்தனியாகப் பிரித்தனர் போலும்.

---

அணியிலக்கணம் மட்டும் கூறும் நூல்கள்

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | தண்டியலங்காரம் | கி. பி. 12 | 35 | 2 |
| 2. | மாறனலங்காரம் | கி. பி. 16 | 64 | 2 |
| 3. | சந்திராலோகம் (அணியிலக்கணம்) | கி. பி. 19 | 100 | 2 |
| 4. | குவலயாநந்தம் | கி. பி. 19 | 120 | |

32. தொல். உவம. 1.
33. தண்டி. 30.
34. மாறன். 92.
35. ,, 92.
36. வீரசோழியம், 156.

## மெய்ப்பாட்டியலும் சுவையணியும்

3.50 தொல்காப்பியத்தில் கவிதைக்கு மிகவும் இன்றியமை யாததான 'மெய்ப்பாடு' குறித்து நன்கு விளக்கப்பட்டுள்ளது. நாடகந் தழுவிய கூத்து நூல்களுக்கு மட்டுமே இஃது உரியதன்று. எல்லாவற்றிற்கும் உரியதாம். 'உணர்ச்சியின் வெளிப்பாடுதான் கவிதை' என்றார் வேர்ட்ஸ்வொர்த் [36a] இக் கருத்தினைப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னரேயே தொல்காப்பியர் நன்குணர்ந்து 'மெய்ப்பாட்டியல்' எனத் தனி இயல் வகுத்தார். ஆயின் பிற்காலத்து வந்த அணி நூல்கள் இதனைச் சுவையணியின்பாற் படுத்தின. விரிந்த அளவில் இந்நூல்கள் சுவை பற்றிப் பேசவில்லை. 'சுவை யுணர்வு' பாடல்களுக்கு உயிர்நாடி போன்றது. சிறப்பாகக் கூத்து நூலிலும், நாடக நூலிலும் இதனை நன்கு விவரித்து உரைக் கின்றனர். இதன் சிறப்பும் பொருத்தமும் கருதியே தொல்காப்பியர் செய்யுளியலுக்கும் அதனோடு இயைபுடைய உவம வியலுக்கும் முன்னர் இதனை வைத்தனர்போலும்.

3.51 இதனை வடநூலார் போற்றியுரைத்து 'ரசம்' என்று வழங்குகின்றனர். பரத முனிவர் தம் 36 அத்தியாயங்கள் கொண்ட நாட்டிய சாஸ்திரத்தில் 15 முதல் 18ஆம் அத்தியாயம் வரையில் அலங்கார சாஸ்திரங்களை விளக்குகிறார். சிருங்காரம், வீரம், ஹாஸ்யம், ரௌத்திரம், கருணம், பயாநகம், அற்புதம், பீபத்ஸம் என்ற எட்டு ரசங்களைப் பற்றிக் கூறுகிறார். இவ்வெட்டிற்கும் உரிய மனோநிலைகள், இம்மனோநிலையில் ஒருவர் இருக்கும்போது ஏற்படும் உணர்ச்சி அலைகள், உணர்ச்சி மேம்பாட்டால் உடலில் ஏற்படும் மாறுபாடுகள் பற்றியும் கூறுகிறார். [37] தொல்காப்பியரின் மெய்ப் பாட்டியலோடு இப்பகுதியினை ஒத்து ஆய்ந்தால் மேலும் பல புதிய செய்திகள் கிடைக்கக்கூடும். [38]

3.52 இங்ஙனம் நூல்களில் கூறப்பட்டுள்ள ஒவ்வோர் உவமை யினையும், ஒன்றனோடு ஒன்றனை ஒப்பு நோக்கி ஆய்ந்தால் மேலும்

---

36-a. Wordsworth's Literary Criticism, p. 156.

37. *கலைக்களஞ்சியம், தொகுதி ஒன்று, பக். 211.*

38. பார்க்க. கட்டுரை. A study of Rasa—Tolkāppiyar and Bharata—By Thiruganasambandam, P., Page 10, Proceedings of the First International Conference Seminar of Tamil Studies—April 1966, Vol. II.

மேலும் பெருகுமாதலாலும், அது பரந்துபட்ட விரிந்த பொருளாதலின் விடுக்கப்பட்டது. ஆயினும் அணி நூல்களில் கூறப்பட்ட எல்லா அணிகளுக்கும் உவமையே அடிப்படை என்பது கருத வேண்டிய ஒன்ருகும்.

### உவமையே அணிகளுக்கு அடிப்படை

3.53 பிற்காலத்தாரைப் போல் அணியைப் பலவகையாகப் பாகுபாடு செய்யாது தொல்காப்பியனுர் உவமை ஒன்றையே கூறி, ஏனைய அதன் திரிபுகளே என்று உணரவைத்தார். 'அணியியல்'என்ற பெயரும் தாராது, 'உவமவியல்' எனப் பெயரிட்டது அவருடைய நுண்மாண் நுழைபுலத்தைக் காட்டும்.

3.54 இங்ஙனம் உவமமே பிற எல்லா அணிகளும் அமையக் காரணமாய் இருந்தது என்பதனை வடமொழி அறிஞர்களும் ஒப்புக் கொள்கின்றனர். அப்பைய தீட்சிதர் தாமெழுதிய 'சித்திரமீமாம்சை' என்னும் நூலில் இக் கருத்தைத் கூறியுள்ளதும் கவனிக்கத் தக்கது. அதனுடைய தமிழாக்கமாகப் பின்வரும் நூற்பாவைக் கூறுவர்:

உவமை என்னும் தவலருங் கூத்தி
பல்வகைக் கோலம் பாங்குறப் புனைந்து
காப்பிய அரங்கில் கவினுறத் தோன்றி
யாப்பறி புலவர் இதயம்
நீப்பறு மகிழ்ச்சி பூப்ப நடிக்கும்மே

உவமையென்னும் நாடக மகளே பல்வகைக் கோலம் பாங்குறப் புனைந்தாடுகிருள் என்பதுதான் எத்துணை உண்மை?

"எல்லாவித அலங்காரங்களும் உவமையணியின் விஸ்தாரங் களைத் தவிர வேருென்றுமில்லை; 'உபமாலங்காரமே அலங் கார சாஸ்திரத்தின் பிராணன்' என்று பழைய இலக்கணகாரர் சொல்லுகிருர்கள்" 39

என்று சுப்பிரமணிய பாரதியார் கூறியுள்ள இக் கருத்தும் இங்கு நினைவுகூர்தற் குரியதாகும்.

## 6. தொகுப்புரை

3.55 தமிழில் அணியிலக்கண நூல்கள் தோன்றி வளர்ந்த முறைப்படி, கால அடைவில் அவற்றைப் பற்றிய செய்திகள் இவ்வுரையில் தொகுத்துத் தரப்பட்டன. காலந்தோறும் அணிகள்

39. பாரதியார் கட்டுரைகள், கலைகள், பக். 91.

பெருகி வந்த வகையினை இந் நூல்களால் நாம் இனிதுணருகிறோம். தனித்தனியாக ஒவ்வொரு நூல் கூறும் பொருளையும் ஒப்பு நோக்கி ஆய்ந்தால், இன்னும் பல்வேறு செய்திகளை நாம் அறிதல் கூடும் இதற்கு எடுத்துக் காட்டாக மெய்—பண்பு உவமைகளைப் பற்றியும், சுவையைப் பற்றியும் ஒப்பு நோக்கும் முறையில் இவ்வுரையில் சுருக்கமாக ஆராயப் பெற்றுள்ளன.

3.56 அணி இலக்கண நூல்களின் வரலாற்றுச் சுருக்கமாக இவ்வுரை அமைந்துள்ளதே யன்றி உட்பொருள்களை ஆயும் நோக்கில் செல்லவில்லை. அவ்வாராய்ச்சி மிக விரிந்துபட்டுச் செல்லுமாதலின் அதனைத் தனியாக ஆய்வது பொருத்தமாகும்.

---

## துணை நூல்கள்

### இலக்கணம்

1. அணியிலக்கணம், திருத்தணிகை விசாகப் பெருமாளையர், கழக வெளியீடு, சென்னை, 1970.

2. இலக்கண விளக்கம், வைத்தியநாத தேசிகர், சி. வை. தாமோதரம் பிள்ளை பதிப்பு, சென்னை, விரோதி வருடம் (1889).

3. இறையனார் அகப்பொருள், கழக வெளியீடு, சென்னை, 1958.

4. குவலயானந்தம், சங்கரநாராயண சாஸ்திரிகள் மொழி பெயர்ப்பு, ஆர்பனேஜ் அச்சுக்கூடம், சென்னை, 1895.

5. தண்டியலங்காரம், கு. சுந்தரமூர்த்தி பதிப்பு, திருவிடை மருதூர், 1967.

6. தண்டியலங்கார வினாவிடை, வ. தங்கைய நாடார், பாளையங் கோட்டை, 1953.

7. திருவேங்கடையர் செய்த உவமான சங்கிரகமும், புகழேந்திப் புலவர் செய்த இரத்தினச் சுருக்கமும், ஆறுமுக நாவலர் பதிப்பு, அக்ஷய வருஷம், மார்கழி மாதம்.

8. தொல்காப்பியம், பொருளதிகாரம், இளம்பூரணர் உரை, கழக வெளியீடு, சென்னை, 1953.

9. தொல்காப்பியம், பொருளதிகாரம், பேராசிரியர் உரை, கனகசபாபதிப் பிள்ளை பதிப்பு, 1935.

10. தொன்னூல் விளக்கம், வீரமாமுனிவர், கனம் ஜி. மெக்கன்ஜி காபன் அய்யர் பதிப்பு, சென்னை, 1891.

11. நன்னூல், சங்கர நமச்சிவாயப் புலவர் விருத்தியுரை, கழக வெளியீடு, சென்னை, 1958.

12. நேமிநாதம், கா. ர. கோவிந்தராச முதலியார் குறிப்புரை, கழக வெளியீடு, சென்னை, 1964.

13. பிரயோக விவேகம் மூலமும் உரையும், சுப்பிரமணிய தீட்சிதர், ஆறுமுக நாவலர் பதிப்பு, சென்னை, 1959.

14. மாறனலங்காரம், திருக்குருகைப்பெருமாள் கவிராயர், செந்தமிழ்ப் பிரசுரம், மதுரை, 1929.

15. முத்துவீரியம், முத்துவீர உபாத்தியாயர், சென்னை, 1889.

16. யாப்பருங்கல விருத்தி, மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை பதிப்பு, அரசினர் சுவடி நூலக வெளியீடு, சென்னை, 1960.

17. வீரசோழியம், கா. ர. கோவிந்தராச முதலியார், கழக வெளியீடு, சென்னை, 1970.

### இலக்கியம்

1. சிலப்பதிகாரம், உ. வே. சாமிநாதையர், ஐந்தாம் பதிப்பு, 1950.

2. சிவஞான சித்தியார் சுபக்கம், கழக வெளியீடு, சென்னை, 1954.

3. திருக்குறள் மூலமும் பரிமேலழகர் உரையும், கழக வெளியீடு, சென்னை, 1953.

4. மணிமேகலை, கழக வெளியீடு, சென்னை, 1960.

### ஆராய்ச்சி நூல்கள்

1. இலக்கண வரலாறு, புலவர் சோம. இளவரசு, தொல்காப்பியர் நூலகம், சிதம்பரம், 1963.

2. உரையாசிரியர்கள், மு. வை. அரவிந்தன், மணிவாசகர் நூலகம், சிதம்பரம், 1968.

3. தமிழ் மொழி இலக்கிய வரலாறு, டாக்டர் மா. இராசமாணிக்கனார், பாரி நிலையம், 1963.

4. தமிழ் மொழியின் வரலாறு, வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார், ஜி. ஏ. நடேசன் அண்டு கம்பெனியார், சென்னை, 1903.

5. தமிழ்க் காப்பியங்கள், கி. வா. ஜகந்நாதன், சென்னைப் பல்கலைக்கழகம், 1940.

6. தமிழ்ப் புலவர்கள் வரலாறு, (பதினேழாம் நூற்றுண்டு) ச. சோமசுந்தர தேசிகர், பாரதி விஜயம் பிரஸ், சென்னை, 1939.

7. திருக்குறள் அணிநலம், இ. சுந்தரமூர்த்தி, சென்னைப் பல்கலைக் கழகம, 1971.

8. பாரதியார் கட்டுரைகள், கன்னித் தமிழ்ப் பதிப்பகம், மதுரை, 1956.

9. மறைந்துபோன தமிழ் நூல்கள், மயிலை சீனி வேங்கடசாமி, பாரி நிலையம், சென்னை, 1959.

அகராதி முதலியன

1. தமிழ் இலக்கிய அகராதி, ந. சி. கந்தையா பிள்ளை, ஆசிரியர் நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1952.

2. தமிழ்ப் புலவர் அகராதி, ந. சி. கந்தையா பிள்ளை, ஆசிரியர் நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1960.

3. தமிழ் நூல் விவர அட்டவணை, தமிழ்நாடு அரசினர் தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சி மன்ற வெளியீடு, 1961–1965.

4. செந்தமிழ், தொகுதி 14, 1915–1916.

5. சேந்தன் திவாகரம், கழக வெளியீடு, சென்னை, 1958.

6. கலைக்களஞ்சியம், தொகுதி ஒன்று, சென்னை, 1958.

7. Proceedings of the First International Conference Seminar of Tamil Studies, Kuala Lampur-Malaysia, April 1966, Vol. II., I. A. T. R., 1969.

8. Wordsworth's Literary Criticism, Ed. by. Nowell Smith, London, 1935.

## கருத்துப் பரிமாற்றம்

கருத்தரங்கத் தலைவர்

டாக்டர் ந. சஞ்சீவி அவர்களின் முன்னுரை

ஒரு செய்யுளில் உள்ள சொற்களையும் பொருளையும் வேறு படுத்திக்காட்டி அவற்றில் உள்ள அழகையும் பயனையும் எடுத்துரைப்பது அணியிலக்கணம் எனலாம். தமிழாய்விற்குத் தமிழில் தோன்றிய அணிநூல்களின் வரலாற்றுச் சுருக்கம் ஒன்று மிகமிகத் தேவை. அவ்வகையில் 'தமிழில் அணியிலக்கண நூல்கள்' என்னும் கட்டுரை இன்று கருத்தரங்கப் பொருளாக அமைந்துள்ளது. இவ் வரலாற்றுப் பின்னணியே இப்பொருள் குறித்து மேலும் மேலும் ஆய்தற்கு உறுதுணையாக இருக்கும். வரலாற்றுப்போக்குக் குறித்து அமைதலும் இத்தகைய ஆய்வுக் கட்டுரைகளின் நோக்கமாக இருத்தல் வேண்டும்.

இக் கட்டுரையாளர் திரு. சுந்தரமூர்த்தி அவர்கள் அணிகள் குறித்தாய்ந்து 'திருக்குறள் அணிநலம்' என்னும் நூலைத் திருக் குறள் ஆராய்ச்சித்துறையின் வழியாக வெளியிட்டுள்ளார் என்று கருத்தரங்கத்தலைவர் கட்டுரையாளரை அறிமுகப்படுத்தியபின் கட்டுரையை வாசிக்கக் கேட்டுக்கொண்டார்.

**திரு. மு. சண்முகம் பிள்ளை**

இலக்கிய நூல்களை ஆய்வதுபோலவே இலக்கண நூல்களையும் பல்வேறு கோணங்களில் ஆராய்வது மிக மிக இன்றியமையாத தாகும். அவ்வாய்விற்கு அடிப்படையாக அமைவது அவ்வாய்வு பற்றிய நூல்களைத் தொகுப்பதேயாம். இந்த வகையில் கட்டுரை யாளர் திரு. சுந்தரமூர்த்தி 'தமிழில் அணியிலக்கண நூல்கள்' பற்றிய வரலாற்றை ஆய்ந்து சுருக்கமாகத் தொகுத்து அளித் துள்ளார்.

3.12 'அணி' தொன்று தொட்டு நம் பழந்தமிழ் இலக்கி யத்தில் இருந்து வருவதேயாம். உவமையே பிற்காலத்தில் அணியாக மலர்ந்தது என்பர் அறிஞர். ஒரு பொருளோடு ஒரு பொருளை அணித்தாக்குவதுதான் அணி. இதனைத்தான் தொல் காப்பியரும்,

> 'உவமையும் பொருளும் ஒத்தல்வேண்டும்'
>
> (தொல். உவம. 8)

என்னும் நூற்பாவில் நுட்பமாக உணர்த்துவர்.

3.16 திவாகரம், வீரசோழியம் முதலான நூல்கள் அணிபற்றி விவரித்துச் சொல்லாமல் மிகச் சுருங்கிய அளவில் உரைக்கின்றன.

3.21 பழைய உரைகளில் 'அணியியல்' என்னும் நூல் பற்றிய பல்வேறு குறிப்புகளையும் நாம் காணலாம். யாப்பருங்கல விருத்தியுரையில், 'இந்த ருது வருணனையை அணியியலுள் காண்க' என்னும் குறிப்பு வருவதும் இங்கு எண்ணுதற்குரியது. இவ் அணியியல் நூல் கிடைத்திருப்பின் அணியிலக்கணம் பற்றிய பல் வேறு செய்திகளையும் நாம் தெளிவாக அறிந்திருககமுடியும்.

3.26 'தொன்னூல் விளக்கம்' நூல் குறித்தும் இக் கட்டுரை யில் சொல்லப்பட்டுள்ளது. தொன்னூல் விளக்கத்திலும பல புதுமைச் செய்திகள் காணக்கிடக்கின்றன.

3.40 உவமான சங்கிரகம் குறித்து இக் கட்டுரையில் கூறப் பட்டுள்ளது. இது குறித்துச் சடகோபராமாநுஜாசாரியார் கூறி யுள்ளமையும், அது குறித்த பாடலேயும் இங்கு எண்ணிப்பார்த்தல் நலம்.

3.47 தமிழ் அணிநூல்கள் பற்றிய ஆய்விற்குப் பிற மொழி யறிவும் மிக இன்றியமையாதது. வடமொழி அணியிலக்கண வரலாறுகளேயும் ஆய்ந்து இவற்ருேடு ஒப்பாய்வு நடத்துதல் இலக்கிய உலகிற்குத் தேவையானதாகும்.

கட்டுரையில் தரப்பட்டிருக்கும் நுண்ணிய அடிக்குறிப்புகள் கட்டுரைப் பொருளுக்கு நல்ல அரணுக அமைந்துள்ளன.

**திரு. க. த. திருநாவுக்கரசு**

அணியிலக்கண ஆய்வுகள் மிகக் குறைவாகத்தான் நடை பெற்றுள்ளன. ஐம்பது ஆண்டுகளுக்கு முன் செந்தமிழில் அணி யிலக்கணம் பற்றிய கட்டுரை ஒன்று வெளிவந்துள்ளது. அணிகள் பற்றியும், அணிநூல்கள் பற்றியும் ஆராய முன்வந்த கட்டுரை யாளரைப் பெரிதும் பாராட்டுகின்றேன்.

அணியிலக்கணம் தமிழுக்குப் புதிதா? 'உபமா' என்ற சொல்லினின்றும் 'உவமை' வந்திருக்கக்கூடும் என்று சிலர் கருதுகிருர்கள். உவமை, உருவகம் முதலிய்ன தமிழ்ச்சொற்களா, அன்றிப் பிறமொழிச் சொற்களா என்பது குறித்தும் ஆராய்தல் நன்று. இவை எவ்வாறு வளர்ந்தன, விரிந்தன என்பது பற்றிக் கட்டுரையாளர் சுருங்கக் கூறியுள்ளார். இது பற்றித் தனியாக ஓர் ஆய்வுக் கட்டுரையே வடித்தல் நலம்.

3.15 அணியிலக்கண நூல்கள் கி.பி. 10ஆம் நூற்ருண் டிற்குப் பின்தான் அதிகம் தோன்றியுள்ளன. யாப்பிலக்கணத்தை ஆராய்ந்ததைப்போல அணியிலக்கணத்தை ஆராய்ச்சியுலகம் நன்கு ஆராயவில்லே. அணியும் அலங்காரமும் ஒன்ரு என்பதற்குத் திரு. பி. எஸ். எஸ். சாஸ்திரியார் அவர்கள் தரும் விளக்கம் இங்குக் கருதுதற்குரியது. அலங்கார சாஸ்திரம் மிகப் பெரியது என்றும் அணி அதனுள் அமைந்து விளங்கும் ஒரு சிறிய பகுதி என்றும் அவர் கூறுவர்.

உவமையைத் தனியாகவும், உருவகத்தைத் தனியாகவும் ஆய்ந்து தனித்தனி நூல்கள் வருங்காலத்தில் வெளியிடப்பட வேண்டும். அணியிலக்கண ஆராய்ச்சி நூல்களும் பெருகுதல் வேண்டும். சுவையணியைப் பற்றி விரிவாகக் கூறுகின்ற நூல் களும் இல்லை. சுவையணியைப் பற்றி வடமொழியில் மிகுதியான நூல்கள் வெளிவந்துள்ளதையும் இங்குக் கருதுதல்வேண்டும்.

இக் கட்டுரையின் இறுதிப்பகுதியில் அடிக்குறிப்பில் உள்ள பட்டியல்கள் தெளிவாகத் தரப்பட்டுள்ளன. அவற்றுள் ஒவ் வொன்றைப் பற்றியும் பின்னர் விரிந்த அளவில் ஒப்பாய்வு செய்து ஆய்வுக் கட்டுரைகள் அமைத்தல்வேண்டும். 120 அணிகளுள்ளும் காணப்படுகின்ற நுட்பமான வேறுபாடுகளைப் புலப்படுத்துமாறு ஆராய்ச்சி அமைதல் நன்று. பிற மொழி இலக்கணங்கள் தமிழில் வருதற்கு என்ன காரணம் என்பதையும் சற்று ஆழமாகச் சிந்தித்துப் பார்க்கவேண்டும். எந்த அணிகள் சிறந்து விளங்குகின்றன ; எவை எவை நம் இலக்கிய மரபுக்கு ஒட்டியவையாக விளங்குகின்றன என்பதையெல்லாம் பாகுபடுத்திப் பார்ப்பதும் நல்லது.

**டாக்டர் சி. பாலசுப்பிரமணியன்**

கட்டுரையாளரின் இக் கட்டுரை, கட்டுரைப் பொருளைப் பற்றித் தெளிவாக அறிந்து கொள்வதற்கு ஏற்ற வகையில் அமைந்துள்ளது பெரிதும் பாராட்டிற்குரியதாம். ஆசிரியரின் தெளிவான கருத்தைப் பல இடங்களில் காண இயலுகிறது. மிகச் சுருக்கமான முறையில் அமைந்துள்ள இக் கட்டுரை மேலும் மேலும் இப் பொருள் குறித்து ஆய்வதற்கு வழிகாட்டியாய் அமையக்கூடும்.

3.2 'ஒருபொருளோடு மற்றொரு பொருளை அணித்தாக் குவதையும் 'அணி' என்று கூறலாமன்றோ' என்று கட்டுரையாளர் குறிப்பிட்டுள்ளார். அணித்தாக்குவது என்பது நெருக்கத்தைச் சுட்டுமா? அல்லது ஒப்புமையைச் சுட்டுமா ? விளக்கம் தேவை.

3.18 தமிழ்த் தண்டியாசிரியரும் வடமொழித் தண்டியா சிரியரும் ஒருவர்தாமா? தண்டியாசிரியரின் காலம் யாது? தண்டி யலங்கார நூலினுள் தரப்பட்ட மேற்கோள் பாடல்கள் அவராலேயே எழுதப்பட்டவைதாமா ? இவற்றிற்கு விளக்கம் தேவை.

திரு. ஞானசிகாமணி

அணி இலக்கண நூல்களின் தொகுப்பு பற்றிய இக்கட்டுரை அணிநூல்களைப்பற்றி அறிந்து கொள்வதற்கு ஓர் அறிமுகம் போன்றது. அதனுடைய வளர்ச்சி நிலையினையும் படிப்படியாக அறிந்து கொள்வதற்கு இது பெரிதும் உதவி செய்யும்.

திரு. மா. செல்வராசன்

தமிழில் அணியிலக்கண வளர்ச்சி குறைவு என்பது நன்றாகத் தெரிகிறது. இலக்கிய வளர்ச்சிக்கு அணியிலக்கண நோக்கு பயன்படத் தக்கதுதானா என்பது குறித்து ஆராய்தல் வேண்டும். தமிழில் அணியிலக்கணம் வளராமைக்கு என்ன காரணம் என்பது குறித்து ஆராய்ந்தால் இவற்றிற்கெல்லாம் விடை கிடைக்கக்கூடும்.

3.53 டாக்டர் மு. வரதராசனார் அவர்கள் தாம் எழுதிய 'இலக்கியத்திறன்' என்னும் நூலில் அணிநலம் ஒன்றையே கருதி இயற்றப்பெறும் செய்யுளை, ஏராளமான அணிகலன்கள் அணிந்த சவலைக்குழந்தைக்கு ஒப்பிடுவர். இதனைக் கருதியே பழந் தமிழறிஞர்கள் பல்வேறு அணிகளை ஒதுக்கிவிட்டு உவமை ஒன்றை மட்டுமே முதன்மையாகக் கொண்டிருந்திருக்க வேண்டும்.

பொதுவாகத் தமிழில் உள்ள அணியிலக்கண நூல்கள் குறித்து ஆராய்ந்த இக்கட்டுரை அடிப்படை ஆய்விற்கு மிகவும் இன்றியமை யாததாக அமைந்துள்ளது.

திரு. அ. நாகலிங்கம்

கட்டுரைப்பொருள் குறித்து மேலும் ஒப்பாய்வு நடத்துவதற்கு இக் கட்டுரை பயன்படக்கூடும்.

அணிகளமைந்த பாடல்களில் காணப்படும் சில செய்திகளைக் கொண்டு பல தலைப்புகளில் கட்டுரைகளை வடிக்கலாம். 'அணி யிலக்கணம் காட்டும் சமுதாய வாழ்க்கை' 'தமிழிலக்கியத்தில் அணியிலக்கணத்தின் பங்கு' என்பன குறித்து மேற்கொண்டும் ஆய்வுகள் பல நடத்தலாம்.

**திரு. மு. பாலகிருஷ்ணன்**

தொல்காப்பியர் காலத்திய உவமை பிற்காலத்தில் எங்ஙனம் பல்கிப்பெருகியது என்பதனையே இவ்வணியிலக்கண நூல்களின் தொகுப்பு நமக்கு நன்கு புலப்படுத்துகிறது.

**கருத்தரங்கத் தலைவர் டாக்டர் ந. சஞ்சீவி அவர்களின் பின்னுரை**

அணியிலக்கணத்திற்கும் இன்றைய கருத்தரங்கின் மற்றொரு தலைப்பான 'காவியங்களின் தோற்றமும் வளர்ச்சியும்' என்பதற்கு முள்ள பொருத்தம் எண்ணுதற்குரியது. கவிஞர் காவியத்தைக் குறிக்கும்போதும் 'அணிகொள் காவியம்' என்றே அழகுறக் கூறும் பொருத்தமும் அதன் பயனும் ஈண்டு நினைவுறற்பாலது. காவியத்தின் தனிச்சிறப்பே அணியமைந்த பாடல்கள் எனவே தான் காவியத்தில் இஃது ஒரு தலைமைக்குறிப்பாக இடம் பெற்றிருக்கிறது.

இத்தகைய கருத்தரங்குகளால், ஒப்புடைய கருத்துகளை உற்று நோக்கியும் ஒப்புநோக்கியும் ஆயும் ஆராய்ச்சித்திறன் வளர்தல் வேண்டும். அத்தகைய ஒப்பாய்வினைச் சுருக்கமாகக் கட்டுரையின் இறுதிப்பகுதியில் கட்டுரையாளர் செய்துள்ளார். இங்ஙனம் ஒவ்வொரு பொருள் குறித்தும், இருவேறு நூல்கள் குறித்தும் ஒப்பு நோக்கியும் உற்றுநோக்கியும் ஆய்வது ஆய்வுத்துறையில் பல்வேறு புதிய கருத்துகளை ஏற்படுத்தும்.

3.2 'அணி' என்னும் சொல்லின் வேர்ப்பொருளைப் பார்ப் போம். 'அண்' என்பதற்கு 'மேல்,' 'நெருங்கிய' என்றும் பொருள் உண்டு. 'அண்' என்பதனின்றும் 'அணிமை' என்ற சொல்லும் தோன்றியிருக்கலாம். வடமொழியில் அலம்+க்ரு என அலங்காரத்தைப் பிரித்துச் 'செய்த,' 'செய்யப்பட்ட' என்று பொருள் கொள்ளுகின்றனர்.

உவமை உருவகம் ஆகிய சொற்களும் தமிழ்ச்சொல்தாம் என்பதை நாம் உணர்த்துதல்வேண்டும். 'ஓவியம்' என்பது 'ஒன்று' என்னும் எண்ணின் அடியாகப் பிறந்தது என்பர் (ஒன்றுதல்—ஒவ்வுதல்—ஒத்திருத்தல்). எனவே உவமை என்பதுங் கூட 'ஒப்புமை' என்னும் சொல்லடியினின்றும் தோன்றியிருக்கலாம்.

அவ்வாறே 'உருவகம்' என்பதும் 'உரு' என்பதனின்றும் பிறந் திருக்கலாம். இவையெல்லாம் குறித்து மேலும் ஆய்ந்து ஒரு முடிவிற்கு வருவது நல்லது.

3.13 இறையனாரகப் பொருளுரையில் 'பொருளதிகாரம்' கிடைக்கப்பெறவில்லை என்ற குறிப்பொன்று வருவது இங்கு எண்ணுதற்குரியது. கட்டுரையாளரும் இக் குறிப்பைத் தம் கட்டுரையில் குறிப்பிட்டுக் காட்டியுள்ளார். பொருளதிகாரம் ஏன் கிடைக்கப்பெறவில்லை என்பதை ஆய்வு செய்தல்வேண்டும். ஆரியப் படையெடுப்புக் கலாசாரப் படையெடுப்பாக மாறிப் பின்னர் சமயப் படையெடுப்பாகியது. தமிழரின் கலாசாரத்தை மறைப்பதற்கே பொருளதிகாரததை மறைத்தனரோ, என்னவோ? ஏனெனில், பொருளதிகாரம்தான் தமிழருடைய சமுதாய வாழ்க்கையினையும், பண்பாட்டு வாழ்க்கையினையும் தெள்ளத்தெளிவாக எடுத்துரைக் கின்றது. இப் பொருளதிகாரமே தமிழரின் தலைசிறந்த காதற் பொருளையும் உணர்த்துகின்றது இப் பொருளதிகாரத்தின் ஒரு பகுதியாக அமைந்து விளங்குவது உவமைபற்றிய செய்திகள்.

3.14 அணிநூல்களின் தோற்றமும் வளர்ச்சியும் குறித்தும் கட்டுரையாளர் குறிப்பிட்டுள்ளார். அணிகளுள் பிற்காலத்தில் சிறந்து விளங்கியது சிலேடையணி. கவிதைக்குரிய சிறப்புகளில் அதிகச் சிறப்புப் பெறுவது இதுவேயெனலாம். மிகச் சிக்கல் வாய்ந்ததும் இதுவே. ஆனால் மறுமலர்ச்சி இலக்கியத்திலும் இவ் வணி சிறந்து விளங்குவதைக் காண்கிறோம்.

அணிகளின் வளர்ச்சியும் காலப்போக்கில் தவிர்க்கமுடியாது ஏற்பட்டிருக்கவேண்டும். கவிதை இயற்றுவோர் எண்ணியெண்ணி எதையும் பாடமுடியாது. நிலத்தின் நீரூற்றுப்போல மனததினின்றும் தங்களுடைய உள்ள உணர்ச்சிக்கேற்பப் பொங்கிவழியும் கவிதையில் அவர்களறியாமலேயே பல நயங்கள் அமைந்து விளங்குவதைக் காணலாம். மொழியினுடைய ஆற்றல் அவ்வாறு சொல்லழுத்தமும் நயமும் வரத்தூண்டும். இங்ஙனம் இவையெல்லாம் அணிகளின் வளர்ச்சிகுத் தூண்டுகோலாய் அமைந்திருக்கலாம். அணிகளின் வளர்ச்சியும் ஒருவகையில் இன்றியமையாததே எனலாம்.

அணிகள் குறித்து ஆய்வதற்கு வடமொழியறிவும் தேவை யானது. பலமொழிப்படிப்பே இவ்வகை ஆய்விற்குப் பயன் விளைக்கும்.

இக் கட்டுரையினை வழங்கிய கட்டுரையாளர்க்கு என் பாராட்டு தல்கள் என்று தம் முடிவுரையில் கருத்தரங்கத்தலைவர் கூறி முடித்தார்.

**அவையினரின் கருத்துகளுக்குக் கட்டுரையாளரின் விளக்கம்**

3.2 ஒரு பொருளோடு மற்றொரு பொருளை அணித்தாக்கு வதையும் ' அணி ' என்று கூறலாமன்றோ ? இங்கு அணித்தாக்குவது என்பது ஒன்றை மற்றொன்றால் விளக்கவந்த இருபொருள்களின் நெருக்கத்தைச் சுட்டுவதாம். உவமையில் அடங்கியுள்ள பொருள்கள் நான்கு என்பர். அவை உவமேயம், உவமானம், பொதுப்பண்பு, உவம உருபு என்பன. சொல்ல எடுத்துக்கொண்ட பொருளைப் பொருள் என்றும், அதனுடைய இயல்பினையும் தன்மை யினையும் விளக்கவேண்டி ஒப்புமையாக எடுத்துக்காட்டப்படும் பிறபொருளை உவமை என்றுங் கூறுவர் தொல்காப்பியர். இவ்விரண் டினையும் முறையே 'உபமேயம்' என்றும், 'உபமானம்' என்றும் கூறுவர் வடநூலார். உவமையும் பொருளும் ஆகிய இவ்விரு பொருளின்கண்ணும் ஒத்தமைந்த வண்ணம், வடிவு, தொழில் பயன் என்பன பற்றி அமைந்த ஒப்புத்தன்மையையே ' பொதுப் பண்பு ' என்பர். அத் தன்மையினை விளக்குதற்பொருட்டு உவமை யினையும், பொருளினையும் பொருத்துவதற்கு இடையில் பயன்படும் சொற்களே உருபுகளாம்.

இங்ஙனம் உவமையும், பொருளும் அவற்றிடையே அமைந்த பொதுத்தன்மையும், உவம உருபும் ஒன்றோடொன்று நெருங்கி, விளக்கவந்த கருத்துக்கு வலிவும் தெளிவும் அளிக்கின்றது. எனவே தான் ஒருபொருளோடு மற்றொரு பொருளை அணித்தாக்குவதையும் ' அணி ' என்று கூறலாமன்றோ எனக் குறிப்பிடப்பட்டது.

3.18 தண்டியலங்காரத்தை இயற்றிய ஆசிரியர் பெயர், வரலாறு முதலியன குறித்து இன்னும் தெளிவாக அறிதற்கியல வில்லை. 'காவியாதர்சத்தை' இயற்றிய ஆசிரியர் தண்டி என்பார். எனவே தமிழ்த் தண்டியலங்காரத்தை இயற்றியவரும் தண்டி என்ற பெயரினரே என்பது சிலர் கருத்தாகும்.

' வடதிசை யிருந்து தென்மலைக் கேகி
மதிதவழ் குடுமிப் பொதிய மால்வரை
இருந்தவன் தன்பால் அருந்தமிழ் உணர்ந்த
பன்னிரு புலவரின் முன்னவன் பகர்ந்த

தொல்காப் பியநெறி பல்காப் பியத்தும்
அணிபெறு மிலக்கணம் அரிதினில் தெரிந்து
வடநூல் வழிமுறை மரபினின் வழாது
ஈரிரண் டெல்லையின் இகவா மும்மைப்
பாரத விலக்கணம் பண்புறத் தழிஇத்
திருந்திய மணிமுடிச் செம்பியன் அவையத்து
அரும்பொருள் யாப்பி னமைவுற வகுத்தனன்
ஆடக மன்றத்து நாடக நவிற்றும்
வடநூ லுணர்ந்த தமிழ்நூற் புலவன்
பூவிரி தண்பொழிற் காவிரி நாட்டு
வம்பவிழ் தெரியல் அம்பிகாபதி
மேவருந் தவத்தினிற் பயந்த
தாவருஞ் சீர்த்தித் தண்டியென் பவனே'

என்னும் சிறப்புப்பாயிரச் செய்யுளால் நூலாசிரியர் பெயர் தண்டி யென்பதும், அம்பிகாபதியின் புதல்வர் என்பதும், வடமொழி தென் மொழிகளில் வல்லுநர் என்பதும், சோழ நாட்டினர் என்பதும் பெறப் படுகின்றன. அம்பிகாபதியின் புதல்வர் என்பதற்கு இச் செய்யு ளன்றி ஏனைய சான்றுகள் இல்லை.

3.23 தண்டியலங்கார நூலினுள் தரப்படும் மேற்கோள் பாடல்களும் அவராலேயே இயற்றப்பட்டன. 'தண்டியாசிரியர் மூலோதாரணமும் காட்டினுற்போல, யாமும் உரையெழுதியதல்லது மூலோதாரணமும் காட்டினேம்' எனவரும் பிரயோக விவேகநூலார் கூற்றும் இதனை வலியுறுத்தும்.

3.18 தண்டியலங்காரச் செய்யுள்களில் 'சோழன்' என்ற பெயரில் கூறப்படும் செய்யுள்களும், 'அனபாயன்' என்று குறிப் பிடப்பெறும் செய்யுள்களும் நிறைய உள்ளன. இப் பாடல்கள் சோழ நாட்டின் வளம், சோழ நாட்டின் அரசியற் சிறப்பு, போர்ச்செயல்கள் முதலியவற்றை விளங்கக்கூறுவன. அனபாயனை, 'எங்கோன்' என்று இவ்வாசிரியர் குறிப்பிடுவதால் இவர் அனபாயன் காலத்தவர் என்பது புலனாகிறது. இவ்வனபாயன் இரண்டாம் குலோத்துங்க சோழனேயாவான். இவன காலம் கி. பி. 12ஆம் நூற்றாண்டு. ஒட்டக்கூத்தரைப் பற்றிய செய்தியும் இந்நூலினுள் கூறப்படுகிறது. அவருடைய காலமும் இதுவே. எனவே, தண்டியாசிரியரின் காலம் கி. பி. 12ஆம் நூற்றாண்டு எனலாம்.

---

கப்பலோட்டிய தமிழர் வ. உ. சிதம்பரனுர்



தோற்றம்: 5—9—1872 மறைவு: 18—11—1936

உதவி: வ. உ. சி. சுப்பிரமணியம்

# முன்னுரை

(டாக்டர் ந. சஞ்சீவி)

செய்ந்நன்றி அறிதலின் செம்மைசால் வடிவமாக விளங்கிய கப்பலோட்டிய தமிழர் செக்கிழுத்த சிதம்பரனுர் நூற்ருண்டு விழாவைச் சிறப்புறக் கொண்டாடவேண்டுவது ஒவ்வொரு இந்தியரின்—இன்பத் தமிழரின்—இன்றியமையாக் கடமை யாகும். இக் கடமை ஆட்களுக்கும் உண்டு; அமைப்பு களுக்கும் உண்டு. அவ்வகையில் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறையின் சார்பில் தென்னகத்திலகர்—தேசபக்தர்—'வந்தேமாதரம்' பிள்ளை—வ. உ. சி.யின் முதல் நூற்ருண்டு விழாவை ஒரு சிறந்த கருத்தரங்கின் வாயிலாகக் கொண்டா டியது (5—10—1972) முற்றிலும் பொருத்தமே.

இக் கருத்தரங்கிற்குச் சென்னைப் பல்கலைக்கழகத் துணை வேந்தர் தாமரைத் திரு. நெ. து. சுந்தரவடிவேலு தலைமை வகித்தார். தமிழக சட்டப் பேரவையின் முன்னுள் தலைவர் திரு. கே. ஏ. மதியழகன் கருத்தரங்கைத் தொடங்கிவைத்தார். தமிழகச் சட்டமன்ற மேலவைத் துணைத்தலைவர் சிலம்புச் செல்வர் ம. பொ. சிவஞானம் நிறைவுரை நிகழ்த்தினர். மேலும், தமிழ்த்துறையின் ஆய்வுப் பூந்துணராகிய 'தமிழாய்வு' முதல் இதழையும் அவர் வெளியிட்டார்.

சென்னைப் பல்கலைக்கழகப் பேராசிரியப் பெருமக்கள் ஐவர் இக் கருத்தரங்கில் கலந்துகொண்டு, வ. உ. சிதம்பரனுரின் பல்வேறு சிறப்பியல்புகளையும் பாங்குற எடுத்துரைத்து, அப் பெருமகனுருக்குப் புகழாரஞ் சூட்டினர். அப்புகழாரமே ஈண்டுக் கட்டுரைகள் வடிவில் காட்சி தருகின்றது.

# கருத்தரங்க உரைகள்

முன்னுரை

—டாக்டர் ந. சஞ்சீவி, தமிழ்த்துறைத்தலைவர்,
சென்னைப் பல்கலைக்கழகம்.

இந்திய விடுதலை இயக்கத்தில் வ. உ. சி. பங்கு

—திரு. சி. ஈ. இராமச்சந்திரன்,
வரலாற்றுத் துறை.

பொருளியல்—தொழிலாளர் நலத்துறைகட்கு
வ. உ. சி.-யின் தொண்டு

—டாக்டர் வே. சண்முகசுந்தரம்,
பொருளியல் துறைத்தலைவர்.

சமூகச் சீர்திருத்தப் பணிகட்கு வ. உ. சி.-யின் தொண்டு

—டாக்டர் சி. ஆ. பெருமாள்,
அரசியல், ஆட்சியியல் துறைத்தலைவர்.

அறவியல் சமய (மெய்யுணர்வு)வியல் துறைகளுக்கு
வ. உ. சி.-யின் தொண்டு

—டாக்டர் வ. ஆ. தேவசேனபதி,
மெய்யுணர்வுத்துறை.

தமிழ் இலக்கிய இலக்கணத்துறைகளுக்கு
வ. உ, சி.-யின் தொண்டு

—டாக்டர் சி. பாலசுப்பிரமணியம்,
தமிழ்த்துறை.

1

# இந்திய விடுதலை இயக்கத்தில் வ. உ. சி. பங்கு

சி. ஈ. இராமச்சந்திரன்,
வரலாற்றுத் துறை

நில்லா உலகத்து நிற்றல் குறித்துத் தம்புகழ் நிறுத்தி மாய்ந்தோர் பலர். அவருள் அன்னியராட்சியை எதிர்த்துச் செயல் புரிந்த சிங்கத்தமிழர் நம் வீரசிதம்பரனுர் ஆவர். துள்ளித் திரியும் பருவத்திலேயே அவர் பல வீர விளையாட்டுகளில் பயிற்சி பெற்ருர். தமது சுயசரிதையில்,

"அடி பிடி சண்டை அளவில் புரிந்தேன்"

என்று குறித்திருக்கின்ருர். இதனுல், அவர் பிள்ளைப் பிராயத்திலேயே வருங்காலத்தில் ஒரு வீரனுகத் திகழ்வதற்கு வேண்டிய அனுபவம் பெற்றிருந்தார் எனக் கூறலாம்.

மேலும், சிறுவயது முதற்கொண்டே, முற்போக்கும் சீர்திருத்தக் கருத்துகளும் கொண்டவராக விளங்கினுர். அன்னியரது பிடியில் தமிழன்னை விலங்கிடப்பட்டிருப்பதை எண்ணிஎண்ணி ஏங்கி, அவளது துயர் நீக்கத் துடித்தார். கொண்ட கொள்கையை ஈடேற்றத் தம் வாழ்நாளிலே நலங்களைத் துச்சமாக மதித்தார். ஒளி கொடுக்கும் விளக்குத்திரி தன்னை எரித்தே உதவுவதுபோல், சுதந்திரத்தீயின் திரியாகத் தம்மையே எரித்துக் கொண்டார் இக் கருமவீரர்.

திரைகடலோடித் திரவியம் தேடியவர் நந்தமிழர். ஈராயிரம் ஆண்டுகட்கு முன்பே கடல் வாணிபத்தில் தமிழர் தலைசிறந்து விளங்கியதை உரோம வரலாற்ருசிரியர்களான பிளினி, தாலமி முதலானேருடைய கூற்றுகளினின்றும் அறியலாம். அம்மட்டுமா? நம் அரும்பெரும் சங்க இலக்கியங்களும் பண்டைய கடல் வாணிபம் குறித்துப் பலபல பகரும். சீனத்துப் பட்டுக்காகவும், அராபியக்

குதிரைக்காகவும், சேர நாட்டுத் தந்தமும் மிளகும் பாண்டிய நாட்டு முத்தும் மாறு கொடுத்த வரலாறு உலகறியும். கொற்கை, காயல், தொண்டி, காவிரிப்பூம்பட்டினம், நாகப்பட்டினம் முதலிய தமிழ் நாட்டுத் துறைமுகங்கள் அயல்நாட்டுடன் வாணிபத் தொடர்பு கொண்டிருந்தன. இவையனைத்தும் பழங்கதையாய்க் கனவாய்ப் போயின; நாட்டின் உயிர்நாடியான வாணிபமும் மறைந்து வறுமை யுற்றனர் மக்கள். அருகிலுள்ள இலங்கைக்குச் செல்லுதற்கும் அன்னியர் உதவியினையே நாடும் அவலநிலை ஏற்பட்டது. காரணம், நாடு பிடித்து அரசாண்ட ஆங்கிலேயர் வருவாய்த் துறைகள் அனைத்தையும் கவர்ந்துகொண்டனர். நில ஆதிக்கத்தையும், கடல் ஆதிக்கத்தையும் ஒருங்கே பெற்ற ஆங்கிலேயர் (தமிழகச்) செல்வம் அனைத்தையும் சுரண்ட ஆரம்பித்தனர். இந் நிலை கண்டு கலங்கினார் சிதம்பரனார். எத் துறையில் முயன்றால் இழப்பை மீட்கலாம் என எண்ணிக் காலங்கருதிக் காத்திருந்தார்.

இந் நிலையில்தான் வங்காளத்தில் தேசியக்கிளர்ச்சி மூண்டது. அப்போதைய வைசிராயாக இருந்த கர்சன் பிரபு வங்காளத்தைத் துண்டாக்கினார். ஒரே இனமாக இருந்த வங்காளியரை, இந்து வங்காளம் என்றும், முஸ்லீம் வங்காளம் என்றும் பிரித்தது கண்டு, கொதித்தெழுந்தனர் மக்கள். வங்காளத்தில் மூண்ட தேசியத்தீ இந்தியா எங்கும் பரவியது. சுரேந்திரநாத பானர்ஜி அஸ்விநிககுமார் தத்தர், அரவிந்தகோஷ் ஆகியோர் வங்க வீரர்களாக விளங்கினர். பஞ்சாபின் சுதந்திர இயக்கத்திற்கு லாலா லஜபதிராய் காரணமானார். பாலகங்காதர திலகரும், கோபாலகிருஷ்ண கோகலேயும் மகா ராஷ்டிரததே தேசிய உணர்வைப் பெருக்கினர். தமிழ்நாட்டில் இவ்வியககத்தின் தலைவராக விளங்கினார் சிதமபரனார்.

இத் தேசிய இயக்கத்தின் முதற்செயலாக அன்னியப் பண்டங்கள் பகிஷ்கரிக்கப்பட்டன. மக்களின் மனத்தே அடக்கப் பட்டிருந்த சுதந்திரத்தீ கொழுந்து விட்டெரிந்தது. அதன் அடையாளமாக நாடெங்கும் அன்னிய ஆடைகள் குவிக்கப்பட்டு எரிக்கப்பட்டன. காலம் நோக்கிக் காத்திருந்த செம்மல் சிதம்பரனார், வழக்கறிஞர் தொழிலைத் துச்சமென விடுத்து நாட்டுரிமைப்போரில் நாட்டம் கொண்டார். தம்மிடமிருந்த அன்னிய ஆடைகள் அனைத்தையும் தீக்கிரையாக்கினார். ''எரிவது ஆடையன்று, ஏகாதிபத்தியமே'' என்று எண்ணி மகிழ்ந்தார். அன்னியப் பொருள்கள் எவற்றையுமே வாங்குவதில்லை என உறுதி பூண்டார்.

ஆங்கில ஏகாதிபத்தியத்திற் கெதிராக வங்கத்திலே போர் துவங்கியதைக் கண்டு பூரித்த சிதம்பரனுர், தம் தமிழ் நாட்டிலும் ஏகாதிபத்திய எதிர்ப்புக்கு அடிகோலினுர். அதன் முதல் கட்டமாக ஆங்கிலேய வணிகக் கூட்டத்தின் மீதே தமது முதல் தாக்குதலை ஆரம்பித்தார்.

அன்று, "பிரிட்டிஷ் இந்தியா ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனி" யாரின் கப்பல்களே தூத்துக்குடிக்கும் இலங்கைக்கும் இடையே போய்வந்தன. பிரிட்டிஷ் கப்பல் கம்பெனியின் ஆதிககத்தை அடக்க எண்ணி, சுதேசிக்கப்பல் கம்பெனி ஒன்றைத் தோற்று விக்கத் துணிந்தார் சிதம்பரனுர். தாம் கப்பல் கம்பெனியைத் தொடங்குவது பற்றி அவரே கீழ்வருமாறு கூறுகிருர் :

> "தேச ஆட்சியின் மீட்சிக்கான முதல்வழி, வியாபாரம் செய்யவந்த வெள்ளையர்களை வெருட்டி அடிக்கவேணடும் என்பதுதான். வெள்ளையர்களை விரட்டுவதென்ருல் நம்ம வர்க்குக் கடல் ஆதிக்கம் வேண்டும்."
>
> "ஆங்கிலேயர் நம் அரசைப் பறித்தது பொருள் பறிக்கவேயாம். ஆகவே, பொருள் பறிக்கும் வாணிபக் கப்பலுக்கு வேட்டு வைத்தாலொழிய அவ்வாங்கிலேயர் இந்தியாவை விட்டு வெளியேருர்"

என்றும் முழக்கஞ்செய்தார்.

1906-ஆம் ஆண்டு சுதேசிக்கப்பல் கம்பெனி பதிவு செய்யப் பட்டது. சுதேசிக் கப்பல் கம்பெனியார் முதலில் குத்தகைக்குக் கப்பல்களை வாங்கி ஓட்டினர்.

விரைவில் சொந்தமாகக் கப்பல் வாங்கினுலன்றி கம்பெனி நெடுநாள்களுக்கு நீடித்தல் இல்லை என்பதை அறிந்து அதற்காவன செய்ய முற்பட்டார். தூத்துக்குடி வணிகர்கள் பெருமளவில் சுதேசிக்கப்பல் கம்பெனிக்குப் பொருளுதவி செய்தனர். அது போதுமானதாக இல்லை. அதனுல் பம்பாய், கல்கத்தா முதலிய நகரங்களுக்குச் சென்று பொருள் திரட்டினுர். அக் கம்பெனிக்குப் பொருள் தேடும் முயற்சியில் ஈடுபட்டு வடஇந்தியா செல்லப் புறப்பட்டபோது,

> "மீண்டும் நான் தமிழகம் திரும்புங்கால், கப்பலுடன் திரும்புவேன் ; இல்லையேல் அங்கேயே கடலில் விழ்ந்து மாள்வேன்"

என வீரவுரை பகர்ந்து சென்ருர்.

அவர் பம்பாய்க்குச் சென்றிருந்தபோது அவரது முதல் மகன் உலகநாதன் நோய்வாய்ப்பட்டு மரணப் படுக்கையில் இருந்தான். மனைவியோ நிறைந்த கர்ப்பிணி. சிதம்பரனுரின் நண்பர்கள் அவருககுக் கடிதம் எழுதி வரவழைக்க முயன்றனர். ஆயின், நெஞ்சுரனும், நாட்டன்பும் மிக்கு விளங்கிய சிதம்பரனுர்,

"என் மகனையும், மனைவியையும் இறைவன் காப்பான்,
என்னைவிட அவன் ஆற்றல் வாய்ந்தவன்"

என்று பதிலெழுதிவிட்டுக் கருமமே கண்ணுக நின்ருர். வீட்டுக் கடமைகளைவிட நாட்டின் கடமையே பெரிதென நினைத்த இவ்வுத்தமரின் செயலுக்கு வேறென்ன சான்று வேண்டும்?

சில மாதங்களுக்குப்பின் தான் கூறியவாறே, 'காலியா,' 'லாவோ' என்ற இரண்டு கப்பல்களுடன் தூத்துக்குடித் துறைமுகம் வந்து சேர்ந்தார், கப்பலோட்டிய தமிழன். ஒரே நேரத்தில் இரண்டு கப்பல்களுடன் வந்திறங்கினுர் இச் செயல் வீரர். வ. உ. சியைப் பாராட்டாத பத்திரிகையே அந் நாளில் இல்லை எனலாம். சிதம்பரனுரின் செயலால் சுதேசிக்கப்பல் கம்பெனி வலுப்பெற்றது. அரசியல் வாதிகள், "எழுந்தது போராட்டம், வீழ்ந்தது ஏகாதிபத்தியம்" என்று முழங்கினர்.

மக்களின் மனவுறுதியைக் கண்ட பிரிட்டிஷ் முதலாளிகள், சிதம்பரனுரை அணுகித் தாம் ஒரு லட்சம் ரூபாய் தருவதாகவும், சுதேசிககப்பல் கம்பெனியை விட்டு விலகும்படியும் இரந்து கேட்டுக் கொண்டனர்.

"விர சுதந்திரம் வேண்டிநின்ருர் பின்னர்
வேறுென்று கொள்வாரோ?"

என்று பாரதியார் பகர்ந்தது போலப் பிறந்த பொன்னுட்டின் விடுதலைக்காகத் தம் உயிரையே அர்ப்பணிக்கத் துணிந்த தியாகச் செம்மல் பொருளுக்காகத் தன் கொள்கையை இழப்பாரோ? வஞ்சகவலை விரிகக வந்த வெள்ளையர்களை விரட்டித் துரத்திவிட்டார்.

சுதேச மறுமலர்ச்சிக்குப் பணி புரிந்ததோடு நில்லாமல் அரசியலிலும் பெரும்பங்கு கொண்டார் சிதம்பரனுர். நீண்டகால அடிமை வாழ்வின் காரணமாக, வளமிழந்து செம்மை கெட்டுக் கொடுமையில் மக்கள் வேதனையுற்றதைக் கண்டு, அவ்வடிமைத் தளையை அறவே களைந்தெறிய எண்ணினுர். அதனை நிறைவேற்றக்

காங்கிரஸ் மகாசபைக்குப் பிரதிநிதியாய்ச் சென்றுவந்தார். மிதவாதிகளே நிறைந்திருந்த காங்கிரஸ் சபையில் தீவிரவாதியாக விளங்கினார் சிதம்பரனார்.

1907-ஆம் ஆண்டு காங்கிரஸ் மகாசபை குஜராத் மாநிலத்திலுள்ள சூரத் நகரில் நடப்பதாக இருந்தது. அதன் தலைவராக திரு. ராஷ்பிகாரிகோஷ் தேர்ந்தெடுக்கப் பட்டிருப்பதாகப் பத்திரிகையில் அறிவிக்கப்பட்டிருந்தது. மிதவாதியான கோஷ் தலைவராக வருவது சிதம்பரனாருக்குச் சிறிதுகூடப் பிடிக்கவில்லை. சி. சுப்பிமணிய பாரதியாரோடு கலந்து ஆலோசித்துத் தீவிரவாதியான லாலாலஜபதி ராயைத் தலைவராக்க வேண்டுமென விழைந்தார் சிதம்பரனார். திரு. பாலகங்காதரதிலகரையும், அரவிந்தகோஷையும் தங்கள் கொள்கைக்கு இணங்கும்படி கடிதத்தின் மூலமாகச் செய்தார். பின், திலகரின் வேண்டுகோட்படி சுமார் 100 பிரதிநிதிகளோடு சூரத் நகர் நோக்கிச் சென்றார், செயல்வீரர். அப் பிரதிநிதிகளில் பணம் இல்லாதவர்களுக்குப் பணம் கொடுத்தும் அழைத்துச் சென்றார் நம் இல்லோர் செம்மல் என அறிகின்றோம். வ. உ. சி. தந்துள்ள தகவலால், சூரத் காங்கிரஸில் மிதவாதிகளுக்கும் அமிதவாதிகளுக்கும் இடையே நடைபெற்ற போராட்டத்திற்கு நம் தமிழ்நாட்டுத தேசபக்தர் வ. உ. சி. தான் மூலகாரணமாக இருந்தார் என்பது புலனாகிறது. அவர் தூண்டவில்லையேல், அரவிநதரும், திலகரும், மிதவாதியான ராஷ்பிகாரி கோஷ் சூரத் காங்கிரசின் தலைவராக இருப்பதை எதிர்த்தே இருக்கமாட்டார்கள். அதனால், காங்கிரஸ் மிதவாதப் பாதையிலேயே தொடர்ந்து நடைபோட்டுச் சென்றிருக்கும். இதனைத் தடுத்து, சரித்திரச் ,சிறப்பு வாய்ந்த ஒரு திருப்பத்தைக் காங்கிரசுக்குத தந்தார் தேசபக்தர் சிதம்பரனார். சூரத் காங்கிரஸ் கூட்டத்தில் மிதவாதிகளை எதிர்த்து நடந்த போராட்டத்தில் திலகர் சிக்கிக் கொண்டபோது, தம்முயிரை மதியாமல் சிதம்பரனாரும், அவருடன் சென்ற தமிழ்நாட்டுத் தேச பக்தர்களும் திலகரைச் சுற்றி வளைத்துக் கொணடுநின்று எதிரிகளின் தாக்குதல்களினின்றும் காப்பாற்றினர்.

இதன்பின் திலகரும் அரவிந்தகோஷும் சிதம்பரனாரும் சேர்ந்து அக் காங்கிரசுக்குள்ளே 'தேசியவாதிகள் மகாநாடு' என்னும் பெயரால் தனிக்கட்சி ஒன்று அமைத்தனர். அதன் பம்பாய் மாநிலச் செயலாளராகத் திலகரும், வங்கமாநிலச் செயலாளராக அரவிந்தரும், சென்னை மாநிலச் செயலாளராகச் சிதம்பரனாரும்

தேர்ந்தெடுக்கப்பட்டனர். சூரத்திலிருந்து திரும்பியவுடன் சென்னைத் திருவல்லிக்கேணிக் கடற்கரையிலும், வேறுபல இடங்களிலும் பொதுக் கூட்டங்களில் பேசித் தம் புதிய கட்சிக்கு ஆதரவு தேடினார் சிதம்பரனார். திலகர் தலைமையில் தீவிரவாதிகள் ஒன்று கூடித் தங்கள் கொள்கைகளை நாடெங்கும் பரப்பித் தேசமக்களைச் சுதந்திரப் போருக்குத் தயார் செய்யவதெனத் தீர்மானித்தபோது, தென்னாட்டில் தம் கொள்கைக்கு ஆதரவு தேடும் பொறுப்பைச் சிதம்பரனாரிடமே ஒப்புவித்தனர். தென்னாட்டிலேயே சிதம்பரனார் ஒருவர்தான் சிறந்த வீரர் என்று திலகர் கருதினாரென அறிகின்றோம்.

அக்காலத்து, காங்கிரஸ் மகா சபைக்கு மாநில, மாவட்டக் கிளைகள் அமைந்திருக்கவில்லை. அன்னிய ஆட்சியினால் விளையும் தீமைகளைப் பொதுமக்களுக்கு எடுத்துக் கூறி, மக்களைத் தேசாபி மானிகளாகச் செய்யும் நோக்கத்துடன் 1908—ஆம் ஆண்டு திருநெல்வேலி மாவட்டத்தில், ‘தேசாபி மானிகள் சங்கம்’ சிதம்பரனாரால் நிறுவப்பட்டது. இச் சங்கத்தார் அடிக்கடி பொதுக் கூட்டங்களைக் கூட்டி நாட்டுப் பற்றினை மக்கள் மனத்தில் விதைத்து வந்தனர். இந் நிலையில், இயற்கையிலேயே புரட்சி உள்ளம் படைத்த இளைஞராய் இருந்த சுப்பிரமணியசிவா, கிராமம் கிராமமாகச் சென்று, சுதேசிப்பிரசாரம் செய்து வந்துகொண்டிருந்தார். சிவாவின் துடிப்பான பேச்சுகள் சிதம்பரனாரையும் கவர்ந்தன. இருவரும் இணைபிரியாத் தோழராயினர். அன்றுமுதல் ஒரே மேடையில் இருவரின் உரிமைக் குரல்களும் முழங்கின. சிவாவின் பேச்சில் நெருப்புப் பொறி பறக்கும்; சிதம்பரனார் பேச்சு சூறைக் காற்றுப் போல் சுழற்றியடிக்கும். ஏற்கெனவே எரிந்து கொண்டிருக்கும் தீயுடன் காற்றும் சேர்ந்தால் கேட்கவேண்டுமா? சுதேசிப் பொருள்களை ஆதரிக்க வேண்டியதின் அவசியத்தை வாதத் திறமையுடன் வற்புறுத்திக் கூறுவார் வ. உ. சி. “அன்னியப் பொருள்களைவிட சுதேசிப் பொருள்களின் விலை அதிமாக இருக்கிறதே!” என்போருக்கு “அதிக விலையா? யாருக்குக் கொடுக்கிறீர்கள்? உங்கள் நாட்டு மக்களுக்குத்தானே?” எனப் பளிச்சென்று பதிலளிப்பார். விடுதலை வெறி மக்களிடையே முறுகி எழுதற்கு இன்னாரின் வீரக்கனல் செறிந்த வாசகங்கள் தூண்டுகோலாயின. மக்கள் மனத்தில் நாட்டுப்பற்று கொழுந்து விட்டு எரியலாயிற்று.

தூத்துக்குடியில் சுதேசிக் கிளர்ச்சி மெள்ளமெள்ள அரசியல் புரட்சியாக உருவெடுக்கத் தொடங்கியது. இதனை அறிந்த

அதிகாரிகள் மக்கள் யாரும் ஆயுதங்கள் தாங்கக்கூடாது எனத் தடை விதித்தனர். அத்துடன் மக்களின் உரிமைக் கிளர்ச்சி ஒரு பெரும்புரட்சியாக உருவெடுத்து விடுமோ என்ற அச்சத்தால் பொதுக்கூட்டங்களுக்கும் தடைவிதித்தனர். ஆயின், இத் தடைகளைக் கண்டு அஞ்சினரில்லை சிங்கத் தமிழர்களான சிதம்பரனாரும் சிவாவும்.

இந் நிலையில்தான் தூத்துக்குடியில் 'கோரல் மில்' தொழிலாளர்கள் புரட்சி செய்ய ஆரம்பித்தனர். வெள்ளை முதலாளிகளின் கொடுமைக்கு ஆளாகியிருந்த கோரல் மில் தொழிலாளர்கள் இவர்களின் ஆவேசப்பேச்சுகளால் புத்துணர்ச்சி அடைந்தனர்; தங்கள் கூலி விகிதத்தை உயர்த்தி விடுமுறை நாள்களை அதிகரிக்கவேண்டுமென்று மில் நிர்வாகிகளிடம் விண்ணப்பித்துக் கொண்டனர். நிர்வாகிகள் தொழிலாளர்களின் குறைகளைத் தீர்க்கச் சம்மதிக்காத காரணத்தால் தொழிலாளர் அனைவரும் ஒன்று திரண்டு, 1908-ல் வேலை நிறுத்தம் செய்தனர். சிதம்பரனார் தலைமையில் நடந்த இத் தூத்துக்குடி மில் வேலை நிறுத்தம்தான் இந்தியாவிலேயே முதன் முதலாக நடந்த அரசியல் சார்புடைய வேலை நிறுத்தம் ஆகும்.

அக்காலத்து இந்திய தேசிய காங்கிரசின் முன்னணித் தலைவர்களில் ஒருவராக விளங்கிய பிபின் சந்திரபால் தேசிய இயக்கத்தில் பெரும்பங்கு கொண்டார். பிபின் சந்திரபால் கோர்ட்டை அவமதித்த குற்றத்திற்காகச் சிறை செல்லவேண்டி வந்தது. பிறகு அவர் 1908ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 9ஆம் தேதி விடுதலை அடைந்தார். அத் தினத்தைத் திருநாளாகக் கொண்டாடுவதெனத் திருநெல்வேலி மாவட்டம் தீர்மானம் செய்தது. இதை அறிந்த அரசியல் அதிகாரிகள் அச்சம் கொண்டனர். மார்ச்சு 9ஆம் தேதி தூத்துக்குடியில் ஊர்வலமோ, பொதுக்கூட்டமோ, நடத்தக்கூடாதெனத் தடையுத்தரவு பிறப்பிக்கப்பட்டது. மற்றும் அமைதியைக் குலைக்கக்கூடிய அரசியல் நடவடிக்கை எதிலும் கலந்துகொள்ளக் கூடாதெனச் சிதரம்பரனார், சுப்பிரமணியசிவா ஆகியவர்க்குக் கலெக்டர் தடை விதித்திருந்தார். எனினும், இத் தடைகளைக் கண்டு சிதம்பரனார் சிறிதும் அஞ்சவில்லை. மார்ச்சு 9ஆம் தேதி தூத்துக்குடியில் நடத்த இருந்த விடுதலை விழாவைத் திருநெல்வேலியில் மார்ச்சு 14ஆம் தேதியில் நடத்தினார். சிதம்பரனாரும் சிவாவும் கலெக்டர் உத்தரவை மீறி மாபெரும் ஊர்வலத்தில் கலந்து கொண்டதோடல்லாமல பொதுக்கூட்டத்திலும் பேசினர். இருவரின்

பேச்சின் விளைவு என்னவென்றால், திருநெல்வேலி மாவட்டத்தில் வெள்ளையரைக் கண்டால் வெறுப்பு; அதிகாரிகளைக் கண்டால் ஆத்திரம்; அன்னிய ஆடை தரித்தவரைக்கண்டால் கோபம். மேற் கண்டவர்க்கெல்லாம் சலவைத்தொழிலாளி துணி வெளுக்க மாட்டார்; க்ஷவரத்தொழிலாளி க்ஷவரம் செய்யமாட்டார்; வண்டிக் காரர் வண்டி ஓட்டமாட்டார்.

சிதம்பரனாரின் தீவிரப்போக்கையும், மக்களிடையே அவருக் கிருந்த செல்வாக்கையும் கண்டு அஞ்சிய அதிகாரிகள், சிதம்பர னாரை எங்ஙனமேனும் சிறைசெய்தே தீரவேண்டும் என்ற முடிவுக்கு வந்தனர். கலெக்டராக இருந்த விஞ்ச்சு, திருநெல்வேலியில் தம்மை வந்து சந்திக்குமாறு சிதம்பரனாருக்கும் சிவாவுக்கும் ஆணையிட்டார். சந்திப்பின்போது விஞ்ச்சுதுரை பல்வகைக் குற்றங்களை இருவர்மீதும் சுமத்தி, அரசியல் கிளர்ச்சியில் ஈடுபடுவதில்லை என நன்னடத்தை ஜாமீன் தரவேண்டுமெனச் சிதம்பரனாரிடம் கூறினார். சிதம்பரனார் மறுக்கவே, கோபமடைந்த கலெக்டர், அவ்விருவரையும் அங்கேயே கைது செய்தார். சிதம்பரனாரைக் கைது செய்த செய்தி தெரிந்த வுடன் நெல்லையில் பெருங்குழப்பமும் கலகமும் ஏற்பட்டன. செஷன்ஸ் நீதிபதி ஏ. எப். பின்ஹே முன்பு, சிதம்பரனார், சிவா வழக்கு விசாரணை சுமார் இரண்டு மாதகாலம் நடைபெற்றது. சிதம்பரனாருக்கு விரோதமாகச் சாட்சியம் கூறியவர்கள் போலீஷ் காரர்களும் பிரிட்டிஷ் ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனியைச் சேர்ந்த வெள்ளையர்களுமே யாவர். கடைசியில் சிதம்பரனார் குற்றவாளி யெனத் தீர்மானிக்கப்பட்டு அரச நிந்தனைக் குற்றத்திற்காக 20 வருடத் தீவாந்தர தண்டனையும், சிவாவுக்கு உடந்தையாக இருந்த குற்றத்திற்காக இருபது வருடத் தீவாந்தர தண்டனையும் ஆக 40 வருட தண்டனை அனுபவிக்கவேண்டுமென உத்தரவு பிறப்பிக்கப் பட்டது. சிவாவுக்கு அரச நிந்தனைக் குறறத்திற்காக 10 ஆண்டுகள் தீவாந்தர தண்டனை விதிக்கப்பட்டது.

சிதம்பரனாருக்கு விதிக்கப்பட்ட கொடுந்தண்டனையைக் கேட்டு இந்திய நாடே அதிர்ச்சி அடைந்தது. பத்திரிகைகள் நீதிபதி பின்ஹேயின் தீர்ப்பைக் கடுமையாகத் தாக்கித் தலையங்கம் எழுதின. அபபோதைய இந்தியா மந்திரியாக இருந்த லார்டு மார்லி என்பவரும் இத் தண்டனைக்குக் கண்டனம் தெரிவித்தார்.

ஆயின், வீரத்தமிழரான சிதம்பரனார் தமக்கு ஏற்பட்ட கொடுந் தண்டனையைக் கேட்டுச் சிறிதும் கலங்கவில்லை; சென்னை

ஹைகோர்ட்டுக்கு மனுச் செய்தார். அதனால், அது 6 வருடத் தண்டனையாகக் குறைந்தது.

சிதம்பரனார் தம் தண்டனைக் காலத்தைக் கோயமுத்தூர், கண்ணனூர்ச் சிறைகளில் கழித்தார்; சிதம்பரனார் சிறையில் பட்ட துன்பங்கள் அளவிறந்தன. அந் நாளில் இன்றுள்ளதுபோல் சிறையில் வகுப்புப் பிரிவுகளும் இல்லை; அரசியல் கைதிகளுக்கெனத் தனி உரிமைகள் ஏதும் வழங்கப்படவும் இல்லை. தாய்த்திருநாட்டின் விடுதலைக்காகச் சிறையில் மாடுபோல் செக்கிழுத்தார் செம்மல் சிதம்பரனார். அறுசுவை உண்டி உண்டு வளர்ந்தவர் சிறையில் கேழ்வரகுக்கஞ்சி குடித்தார். அவரது உடல் நிறை ஐந்தில் ஒரு பங்கு குறைந்தது. ஆயின், அவர் உள்ள உறுதி சிறிதும் குறையவில்லை. சிறையிலிருந்து அவர் பாடிய வீரப்பாடல் ஒன்றே அன்னாரது உள்ள உரத்தை அறிவிக்கும்.

"என்மனமும் என்உடம்பும் என்சுகமும் என்அறமும்
என்மனையும் என்மகவும் என்பொருளும்—என்இனமும்
குன்றிடினும் யான்குன்றேன்; கூற்றுவனே வந்தாலும்
வென்றிடுவேன் காலால் மிதித்து."

வ. உ. சி. சிறையில் இருக்கையில் கலெக்டர் ஆஷ், 1911ஆம் ஆண்டில் மணியாச்சி ஸ்டேஷனில் சுட்டுக்கொல்லப்பட்டார். இச் செய்தியைக் கேள்வியுற்ற சிதம்பரனார்,

"நான் சிறைப்பட்ட பின்னும் என்னைப் பின்பற்றிச் சுதேசிக் கிளர்ச்சியை அறவழியில் நடத்திவரும் அன்பர்களுக்கு எனது வணக்கத்தைத் தெரிவித்துக்கொள்கிறேன். ஆனால், எனது கோட்பாட்டுக்கு மாறாக, கொலைச்செயல்கள் நடைபெறுவதற்கு வருந்துகிறேன். நாம் போராடுவது பிரிட்டிஷ் ஆட்சி முறையை எதிர்த்தேயாகும். ஆங்கில அதிகாரிகளைக் கொலை செய்வதால் அன்னிய ஆட்சி அழிந்துவிடாது. கொடியவர்களாயினும் அவர்களது உயிருக்குத் திங்கு செய்யக்கூடாதென்பதே எனது கோட்பாடு"

என்று நண்பர் ஒருவருக்குக் கடிதம் எழுதினார். இதிலிருந்து அவர் தீவிரவாதியாயிருப்பினும், கிளர்ச்சியை அறவழியில் நடத்தவே விரும்பினார் என்பது புலனாகும்.

சிறையிலிருந்து 1912-ல் விடுதலை பெற்ற சிதம்பரனார், மீண்டும் அரசியலில் பங்குகொள்ள விழைந்தார். 1920-ஆம் ஆண்டு கல்கத்தாவில் கூடிய காங்கிரஸ் மகாசபைக்குச் சிதம்பரனாரும்

பிரதிநிதியாகச் சென்றிருந்தார். காந்தியடிகளின் ஒத்துழையாமைத் திட்டம் தீவிரவாதியான இவருக்குச் சிறிதும் பிடிக்கவில்லை. மனச்சாட்சிக்கு மாறாகச் செயல்பட விரும்பாத சிதம்பரனார் காங்கிரசிலிருந்து விலகினார். எனினும், கடைசிவரை ஆங்கிலேயரின் ஏகாதிபத்தியத்தின் எதிர்ப்பாளராகவே இருந்துவந்தார். வ. உ. சி. இறக்கும் தருவாயில் பாரதியாரின் 'என்று தணியும் இந்தச் சுதந்திர தாகம்' என்ற பாட்டைக் கேட்டுக்கொண்டே உயிர் நீத்தார்.

தமக்கெனச் சில கொள்கைகளை வகுத்துக்கொண்டு அவற்றின் வழியே நடந்த கடமை வீரர் இவர்; 'பெற்ற தாயும் பிறந்த பொன்னாடும் நற்றவ வானினும் நனிசிறந்ததெ'னக் கொண்ட செயல் வீரர்; நாட்டுப் பற்றிலே தம் வீட்டு நலன்களைத் துறந்த தியாகச் செம்மல்; வறியார்க்கு வழங்கிய இல்லோர் செம்மல், நாட்டின் விடுதலைக்காகத் தம் சொந்த வாழ்க்கையைப் பணயம் வைத்து, அரசியல் விடுதலைத்தீயில் தம்மைச் சிறிது சிறிதாக மாய்த்துக் கொண்ட வள்ளல். உரிமை உள்ளமும், விடுதலை உணர்ச்சியும், நாட்டுப் பற்றும் கொண்ட கப்பலோட்டிய தமிழர் வீர சிதம்பரனார் நம் உள்ளங்களில் என்றும் வாழ்வாராக.

2

# பொருளியல் - தொழிலாளர் நலத்துறைகட்கு வ. உ. சி. யின் தொண்டு

டாக்டர் வேதகிரி சண்முகசுந்தரம்,
பி. ஏ. (ஹானர்ஸ்) (பொருளியல்), எம். ஏ. (அரசியல்) எம். லிட்.,
பி. எச். டி., பேராசிரியர்–பொருளியல் துறைத் தலைவர்
சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை–5.

பொருளடக்கம் : 1. முன்னுரை—பழங்கால நினைவுகள் —கட்டுரைக்கு ஆதாரங்கள் (Collingwood, Bertrand Russel & Shaw) 2. ஆராய்ச்சி முறைகள் 3. முன்னோடிகள் 4. சிதம்பரனாரின் அரசியல் பற்று 4.1 தமிழகத்தின் கப்பலோட்டிய தொன்மை 4.2 கப்பல் துறையில் தமிழகம் பின் தங்கியதேன் 4.3 வெற்றி அரசியலில்; ஆனால், பொருளியலில் இல்லை 4.4 கப்பலோட்டிய தமிழர் சிறையில் செக்கு இழுப்பவரானார் 4.5 சிதம்பரனாரின் முயற்சித் தொடர்புகள் 5.0 சுதந்திரத்திற்குப்பின் 5.1 சுதந்திரம் பெற்றுக் கப்பலோட்டிய தமிழர்கள்.

1. கடல் கடந்த வாணிகம் செய்த தமிழ் மரபிலே வந்த கப்பல் ஓட்டிய தமிழன் வ. உ. சியைப் பற்றிப் பேச எனக்கு வாய்ப்பினை அளித்த தமிழ்த்துறைக்கும் தலைவர் டாக்டர் ந. சஞ்சீவி அவர்களுக்கும் துணைவேந்தர் திரு. நெ. து. சுந்தரவடிவேலு அவர்களுக்கும் முதற்கண் என் நன்றியைத் தெரிவிக்கிறேன்.[1] 66 ஆண்டுகளுக்கு முன்பாக சுதேசி இயக்கத்தின் தொடக்க நிலையிலேயே முதல் சுதேசிக் கப்பலை மிதக்கவிட்ட வ. உ. சியைப் பற்றி மிகப் பலர் எழுதியும் பேசியும் இருக்கின்றனர். நூலகப் பட்டியல்களிலே கிடைக்கும் நூல்களும் கட்டுரைகளும் தவிர, கடந்த 40 ஆண்டுகளாக "1933ஆம் ஆண்டு தொடங்கி இதுவரை ஆயிரக் கணக்கான கூட்டங்களிலே வ. உ. சியின் வீர வரலாற்றைப் பேசி

1. சென்னைப் பல்கலைக்கழகம் : தமிழ்த்துறை : கப்பலோட்டிய தமிழர் வ. உ. சிதம்பரனார் நூற்றாண்டு விழா, 5-10-72.

அவரது புகழ் விளக்கு அணைந்து விடாமல் காத்து'' வரும் திரு. ம. பொ. சிவஞானம் அவர்கள் நம்மிடையே வீற்றிருப்பது இக் கருத்தரங்கில் பங்கு கொள்வோருக்கு அவையடக்கத்தையும் ஓரளவுக்கு நடுக்கத்தையும் உண்டாக்குகிறது. 'கப்பலோட்டிய தமிழன' என்ற சிறப்புப் பெயரை நாட்டுக் காவலர் வ. உ. சி. அவாகளுக்கு அளித்தவரே திரு. ம. பொ. சி. அவர்களாவர். திரு. ம. பொ. சி. பேசுகின்ற மேடையில் மற்றெருவர் பேசும் நிலை ஏற்பட்டால், அவர் பலதரம் எண்ணிப்பார்த்துச் செயற்பட வேண்டியது அவசியமாகிறது.

## *2.0* ஆராய்ச்சி முறைகள்

இன்று நான் ஆராயப்போவது 'பொருளியல்-தொழிலாளர் நலத்துறைகளுக்கு வ. உ. சியின் தொண்டு' என்பதைப் பற்றிய பொருளாகும். இதன் ஆய்வு முறை, பேராசிரியர் கோலிங்வுட் (Collingwood) எடுத்துரைத்தது போலப் பழங்கால நினைவுகளை நிகழ்காலச் சந்ததியினர்க்குச் சார்பு உடைய ஒத்த வகையிலே மறுபடியும் நிகழ்த்திக் காட்டவேண்டும்.[1] இம் மரபிலேயே பெட்ரன்ட் ரஸல் (Bertrand Russel) அவர்களும் 'நினைவிலிருந்து ஓவியங்கள்' (Portraits from Memory) என்னும் நூலில் தான் விகடோரியா மகாராணியார் காலத்து நம்பிக்கை மிக்கதோர் சூழ் நிலையில் வளர்ந்த காரணத்தினுல் வாழ்நாள் முழுவதும் அவ் வழியி லேயே நிகழ்ச்சிகளையெல்லாம் கண்டறிவது இயல்பாயிற்று என்று கூறுகின்ருர்.[2] இம் மரபையேதான் சர். வின்ஸ்டன் சர்ச்சில் (Sir Winston Churchill) அவர்களின் 'History of the English Speaking People' என்னும் நூலிலும் காண்கிருேம்.

சுதந்திரப் போராட்ட இயக்கத்தில் வாழ்நாளின் இளமை முழுவதும் பங்கு கொண்ட பலரும் திரு. சிதம்பரனுர் அவர்களை ரஸல், சர்ச்சில் (Russel, Churchill) அவர்கள கூறுகின்ற இலக்கணத்திற்கு ஏற்ப ஒரு சுதந்திர இயக்கவாதியாகவே கருது கின்றனர். ம. பொ. சி. அவர்களின் எழுத்துகளும் பேச்சுகளும் இதற்குப பெரும்பாலும் பக்கபலமாய் அமைகின்றன. இது உலக

1. COLLINGWOOD, R. G. "*Te Idea of History*" Oxford-Paper back 1961. p. 282.

2. RUSSEL, BERTRAND: "*Portraits from Memory*" 1956, p. 17 quoted by CARR, E. H. "*What is History*" 1961, p. 12.

மரபுக்கு ஒப்பானது. மற்ருெரு மரபும் உண்டு. அது கோலிங்வுட், பெர்னுட்ஷா (Collingwood, Bernard Shaw) போன்ருேர் கையாண்ட பழங்காலத்தை நிகழ்காலத்தில் பொருத்தி வரலாற்றுக் கோவையை இடைவிடாது பயன்படுத்தும் மரபு. என்னுடைய ஆய்வுக் கட்டுரை முதல் பகுதியில் ரஸல், சர்ச்சில் (Russel, Churchill) ம. பொ. சி. அவர்கள் வழியிலும் இரண்டாவது பகுதி கோலிங்வுட், பெர்னுட்ஷா (Collingwood, Bernard Shaw) அவர்கள் வழியிலும் அமைந்துள்ளது.

### *3.0 முன்னேடிகள்*

இக் கட்டுரைக்கு ஆதாரமாய் அமைந்த நூல்கள் பலப்பல. பெருமபாலும் சிலம்புச் செல்வர் பின்பற்றிய வழியிலேயே என்னுடைய ஆதாரங்களும் அமைந்திருக்கின்றன. சிலம்புச் செல்வர் அவர்கள் முதற்கண் எழுதிய '**கப்பலோட்டிய தமிழன்,**' பின் அமைந்த '**கப்பலோட்டிய சிதம்பரனுர்,**'[1] '**வள்ளலார் கண்ட ஒருமைப் பாடு,**' '**கயத்தாற்றில் கட்டபொம்மன்**' முதலிய நூல்களில் அமைந்த ஆய்வு வழி வகை சிறப்பு மிக்கது. இந் நூல்களை எழுதும்போது அவைகளுக்கு ஆதாரமாகப் பிற மூல நூலகளையும் அவர் ஆராய்ந்துள்ளார். அஃதன்றித் தாம் எழுத மேற்கொண்ட பொருள் பற்றி அறிந்த, கேட்ட அறிஞர் பெருமக்களை எல்லாம் கண்டு பேசி வேண்டிய தகவல்களையெல்லாம் சேகரித்துத் தந்துள்ளார். சுருங்கக் கூறின், பல்கலைக் கழகத்தில் ஆராய்ச்சித் துறைகளில் டாக்டர் (Ph. D.) முதலிய பட்டங்களுக்கு ஆராய்ச்சி நடத்தும் மாணவர்கள் மேற்கொள்ளவேண்டிய ஆராய்ச்சி முறை களனைத்தையும் பின்பற்றியுள்ளார்.

அம் முறையைத் தழுவியே நானும் எனது கட்டுரைக்கு மூல மான ஆதாரங்களைத் தேட முனைந்தேன். ஆனுல், குறுகிய காலத்தில் இதனைச் செய்யவேண்டி இருந்ததால், முழுமையான தகவல்களைச் சேகரிக்க முயலவில்லை. கப்பல் வாணிபத் துறையில் ஈடுபட்டுள்ள சிலரைக் கண்டு பேசினேன். குறிப்பிடத்தக்கவர்கள் South India Shipping Corporation Ltd. சேர்ந்த திரு. பத்மநாபன் அவர்களும், Indian Steam Ship Company-ன் ஏஜெண்டான திரு. அனந்தகிருஷ்ணன் அவர்களும் ஆவர்.

---

1. சிவஞானம், ம. பொ.; கப்பலோட்டிய சிதம்பரனுர் (இன்பநிலையம், சென்னை-4. 1972) 5—9—1972 வ. உ. சி. நூற்ருண்டு விழா.

திரு. ம. பொ. சி. எழுதிய நூல்கள் தவிர, செந்தமிழ்ச் செல்வி என்னும் திங்கள் வெளியீடு (September, 1972) வ. உ. சிதம்பரனார் நூற்றாண்டு விழா மலரை வெளியிட்டுள்ளது. அதில் புலவர் சிங்காரவேலனார், திரு. எழில் முதல்வன், திரு. க. ப. அறவாணன், கவியோகி சுத்தானந்த பாரதி, ஞா. தேவநேயன், கோ. ப. பெருமாள், நாமக்கல் கவிஞர், முத்துலிங்கம், நெல்லை சொக்கலிங்கம், புலவர் குழந்தை, கவிஞரேறு வாணிதாசன், சேலம் வீரராகவ அய்யங்கார் முதலியோர் சிறப்பு மிக்க கட்டுரைகளும் கவிதைகளும் எழுதி யுள்ளனர். திரு. வையாபுரிப் பிள்ளை அவர்கள் எழுதிய 'நான் கண்ட வ. உ. சி. (தமிழ்ச்சுடர் மணிகள்), இ. மு. சுப்பிரமணிய பிள்ளை எழுதிய 'வீர சிதம்பரனார்,' மேலும், தில்லித் தமிழ்ச்சங்கத்தின் 'சுடர்' வ. உ. சி. மலர் 1964 போன்ற நூல்கள் இக் கட்டுரைக்கு ஆதாரமாய் அமைந்துள்ளன.

## 4.0 சிதம்பரனாரின் அரசியல் பற்று

புலவர் இளம் வழுதியின்,[1] "வாராய், சிதம்பரமே வா" என்ற கலிவெண்பாவில் கூறியபடி,

"வீறுடனே அந்நாளில் வீர சிதம்பரனார்
சீறிப் பரங்கியர்க்குத் தீயாகி நின்றதுவும்,
ஆர்க்குங் கடலிடத்தே ஆங்கிலேயர் தாம்பதற
நேருக்கு நேர்க்கப்பல் சீர்பெறவே விட்டதுவும்,
தூத்துக் குடியதனில் துன்புற்ற ஏழையர்தம்
மூத்த வறுமை முறிய நெசவாலை
நாட்டி எளியோரின் நண்பனாய் நின்றதுவும்"

நாடறிந்தது.

திரைகடலோடித் திரவியம் தேடினவர்கள் தமிழர்கள் என்று இலக்கியங்கள் கூறுகின்றன. வெகுகாலத்திற்குப் பின்னர் அந்நியர் ஆதிக்கத்தை முறியடிக்கக் கப்பலோட்ட முனைந்தவர் வீர சிதம் பரனார். கர்ஸன் பிரபு வைசிராயாக இருந்தபோது, வங்காள மாநிலம் இரு கூறுகளாக ஆக்கப்பட்டது. வங்கப் பிரிவினைக் கிளர்ச்சி விடுதலை வேட்கை கொண்டோரை வீறுகொண்டு எழச் செய்தது. தமிழ்நாட்டில் வெள்ளையருக்கு எதிராகச் சுதந்திரத்

1. இளம் வழுதி "வாராய், சிதம்பரமே, வா" 'செந்தமிழ்ச் செல்வி' (September, 72) பக்கம்: ருக.

தீயைப் பரப்பிவிட்ட தியாகச் செம்மல்களுள் சிதம்பரனுர் முன் னணியில் நிற்கிருர். அப்போது தூத்துக்குடிக்கும் இலங்கைக்கு மிடையே வணிகப்போக்குவரத்தை ஆங்கிலக் கப்பல் கம்பெனி ஒன்று நடத்திவந்தது. அதற்குப் போட்டியாக 1906ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 16ஆம் தேதி தூத்துக்குடியில் சிதம்பரனுர் சுதேசிக் கப்பல் கம்பெனி ஒன்றைப் பதிவு செய்தார். பம்பாய் சென்று பல இடையூறுகளுக்கிடையே 'காலியோ,' 'இலாவோ' என்ற இரு கப்பல்களை வாடகைக்கு (lease) வாங்கிக்கொண்டு தூத்துக்குடி திரும்பினுர். தூத்துக்குடியைச் சேர்ந்த வணிக சமூகத்தினரும் மற்றையோரும் இந்தியாவில் பல்வேறு பகுதிகளி லிருந்தும் இதில் பங்குதாரர்கள் ஆயினர். மாமேதை திரு. ராஜாஜி அவர்களும் இதில் ஒரு பங்குதாரர். 'கம்பெனியிலிருந்து நீ விலகிவிடு; உனக்கு இலட்சக் கணக்கான ரூபாய்கள் இரகசியமாகத் தருகிருேம்' என்று வெள்ளையர்கள் கூறியதற்குச் சிதம்பரனுர் கூறிய பதில், 'சீ! சீ! போ வெளியே!' என்பது. இதனுல் அவருக்கு நேரிட்ட இடுக் கண்கள் ஒன்றையொன்று மிஞ்சின.

### 4.1 தமிழகத்தின் கப்பலோட்டிய தொன்மை

தொன்றுதொட்டுத் தமிழகம் திரைகடலோடி வாணிகத்தொடர் புகளைப் பன்னுட்டினருடனும் ஏற்படுத்திக்கொண்டுள்ளது. சோழர் காலத்தில் தொண்டைமண்டலக் கப்பல் துறைகளில் இருந்து பெரிய கப்பல்கள் இலட்சக்கணக்கான தமிழ் வீரர்களை அண்மையில் உள்ள இலங்கைத் தீவிற்கும், தொலைவில் உள்ள சிங்கப்பூர், மலேயா போன்ற இடங்களுக்கும் ஏற்றிச் சென்ற செய்திகளையும் அனைவரும் அறிவோம். இஃதன்றி ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே கப்பல்கள் கட்டப்பெற்று கடலில் செலுத்தப்பட்டன என்பதனை அரப்பா, மொஹஞ்சதரோ முதலிய இடங்களில் நடந்த அகழ்பொருள் ஆராய்ச்சிகள் அறிவிக்கின்றன.

### 4.2 கப்பல்துறையில் தமிழகம் பின் தங்கியதேன்?

இவ்வாறு கப்பல் வாணிகத்தில் சிறந்து விளங்கிய தமிழகமும் இந்தியாவும் அத் துறையில் பின்தங்கியது ஏன்? இக்கேள்விக்கு விடைகாண்பதில் முக்கியமாகக் கருதத்தக்கது ஆங்கிலேயர் முதலில் இந்தியப் பொருளாதாரத்தையும், பின்னர் அரசியலையும் அடிமைப் படுத்தியதேயாகும். இந்தியர் கப்பல் வாணிகத் தொழிலில் அண்மைக்

காலத்திலும் சிறந்து விளங்கினர் என்பதற்குச் சான்று 19ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் பம்பாயில் 'INDIA MAN'போன்ற சிறந்த கப்பல்கள் உள்நாட்டு மரம் முதலியனவற்றினைக் கொண்டு இந்தியத் தொழிலாளரின் தொழில் நுட்ப அறிவினையே மையமாகக் கொண்டும் பிரிட்டிஷ் வணிகர்களுககாகக் கட்டப் பெற்றன என்ற செய்திகளாகும். பின்னர், ஆங்கிலேயரின் ஆதிக்கம் பொருளாதார அரசியல் துறைகளில் வலுப் பெற்று இந்தியரின் கப்பல் வாணிகத் தொழில் பிற்போக்கு நிலையினை அடைந்தது.

இதனை 1906ல் சீர்திருத்த முனைந்தார் வ.உ சி. அவரது முயற்சி பொதுவாக வாணிகத் துறையில் ஈடுபடும் ஒருவர் எவ்வாறு இலாப நோக்கோடு முனைவாரோ அவ்வாறு இல்லாது ஆங்கிலேயரின் அரசியல் ஆதிக்கத்தைப் பலவீனப்படுத்தப் பொருளாதாரத் துறையில் தான் மேற்கொள்ளும் சீரிய எண்ணமாக இருந்தது. சிதம்பரனார் வக்கீல் தொழில் புரிந்த தூத்துக்குடி வாணிக முககியத் துவம் வாய்ந்த சிறந்த துறைமுகப் பட்டினமாகும். அங்கு அன்னிய வணிகரே முழு ஆதிக்கம் செலுத்திவந்தனர். இதனை முறியடிக்கவே கப்பல் கம்பெனி ஒன்றைத் தொடங்கினார் சிதம்பரனார். இம் முயற் சியினை மேற்கொண்டதன் மூலம் அவரது கொழுத்த வருவாய் தரும் வழக்கறிஞர் தொழிலையும், சுகமான வாழ்க்கை முறையினையும் துறக்கவேண்டி இருந்தது. அடிமைத்தளை அகற்ற சுதந்திர அன்னைக்கு இது சிதம்பரனார் செய்த ஒப்பற்ற தியாகமாகும். பிரிட்டிஷார் கடல் வாணிகத்தின் மூலமே பன்னாடுகளையும் முதலில் வாணிகத் தொடர்பினாலும், பின்னர் ராஜதந்திர அரசியல் தொடர் பினாலும் அடிமைப்படுததினர் இதனை வ.உ.சி. நன்கு உணர்ந்தார். வழக்கறிஞராகிய அவர் அரசியல் தொடர்புகளுக்கு ஆதாரமான அன்னாரின் வாணிகத் தொடர்புகளைப் பலவீனப்படுத்த முயன்றார்.

அப்போது நாடு முழுவதிலுமே விடுதலைப் போராட்டம் கிளர்ந்து எழுந்தது. வங்காளத்தில் பிபின் சந்திர பாலரும் அரவிநதரும், பாஞ்சாலத்தில் லஜபதி ராயும், மஹாராட்டிரத்தில் திலகரும், தென்னாட்டில் சிதம்பரனாரும் இப் போராட்டத்தின் தலைவர்களாய் இருந்தனர். வெளி நாட்டுப் பொருள்களை வெறுத்து ஒதுக்குதலும், நம் நாட்டுப் பொருள்களுக்கு ஆதரவு தருதலும் மக்களிடையே பெருகலாயின. வ உ.சி. அவர்கள் தூத்துக்குடியில் தர்ம சங்க நெசவு சாலையும், சுதேசிப்பண்டகசாலையும் தோற்றுவித்தார். அவரது உரிமை முழக்கம் நெல்லை மாவட்டத்தின் சிற்றூர் பேரூர்தோறும்

ஒலிக்கலாயிற்று. இவருடைய வீரக்கனல் செறிந்த சொற்பொழிவுகள் விடுதலை வெறியை மக்களிடையே முடுக்கிவிட்டது.

திரு.டி.எஸ். சஞ்சீவராய் அவர்கள் எழுதிய "A short history of Modern Indian Shipping" என்னும் நூலில் 1819 முதல் 1919 முடிந்த காலத்தை 'நூற்றுண்டுகால ஏமாற்றம்' என்று தலைப்பிட்டு வர்ணிக்கிறுர். அதில் அரசியல், பொருளாதாரக் காரணங்களினுல் இந்தியருடைய பொருளாதார வாணிகத் துறைகளில் தீரமிக்க முயற்சிகள் எவ்வாறு வீண் போயின என்று குறிப்பிடுகிறுர். சுதேசி கப்பல் தொழில் முன்னேடிகளான ஜாம் ஷெட்ஜி டாட்டா, வ.உ.சி., ஜோதிந்திரநாத் டாகூர், ஆசாரியா ரே ஆகியோர் ஆங்கிலேயக் கப்பல் ஆதிக்கத்தினுல் எவ்வளவு முயன்றும் வெற்றி பெறமுடியாமல் போயினர். 1919-ல் தொடங்கப் பெற்ற India Steam Ship Companyயும் அத்தகைய ஒரு முயற்சிதான். நொடித்துபோன வ. உ.சியின் முயற்சிக்குப் பிறகு வெற்றி நடை போட்ட இந்தியத் தேசியக் கப்பல் சிந்தியாவின் கொடியுடன் புறப் பட்டது. இதன் அதிபர்களான நரோத்தம் மொரார்ஜியும் வால்சந்த் ஹீராசந்தும் அதன் வெற்றிக்காகப்பட்ட பல தொல்லைகள் தெரிந்த விஷயமே. அக்காலத்தில் P & O., Cunard போன்ற மேனுட்டுக் கப்பல் கம்பெனிகளுடன் அது தீவிரப் போட்டியிட வேண்டியிருந்தது. சிந்தியாக் கம்பெனி தொடங்கி மேலும் இந்தியக் கப்பல் கம்பெனிகள் விருத்தி அடைந்ததை விடாமுயற்சியின் வெற்றி என்று கூறலாம்.

### *4.3* வெற்றி அரசியலில்; ஆனுல் பொருளியலில் இல்லை

ஆயினும், வ.உ.சி.யின் கப்பல் கம்பெனி பல்லாண்டுகள் நீடிக்க முடியவில்லை. அவருடைய முயற்சியை முளையிலேயே கிள்ளி எறிய ஆங்கிலேய ஆட்சியாளரும் வணிகர்களும் எல்லா வழிகளையும் மேற்கொண்டனர். தங்கள் கப்பல் பயணச் சீட்டுகளின் விலைகளையும் வாணிகப் பொருள்களைக் கொண்டு செல்லும் விலையினையும் பாதிக்கு மேலாகக் குறைத்தனர். இலவசப் பயணங்களையும் அனுமதித்துப் பெரும் விளம்பரப்படுத்தினர். சிதம்பரனுரையே விலைக்கு வாங்கக் கூட முனைந்தனர். கப்பல் தொழிலில் பெரும்போட்டியாக முளைத்த தோடு அன்றி விடுதலைப் போராட்டத்தில் சுப்பிரமணிய சிவா முதலியோருடன் முன்னணியில் நின்று ஆங்கிலேயரின் பகையை மேலும் வளர்த்துக்கொண்டார். அதனுல் தூத்துக்குடியில் நடந்த

சில கலகங்களில் சிதம்பரனுர் கப்பல் கம்பெனியினரை வேண்டு மென்றே ஆங்கிலேய அரசாங்கம் ஈடுபடுத்தியது.

### 4.4 கப்பலோட்டிய தமிழர் சிறையில் செக்கு இழுப்பவரானர்

1908ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் வங்கத்து விடுதலை வீரரான பிபின் சந்திரபால் அவர்களைச் சிறையிலிருந்து விடுவித்தமைக்காகச் சிதம்பரம்பிள்ளையும், சுப்பிரமணிய சிவாவும் சேர்ந்து வெற்றிக் கொண்டாட்டங்கள் நடத்தினர். அதைச் சார்ந்து எற்பட்ட கலவரங் களில் நான்குபேர் சுட்டு வீழ்த்தப்பட்டனர். இதைத் தொடர்ந்து இவர்கள் இருவரும் அரசியலில் இனி ஈடுபடமாட்டோம் என்று மாவட்டக் கலெக்டர் எழுதித்தரும்படி கேட்டார். பெருத்த வாக்கு வாதத்திற்குப்பின் இருவரும் மறுத்தனர். அதனல் சிறையிடப் பட்டு மாவட்ட நீதிபதியினுல் இருமுறை ஆயுள் தண்டனை விதிக்கப் பட்டனர். முறையீட்டிற்குப்பின் (appeal) அது பிரிவிகௌன்சிலினுல் ஆறு வருடக் கடுந்தண்டனையாக மாறியது. அப்போது கப்ப லோட்டிய அதே தமிழர் செக்கு ஓட்டும்படியுமாயிற்று. அவர் சிறையிலிருந்து திரும்புமுன்பே அவர் ஆரம்பித்த கப்பல் கம்பெனி பொருளாதாரச் சிக்கல் காரணமாகக் கலைக்கப்பட்டது.

### 4.5 சிதம்பரனுரின் முயற்சித்தொடர்புகள்

4.2. 1947-ல் இந்தியக்கப்பல் வாணிகம் 2,49,000 அளவுள்ள தாகவே இருந்தது. பெரும்பாலும் கப்பல்கள் நாட்டின் கடற்கரை வணிகத்தையே (Coastal Shipping) மேற்கொண்டிருந்தன. இப்பொழுது 30 கப்பல் கம்பெனிகள் நம் நாட்டில் இருக்கின்றன. அவற்றின் மொத்த tonnage 25,06,976 GRT ஆக வளர்ந் துள்ளது. தற்போதுள்ள இந்திய வாணிகக் கப்பல்களின் எண்ணிக்கை 256 ஆகும். அவற்றுள் 193 கப்பல்கள் கடல் கடந்து செல்பவை. கடற்கரை வாணிகக்கப்பல்கள் (Coastal ships) 63 ஆகும்.

வ. உ. சி அவர்கள் இந்தியப் பொருளாதாரத்திற்குச் செய்த சீரிய தொண்டு சுதேசிக் கப்பல்கள் ஆரம்பிக்கும் வாயிலாக சுதேசித் தொழில்கள் மறுமலர்ச்சி அடைய வழி கோலியதாகும்.

வெற்றிநடைபோடும் இந்தியக் கப்பல் துறையின் ஒவ்வொரு முக்கிய கட்டத்திலும் வ.உ.சியை நினைவுகூர்ந்தே ஆகவேண்டும்.

### *5.0 சுதந்திரத்திற்குப்பின்*

கடந்த 25 ஆண்டுக்காலத்தில் 58 பெரிய கப்பல்களை இந்துஸ்தான் கப்பல் தளம் கட்டி முடித்திருக்கிறது. இந்தியாவில் மூன்று இடங்களில் பெரும் அளவிலான கப்பல் கட்டும் தளங்கள் உள்ளன. இந்தியக் கப்பல் கார்ப்பரேஷனுக்கு மட்டுமே 79 கப்பல்கள் சொந்தமாக உள்ளன. 1961ஆம் ஆண்டுடன் ஒப்பிடும்போது இது 538 சதவீத வளர்ச்சியாகும்.

தற்போது இந்தியா, கப்பல்களின் எண்ணிக்கைப்படி உலக நாடுகளில் 17-வதாக உள்ளது. தற்போதைய பொருளாதார வளர்ச்சியில் கப்பல் வாணிகத்துறை இன்றியமையாத அங்கம் வகிக்கிறது. 3000மைல் நீளம் கடற்கரையைக் கொண்ட இந்திய நாட்டிற்குப் பிற நாடுகளுடன் தொடர்பு கொள்ளக் கடல் போக்குவரத்து முக்கியமான ஒன்று. உள்நாட்டு வாணிகத்திற்கும் வெளிநாட்டு வாணிகத்திற்கும் கடல் வாணிகம் ஒரு சிறந்த வாயிலாக இருக்கிறது. தேசியக்கப்பல் வாணிப வளர்ச்சிக்கு உள்ள வாய்ப்பு மிக மேம்பட்ட நிலையில் உள்ளது. இந்தியா கப்பல் எண்ணிக்கையில் 17வது ஸ்தானத்தை வகித்தாலும் டன்னேஜ் கணக்கில் பார்த்தால் 96% மட்டுமே இந்தியக் கப்பல் ஏற்றுக்கொண்டிருக்கும் வாணிகம் ஆகும். இந் நிலை மாறி இந்திய வாணிகக் கப்பல் வாணிகம் முதல் நிலைக்கு வரவேண்டியது அவசியம்.

### *5.1 சுதந்திரம் பெற்றுக் கப்பலோட்டிய தமிழர்கள்*

கப்பலோட்டிய பாரம்பரியத்தில் மேலும் சில பேர்களைக் குறிப்பிடலாம். திருமதி மொரார்ஜி அம்மையார், பம்பாய் கப்பல் வாணிகத்துறையில் ஒரு திறமைமிக்க மாது. தென்னாட்டில் சர். ஏ. ராமஸ்வாமி முதலியார் 17 கப்பல்கள் கொண்ட India Steam Ship Coyஐ 25 ஆண்டுகளாகத் திறம்பட நடத்திவருகிறார். அவ்வாறே அண்மையில் காலம் சென்ற திரு. தாராபூர் லோகநாதன் அவர்களும் திரு. சித்ரா நாராயணசாமி அவர்களும் தென்னிந்தியக்

கப்பல் வாணிக முன்னேற்றத்திற்கு உறுதுணை புரிந்தவர்கள். அன்னாரின் கப்பல்கள் அனைத்தும் கடல்கடந்து செல்கின்றன.[1]

5.2 சிதம்பரனார் காலத்தில் எண்ணற்ற தொல்லைகள் கொடுத்து அவரது கப்பல் தொழிலைத் துலங்கவிடாமல் செய்த அதே BISN என்னும் British India Steam Navigation Company சுதந்திரம் அடைந்த பிறகு முற்றிலும் தன் போக்கை மாற்றி யமைத்துக் கொண்டுள்ளது. 1949ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்களில் தூத்துக்குடிக்கும் இலங்கைக்கும் இடையே அவர்கள் மேற்கொண்டிருந்த ஆதிக்கத்தை Air Steamer and General Service Ltd., என்று 10 இலட்ச ரூபாய் முதலுடன் திருநெல் வேலியைச் சேர்ந்த ஒரு காங்கிரஸ் பிரமுகரால் தொடங்கப்பட்ட கப்பல் கம்பெனிக்கு முற்றிலும் விட்டுக்கொடுத்துள்ளது. புதுக் கம்பெனிக்கு ANDRIA என்னும் தனது கப்பலையும் ரூ. 7 இலட்சத் திற்கு விற்றுவிட்டது. மேலும், அரசாங்கம் ரூ. 7.5 இலட்சங்கள் இந்தியக் கம்பெனிக்குக் கடனாகக் கொடுத்து உதவியுள்ளது. இந்தக் கப்பலேதான் அப்போது கவர்னர் ஜெனரலாக இருந்து திரு. இராஜ கோபாலாச்சாரியார் அவர்களால் பிப்ரவரி 9, 1949-ல் தலை சிறந்த தேசாபிமானியும் கப்பலோட்டிய தமிழனுமான சிதம்பரனாரின் பெயரிடப்பட்டு S. S. சிதம்பரம் என்று அழைக்கப்படுகின்றது. இவ்வாறே, அண்மையில், தாராபூர் திரு. லோகநாத முதலியார் அவர்களும், திரு. நாராயணசாமி அய்யர் அவர்களும் இந்திய கப்பல் வாணிகத்தின் முன்னேற்றத்திற்கு உறுதுணை புரிந்தவர்கள் ஆவார்கள். தமிழ் நாட்டில் தலைமை அலுவலகத்தினைக்கொண்ட தென்னிந்திய ஷிப்பிங் கார்ப்பரேஷன் இன்று 5 கப்பல்களைக் கொண்டுள்ளது.[2] இவையனைத்தும் கடல் கடந்து செல்லுபவை.

5.3 இன்றும் அவருடைய அடிச்சுவட்டினைப் பின்பற்றி நம் நாட்டில் டாக்டர் சர் ஏ. இராமசுவாமி முதலியார், தாராபூர் திரு. லோகநாத முதலியார், திரு. நாராயணசாமி அய்யர் ஆகியோர் கப்பல் தொழில் மேன்மேலும் வளர அரும்பாடுபட்டு வருகின்றனர். டாக்டர் சர். ஏ. இராமசாமி முதலியார் அவர்கள் தலைவராக உள்ள 'இண்டியா ஸ்டீம்ஷிப் கம்பெனி' 17 கப்பல்கள் கொண்டுள்ளது.

1. *Indian Shipping*. Vol. XVII, No. 1, 1965 (Journal of Indian National Steamship owners' Association, Scindia House, Ballard Estate, Bombay).

2. *Eighth Annual Report*, 1971. South India Shipping Corporation Ltd., 175/1, Annasalai, Madras-2.

அனைத்தும் கடல் கடந்து செல்வன. டாக்டர் சர். ஏ. இராமசாமி முதலியார் 1947—முதல் ஏறத்தாழ 25 ஆண்டுகள் இந்தியக் கப்பல் வாணிகர் சங்கத்தின் தலைவராக, இந்திய அரசின் கப்பல் துறை நிபுணராக இருந்தார். இவர் 1936-ல் இந்திய கவுன்சிலின் அங்கத்தினராகவும் விளங்கியவர்.

## *6.0* சிதம்பரனாரின் தொழிலாளர் தொண்டு

ஏழை எளியவருக்கு உறுதுணையாக நிற்பதில் சிதம்பரனாருக்கு இணையானவர் எவருமிலர். தூத்துக்குடியில் நெசவு ஆலை ஒன்றில் அநியாயமாகத் தொழிலாளரின் ஊதியம் குறைக்கப்பட்டது. அதனை எதிர்த்துப் போராடத் தொழிலாளர்களைத் தூண்டியதுட னல்லாமல் ஊதியமின்றி அவதிப்படும் தொழிலாளர் துயர் துடைக்க ஊரில் எல்லோரிடமும் பணம் திரட்டியும், அதற்கெல்லாம் மேலாகத் தன் மனைவி அணிந்திருந்த நகைகளைக் கழற்றிப் பணமாக்கியும் யாவர்க்கும் பகிர்ந்தளித்தது அவரது சீரிய பண்புக்கு மிகச் சிறந்த எடுத்துக்காட்டு.

அந்நாளைய தீவிர தேச பக்தர்களான பாலகங்காதர திலகர் போன்றோரின் ஆப்த நண்பராக விளங்கிய சிதம்பரனாரை ஆங்கிலேய அரசாங்கம் சுதேசி கப்பல் கம்பெனி தொடங்கிய காரணத்திற்காகத் தேசத்துரோகக் குற்றம் சாட்டி 40 வருடகாலச் சிறைத் தண்டனை விதித்தது. இது அப்பீலில் 6 ஆண்டுகளாகக் குறைக்கப்பட்டது.

அவர் 'மதராஸ் விவசாயத் தொழில் சங்கம்', 'தேசாபிமான சங்கம்' முதலிய பல கழகங்களை அமைத்தார். அவர் ஆரம்பித்த கம்பெனி தொழில் முறையில் நசித்து விட்டாலும் அவருடைய முயற்சி விழலுக்கு இறைத்த நீராகவில்லை.

## *7.0* வருங்காலத்திற்கான திட்டம்

வ. உ. சி.யின் தொண்டினை எண்ணிப் போற்றி அவருக்கு வணக்கம் செலுத்தும் இன்று நாம் அவர்தம் லட்சியக் கனவானதும், இன்று நாட்டுக்குத் தேவையானதுமான இந்தியக் கப்பல் வாணிகத்தினை வலுப்படுத்துவதற்கான முயற்சிகளை எண்ணித் திட்டங்கள் தீட்டி, அவற்றைச் செம்மையாகச் செயற்படுத்துதல் வேண்டும். தற்போது இந்தியக் கப்பல்கள் 9முதல் 10சதவீதமே உலக மொத்தக்

கடல் கடந்த வாணிகத்தை ஏற்றுக் கொண்டுள்ளன. இக் குறை பாட்டிற்குக் காரணம் tramp and bulk camer போதுமானதாக இல்லாததே. ஆகையால் tramp கப்பல்கள் மேலும் நாட்டிற்குத் தேவை. நமது நாட்டிற்குக் கப்பல் வாணிகத்தின் முக்கியத்துவம் யாவரும் அறிந்ததே. கப்பல் வாணிகத்தின் மூலமாகத்தான் மூன்று புறமும் கடலால் சூழப்பட்டுள்ள நாம் மற்ற நாட்டினருடன் தொடர்பு கொள்ள முடியும். மற்றும் நெருக்கடி காலத்தில் (emergency) நமக்கு அது பாதுகாப்பும் அளிக்கிறது. கப்பல் வாணிகத்தை விரிவு படுத்துவதின் மூலமாகத்தான் நமது real income-மும் உயரும். இக்காரணங்களினாலேயே கப்பல் வாணிகம் நமது 5 ஆண்டுத் திட்டங்களில் சேர்க்கப்பட்டு, அதை விரிவுபடுத்துவதற்கான முறைகளும் ஆராயப்பட்டு வருகின்றன. முதல் 5 ஆண்டுத் திட்டம் முடிவுறும்போது நமது மொத்தம். G. R. T 1,20,000. இரண்டாவது 5 ஆண்டுத் திட்ட முடிவில் அது 9 இலட்சமாக அதிகரித்து, 3-வது திட்டக்காலத்தில் 15 இலட்சமாக அதிகரித்தது. 4-வது திட்டத்தில் 3 மில்லியன் இலக்காக உள்ளது.

நமது பொருளாதாரத்தில் இவ்வளவு முக்கிய பங்கு வகிக்கும் கப்பல் வாணிகத்தை மேன்மேலும் முன்னேற்றமடையவைப்பது நம் எல்லோருடைய பொறுப்புமாகும். வ. உ. சி. போன்ற தேசபக்தர்கள் விளைத்து இன்று மரமாகி நிற்கும் இத் தொழிலை மேன்மேலும் செழித்து வளர, நம்மால் இயன்றதை நாம் செய்வதே சிதம்பரனாருக்கு நாம் உண்மையில் செய்யக்கூடிய நன்றிக் கடனாகும்.



வ. உ. சிதம்பரம் பிள்ளை, தேசத்திருத்தொண்டர்களுடன் வீற்றிருக்கும் காட்சி. வ. உ. சியின் வலப்பக்கம் அமர்ந்திருப்பவர் பெரியார் ஈ. வே. இராமசாமி நாயக்கர். இடப்பக்கம், முறையே சிதம்பரம் என். தண்டபாணிப் பிள்ளை, தமிழ்த்தென்றல் திரு. வி. கலியாணசுந்தர முதலியார், டாக்டர் பி. வரதராஜுலுநாயுடு ஆகியோர் அமர்ந்திருக்கின்றனர். 1919-ஆம் ஆண்டு ஈரோட்டில் 'இந்திய தேசிய சங்க' (The Indian League) முதல் மகாநாட்டுத் தொண்டர்படைத் தலைவராக இருந்தவர் சிதம்பரம் திரு. தண்டபாணிப் பிள்ளை, வரவேற்புக்குழுத் தலைவராயிருந்த ஈ. வே. இராமசாமி நாயக்கர் இவருக்குத் தமது இல்லத்தில் நடத்திய பாராட்டு விழாவின்பொழுது எடுத்த படம் இது.

உதவி: (1) சிதம்பரம் என். தண்டபாணிப் பிள்ளை, (2) அ. நாகலிங்கம்-ஆராய்ச்சிமாணவர்.



தேச பக்தர் வ. உ. சிதம்பரனுர் கோயம்புத்தூர்ச் சிறையில் இழுத்த செக்கு
(இன்றைய தமிழக அரசின் முதல்வர்-மாண்புமிகு-டாக்டர்-கலைஞர் மு. கருணாநிதி அவர்கள்
முயற்சியால் வ. உ. சி. நூற்றாண்டு விழாவின்போது 'விடுதலை' பெற்றது!)

உதவி: செய்தித்துறை, தமிழக அரசு.

# 3

# சமூகச் சீர்திருத்தப் பணிகட்கு வ. உ. சி.யின் தொண்டு

டாக்டர் சி. அ. பெருமாள்
*அரசியல்—ஆட்சியியல் துறைத்தலைவர்*

இந்திய விடுதலைப் போராட்டத்தை முன்னின்று நடத்திய அகில இந்தியக் காங்கிரஸ் நிறுவனத்தின் வரலாற்றைப் புரட்டிப் பார்ப் போமேயானுல், மூன்று முக்கிய அரசியல் கொள்கைகள் ஒன்ருே டொன்று மோதி, இந்திய சுதந்திர இயக்கத்துக்கு அவ்வப்போது புத்துயிரையும் புது ஊக்கத்தையும் அளித்துள்ளமையை நாம் காணலாம். காங்கிரஸ் இயக்கம் கி. பி. 1885-ல் தொடங்கப் பட்டபோது அதன் குறிக்கோள் இந்திய சுதந்திரமன்று. சில சிறிய அனுகூலங்களுக்காகத்தான் ஆங்கில அரசை வேண்டி நின்றது. இந்தியர்களுக்கு அரசாங்க வேலை வாய்ப்பு, சட்டமன்றங்களில் இந்தியர்களுக்குப் பிரதிநிதித்துவம், அரசியலில் சிறிதளவு பங்கு போன்ற தேவைகளை வலியுறுத்துவதைத் தவிர வேருென்றுமில்லை எனக் கொள்ளலாம்.

காங்கிரஸ் கட்சி தோன்றிச் சுமார் இருபது ஆண்டுகள் வரை அதில் மித வாதிகளும் (Moderates) அவர்களுடைய மிதவாதக் கொள்கைகளுமே அதிகமாக இருந்துவந்ததோடு, வலிமை பெற்றும் வந்தது எனக் கூறினுல் மிகையாகாது. ஆங்கில நாட்டில் கல்வி பயின்று, மேலை நாட்டுப் பண்புகளிலும், மரபுகளிலும் ஊறிப் போன வர்களும், வழக்கறிஞர்களும், நிலப்பிரபுக்களுமே காங்கிரஸ் மகா சபையில் ஆதிக்கம் செலுத்திவந்தனர். இந்தியாவில் ஒரு நல்ல மக்களாட்சியைக் காலக் கிரமத்தில் ஏற்படுத்தவும், மாசற்ற தகுதி வாய்ந்த ஒரு நல்ல நிர்வாக அமைப்பைப் பெறவும், சட்டத்தின் ஆட்சி போன்ற சில சீரிய அரசியல் பண்புகளை அமைக்கவும், எண்ணி, பேரரசுக்கு ஒரு நல்ல எதிர்க் கட்சியாகப் பணியாற்றி வந்தனர். இவற்றிற்குத் தேவையான பயிற்சியையும், பக்கு

வத்தையும், தகுதியையும் தவணை முறையில் ஆங்கில அரசிடமிருந்து பெறுவதற்கு முயன்றனர்.

பிற்காலத்தில் இந்திய மக்களாட்சியை மறுசீராய்ந்து பார்க்கும் போது, அவர்கள் எடுத்துக்கொண்ட முயற்சி வீண் போகவில்லை என்றே கொள்ளலாம். இருந்தபோதிலும் இக் கட்சி மக்களிடையே வேரூன்றி வளரவில்லை. மக்களின் செல்வாக்கையும், மதிப்பையும் பெறவில்லை. மேலும், பூரண சுதந்திரம் என்பது, 1905ஆம் ஆண்டுத் தொடக்கத்திலிருந்தே, நாட்டை வெள்ளையர் ஆட்சியிலிருந்து விடுவிக்கவும், மக்கள் மனத்தில் நாட்டுப் பற்றை வளரச் செய்யவும், 'என்று தணியுமிந்த சுதந்திர தாகம்', 'நல்ல அரசு சுய ஆட்சிக்கு இணையாகாது', 'சுரண்டி வாழ்ந்த ஆங்கில அரசு தாமாக இந்நாட்டை விட்டு வெளியேருது, அதை இந் நாட்டிலிருந்து துரத்த வேண்டும்', 'அவர்களிடம் கேட்டுக் கெஞ்சிக் கொண்டிருப்பது, மயிலே மயிலே இறகு போடு, என்பதைப் போலாகும்' என்ற அடிப்படைத் தத்துவத்தின் கீழ், சாத்துவிக முறையில், அறப்போர் தொடங்கி, நாட்டிற்கு விடுதலை தேடித் தருவது எனத் தீவிரவாதிகள் (Extremists) திரண்டனர். எனவே, தீவிரவாதமும் காங்கிரஸ் கட்சியில் தோன்றலாயிற்று. தீவிரவாதிகளின் வீரம், தீரம், தியாகம், ஆடம்பரமற்ற எளிய வாழ்க்கை, போன்ற நற்குணங்கள், பாமர மக்களை, 'வெள்ளையனே வெளியே போ' என்னும் குறிக்கோளுக்குத் தயார் செய்யத் தொடங்கிற்று. காங்கிரஸ் நிறுவனததை மக்கள் இயக்கமாக மாற்றி, படை பலமும் இராச தந்திரமும் கொண்ட ஆங்கிலப் பேரரசைக் கலங்க வைத்தவர்கள் தீவிரவாதிகளே என்பதை யாரும் மறுக்க முடியாது. மிதவாதிகளுக்கும் தீவிரவாதிகளுக்கு மிடையே ஏற்பட்ட குழப்ப நிலையால், காங்கிரஸ் கட்சி, 1907ஆம் ஆண்டு சூரத் நகரிலே நடந்த மாநாட்டில் பிளவுபட்டது. ஆங்கில அரசு தீவிரவாதிகளை அடக்க முன்வந்தது. அத்து மீறிய தலைவர்களைச் சிறைசெய்யவும் நாடு கடத்தவும் முன்வந்தது. தலைவர்களை இழந்துவிட்ட— ஆனல் தேசியப் பாலை நன்ருகப் பருகிவிட்ட இளங்காளையர் பலர், தீவிரவாதிகளாய் அறப்போரில் நம்பிக்கை இழந்தனர். வெள்ளையர் ஆட்சியின் மீதுள்ள வெறுப்பை வெள்ளையர்பால் செலுத்தத் தொடங்கினர். ஆங்கில அதிகாரிகளைக் கொலை செய்வது எனக் கருதிக் கொண்டு கையெழுத்திட்டுத் திட்டம் வகுத்தனர். கொலை, கொள்ளை, நாசவேலை முதலிய பயங்கரமான செயல்களில் ஈடுபட

முன்வந்தனர். இவரையே நாம் புரட்சியாளர் (Terrorists) எனக் கூறுகின்றோம்.

1905ஆம் ஆண்டிலிருந்தே திலகர் லஜபத்ராய், பிபின் சந்திர பால் அரவிந்த கோஷ் போன்ற அகில இந்தியத் தலைவர்களால் தீவிரவாதம் காங்கிரஸ் மகா சபையில் வற்புறுத்தப்பட்டு வந்தது. தமிழ்நாட்டில் திலகரின் சீடரான கப்பலோட்டிய தமிழன் வ.உ. சிதம்பரனார் சுமார் இருபது ஆண்டுக் காலம் இவ்வியக்கத்தில் தன்னிகரில்லாத தலைவராக இருந்துவந்தார். ஆங்கில ஆட்சிக்கு எதிராக எதையாவது பேசுவதோ அல்லது எழுதுவதோ என்றால் குலை நடுங்கும் அந்தக் காலத்தில், மாவீரர் வ.உ.சி. தன்னலங் கருதாது, நாட்டின் விடுதலையையே குறிக்கோளாகக் கொண்டு எவ்வித இன்னலையும் பொருட்படுத்தாது, அறப்போரில் குதித்தார். 1907ஆம் ஆண்டு சூரத் நகரில் நடந்த காங்கிரஸ் மாநாட்டில் ஏற்பட்ட அமளிக்கும், பிளவுக்கும் செக்கிழுத்த செம்மலின் பங்கு கொஞ்சநஞ்சமல்ல. ஏனோ அவரது பங்கைப் பத்திரிகையாளர்களும், வரலாற்று அறிஞர்களும் இருட்டடிப்புச் செய்துவிட்டனர். உண்மையாக—அரவது பங்கை ஆராய்ச்சி செய்துபார்த்தால்—தீவிர வாதிகளின் தீவிரச் செயலுக்கு வித்திட்டவரும் அவரே என்பது நன்கு புலப்படும். முதன்முதலாகக் காங்கிரஸ் கட்சிக்குள் பிளவை யேற்படுத்தி அதிலிருந்து ஒரு புதிய கட்சியையே தோற்றுவித்த பெருமை, சிதம்பரனாரையே சேரும். சிதம்பரனார் தீவிரவாதியே தவிரப் பயங்கர வாதியல்லர். அவர் வன்முறையாளர்களையும், வன்முறையையும் கண்டித்தும் நிந்தித்தும் வந்திருக்கின்றார். உதாரணமாக, வாஞ்சிநாத ஐயர் கலெக்டர் ஆஷ்துரையை மணியாச்சி இரயில் நிலையத்தில் சுட்டுக் கொன்றபோது வ. உ. சிதம்பரனார் சிறையில் இருந்தார். இச் செய்தி அறிநததும், மிகவும் மனம் நொந்ததோடு, இத்தகைய கொடிய செயலைத் தகாத செயல் எனக் கண்டித்துக் கடிதமொன்றும் எழுதியிருக்கிறார். சேலம் விஜயராகவாச் சாரியாருக்குக் கீழ்க்கண்டவாறு எழுதியுள்ளார்:

"நான் சிறைப்பட்ட பின்னும் என்னைப் பின்பற்றிச் சுதேசிக் கிளர்ச்சியை அறவழியில் நடத்திவரும் அன்பர்களுக்கு எனது வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன். ஆனால், எனது கோட்பாட்டுக்கு மாறாக, கொலைச் செயல்கள் நடை பெறுவதற்கு வருந்துகிறேன். நாம் போராடுவது பிரிட்டிஷ் ஆட்சி முறையை எதிர்த்தேயாகும். ஆங்கில அதிகாரிகளைக்கொலை செய்வதினால் அன்னிய ஆட்சி அழிந்து விடாது. கொடியவர்

களாகுலும் அவர்களது உயிருக்குத் தீங்கு விளைவிக்கக் கூடாது என்பதே எனது கோட்பாடு. இதைப் புரட்சியில் விருப்பமுடையோர்க்கு அறிவியுங்கள்."

இதிலிருந்து அன்னூர் கிளர்ச்சியை விரும்பினுலும், புரட்சியை வெறுத்தார், அறவழியைப் பின்பற்றினுர், வன்முறையைக் கண்டித்தார் என்பது தெள்ளத்தெளிவாக விளங்குகிறது.

மனச்சாட்சியே முக்கியமெனக் கருதிய உத்தமர் சிதம்பரனுர் நெருங்கிய நண்பர்களாயிருந்த போதிலும், பெரிய தலைவர்களாயிருந்த போதிலும் அவர்களது வெறுப்பையும் விரோதத்தையும் தேடிக் கொண்டால் பெரிய இன்னல்கள் தமக்கு வரும் என்பதையும் அறிந்த போதிலும், குற்றம் குற்றமே என இறுதிவரை போராடுங் குணமுடையவர். 1920 ஆம் ஆண்டு கல்கத்தாவில் நடந்த விசேட காங்கிரஸ் மாநாட்டில், காந்திஜியின் ஒத்துழையாமைத் திட்டத்தைக் கடுமையாக எதிர்த்தார். இச் செய்கையால், தமது அரசியல் வாழ்விற்கே முற்றுப்புள்ளிவைக்க நேரிடும் என்பதை அறிந்தும் அரசியலுக்கு முழுக்குப் போட்டாரே தவிரக் கொள்கையை விட்டுக் கொடுக்கவில்லை. ஒத்துழையாமைத் திட்டம் பெரும்பான்மை வாக்கு (Vote)களால் வெற்றி பெறவே, தமது கொள்கையைக் கீழ்க் கண்டவாறு விளக்கி அறிக்கையொன்று விட்டுவிட்டு அரசியலுக்கு முழுக்குப்போட்டார் என்ருல் எனனே அவர்தம் விவேகம்!

"நாம் அடைய விரும்பும் நமது உரிமைகளில் எதையேனும் அரசாங்கத்தார் நமக்குத் தந்தாலும், தர மறுத்தாலும், நாம் அவருக்கு வந்தனம் கூறி, நமது தேச நிர்வாக விசயத்தில் அவரோடு ஒத்துழைத்தல்வேண்டும் என்று நமது கிழவர்கள் (மிதவாதிகள்) கூறுகின்றனர். இஃது தமக்குரியவற்றை பிறர்தரினும், தராவிடினும் அது நமது விதியென்று கருதிப் பிறர்க்குப் பண்பு செய்யும் கிழவர் செயல் போன்றது."

"நாம் அடைய விரும்பும் நமது உரிமைகள் அனைத்தையும் ஒருங்கே அரசாங்கத்தார் நமக்குத் தரும் வரையில் நாம் அவரோடு நமது தேச நிர்வாக விசயத்தில் ஒத்துழைக்க மறுக்கவேண்டுமென்று நமது தற்காலத் தலைவர்கள் (காந்தியும் அவரது சீடர்களும்) கூறுகின்றனர். இந்த ஒத்துழையாமை தின்பண்டம் முழுவதும் தமக்குத் தரும் வரையில் அதன் ஒரு பகுதியை ஏற்காது தாய் தந்தையரைக் கோபித்துக் கொண்டிருக்கும் குழந்தைகள் செயல் போன்றது."

"நாம் அடைய விரும்பும் நமது உரிமைகளில் எதையேனும் அரசாங்கத்தார் நமக்குத் தருவதாயிருந்தால் அதற்காக நாம் அவர்க்கு வந்தனம் கூறி, அவரோடு உடன்பட்டு உழைத்தலும் எதையேனும் அவர் நமக்குத் தர மறுப்பின் அது விடயத்தில் அவரோடு உடன்படாது மாறுபட்டு இருத்தலும் வேண்டு மென்றே நாம் (திலகர் கட்சி) விரும்புகிறோம். இச் செயல் தமக்குரியவற்றைத் தந்தபோது உவந்தும், தராதபோது வெகுண்டும் நிற்கும் காளையர் செயல் போன்றது. சுருங்கக் கூறின் ஒத்துழைத்தலும், ஒத்துழையாமையும் ஏக காலத்தில் நிகழ வேண்டுமென்பதே நமது அவா."

இவ்வறிக்கையில் ஒத்துழையாமைத்திட்டம் நாட்டுக்கு எவ்வாறு ஒவ்வாது என்பதையும், மிதவாத தீவிரவாதக் கோட்பாடுகளின் அடிப்படை வேறுபாட்டினையும் மிகவும் அழகாக யாவரும் எளிதில் புரியுமாறு கூறியிருக்கிறார். மேலும், இதில் சிதம்பரனார், ஒத்துழை யாமை இயக்கத்தைச் சிறு பிள்ளைத்தனம் என எள்ளி நகையாடு கின்றார். அவர் எதிர்பார்த்தவாறே இந்திய அரசியல் காந்திஜியின் கைக்குச் சென்று விட்டது. கொள்கை வேறுபாட்டினால் அரசியலைத் துறந்தாரே தவிர மாற்றுக் கட்சிகளில் சேர்ந்தாரில்லை.

அரசியலில் தீவிரவாதியான சிதம்பரனார் சமுதாயச் சீர்திருத் தங்களிலும், சமுதாயச் சேவைகளிலும் முன்னின்றார். சாதி வெறி தலைதூக்கி ஆடிக்கொண்டிருந்த அந்தக்காலத்தில், தீண்டாமையை ஒழிக்க அரும்பாடுபட்டார். சாதியினாலுண்டான உயர்வு தாழ்வையும் தீண்டாமையையும் அறவே வெறுத்தார். வைதிகர்களும், தீண்டா மையில் நம்பிக்கையும் கொண்ட பலரும் வாழ்ந்து வந்த காலம் அது. ஏன்? இன்று கூடத் தீண்டாமை நோய் அறவே நம் நாட்டிலிருந்து அழிந்துவிடவில்லை.

சிதம்பரனார் வெறும் வாய்ப்பேச்சளவில் இருந்து விடவில்லை. தமது வாழ்க்கையிலும் அதைச் செய்துகாட்டினார். மனிதனுக்கு மனிதன் உயர்வு தாழ்வு கற்பிப்பதை அவர் அடியோடுவெறுத்தார். ஆதித்தமிழர் ஒருவரைத்தமது இன்னுயிர்த்தோழராக்கிக்கொண்டார். சுவாமி சகஜானந்தர் என்பார் அவருடன் பல ஆண்டுகள் அவரது குடும்பத்தில் ஒருவராய் வாழ்ந்து வந்த செய்தியைநாம் அறிகின்ற போது, சிதம்பரனாரின் பெருமை நன்கு விளங்குகிறது. மேலும் சிதம் பரனார் அவரது வைதிகச் சுற்றத்தார்களின் வீட்டு வைபவங்களில் கலந்துகொள்ளச் செல்லும்போது அவரது நண்பர் சகஜானந்தரையும்

தம்முடன் அழைத்துக்கொண்டே போவார். உறவினர்கள் சகஜானந் தரின் சாதியைப் பற்றிய விசாரணைக்கே இடமில்லாமல் பார்த்துக் கொள்ளுவதுமுண்டு. அரசியலிலிருந்து ஒதுங்கியிருந்தாரே தவிர, சமூக சேவையிலிருந்து ஓய்வு பெறவேயில்லை. ஒத்துழையாமை யியக்கத்தில் நம்பிக்கையிழந்து, காங்கிரஸ் கட்சியிலிருந்து விலகி, அரசியலிலிருந்து ஒதுங்கியிருந்தபோதும் கூட 1933ஆம் ஆண்டு, காந்திஜியின் தீண்டாமை ஒழிப்பு இயக்கத்தில் ஒத்துழைப்புக் கொடுத்தார். காந்திஜியின் வேண்டுகோளை ஏற்று, தூத்துக் குடியிலும், தென் மாவட்டங்களிலும் தீண்டாமை ஒழிந்திட அரும் பாடுபட்டார். மேலும், நாட்டின் வறுமையையும் ஏழை மக்களின் பசிப்பிணியையும் அகற்றிட அல்லும்பகலும் பாடுபட்டார். இறக்கும் தருவாயில் கூட ஏழைகளின் இன்னலை நினைத்துக் கண்ணீர் விட்டார். உயிர் பிரிவதற்குச் சில நாள்களுக்கு முன்புகூட அவரது தோழரான திரு. மாசிலாமணிப் பிள்ளையிடம் ஏழைகளின் துயரத் தையே தமது துயராகக் கூறி, விம்மியழுததாகச் சான்றுகள் கிடைத்துள்ளன.

வீரர் சிதம்பரனாரின் அரசியல் பணியையும், சமுதாயத் தொண்டினையும், சரிவர நாளேடுகளும், வரலாற்று நூல்களும் குறிப்பிடவில்லை. சில முக்கியமான செயல்கள் மறைக்கப்பட்டிருக் கின்றன என்றே கருதுகிறேன். ஆகவே, நமது பல்கலைக் கழகம், அன்னாரின் அரும் பணிகளை ஆராய்ந்து மதிப்பிட வேண்டிய முயற்சிகளைச் செய்யும் என நம்புகிறேன்.

4

# அறவியல் சமய (மெய்யுணர்வு) வியல் துறைகளுக்கு வ.உ.சி.யின் தொண்டு

பேராசிரியர் டாக்டர் வ. ஆ. தேவசேனபதி

மெய்யுணர்வுத்துறை.

நம்நாட்டு மக்கள் விடுதலை பெறுவதுடன் பல துறைகளிலும் முன்னேற்றம் அடையவேண்டும் என்னும் குறிக்கோளுடன் தம் வாழ்நாள் முழுவதும் உழைத்த வ. உ. சிதம்பரனர், தாமே சில துறைகளில் வழிகாட்டியாகவும் இருந்தார். சமயம், மெய்யுணர்வியல், அற இயல் ஆகிய துறைகளில் சிதம்பரனருக்கு ஈடுபாடு இருந்ததால் சிவஞான போதத்திற்கும் திருக்குறள் அறத்துப்பாலுக்கும் அவர் உரையெழுதினர். ஜேம்ஸ் ஆலன் (James Allen) என்னும் மேலை நாட்டுப் பெரியாரின் நூல்கள் சிலவற்றை மொழிபெயர்த்தார்; சிறைச்சாலையிலிருந்தபோது அவருடைய அறிவுரைகளைக் கேட்டவர்கள் அவற்றைத் தம் நினைவில் வைத்துக் கொள்வதற்காக எளிய பாக்களாக வடித்துத்தரும்படி கேட்டுக் கொண்டதற் கிணங்கி மெய்யறிவு என்னும் சிறுநூல் ஒன்றும் இயற்றினர்.

சிதம்பரனர் திருக்குறள் அறத்துப்பாலுக்கு எழுதிய உரையில், ‘கடவுள் வாழ்த்து’ ‘வான் சிறப்பு’, ‘நீத்தார் பெருமை,’ என்னும் மூன்று அதிகாரங்களும் திருவள்ளுவரால் இயற்றப்பட்டவை அல்ல என்பதற்குச் சுருக்கமாகச் சில காரணங்கள் கூறுகிறர். மெய்யுணர்வியலும் சமய இயலும் சில வகைகளில் இணைந்தும் சிலவற்றில் வேறுபட்டும் நிற்பவை. மேலை நாட்டில் இன்று பெருவழக்கிலுள்ள மொழிவழிப் பகுப்பியல் (Linguistic analysis) என்னும் துறையைச் சேர்ந்தவர்கள் மெய்யுணர்வியலுக்கு உரிய உரைகளையும் சமய இயலுக்குரிய உரைகளையும் பகுத்து ஆராய்கின்றனர். எனவே, உரைகளுக்குப் பொருள் கொள்வதில் ஒரே முறையைக் கையாள்வதற்கில்லை என்பது கருதுதற்குரியது. மேலும், சமயத்தின்

நோக்கு, செயல்முறையைப் பெரிதும் அடிப்படையாகக் கொண்டதாகவும் மெய்யுணர்வியலின் நோக்கு, கொள்கை ஆராய்ச்சியைப் பெரிதும் அடிப்படையாகக் கொண்டதாகவும் இருப்பதால், ஒரே பொருளைப் பற்றிப் பேசும்போது சமயம் கூறுவது மெய்யுணர்வு மொழிவதற்கு வேறுபட்டதுபோலத் தோன்றலாம். கடவுள் வாழ்த்து இறைவனுடைய பொருள்சேர் புகழ்புரியும் வகையில் அமைந்தது. மெய்யுணர்தல் அறிவாராய்ச்சியை ஊக்கி உணர்வின் எல்லையை விரிவுபடுத்தி வாலறிவன் நற்றாள் தொழ வழிகோல உதவுதற்காக அமைக்கப்பட்டிருக்கலாம். எனவே, சிதம்பரனார் இவ்வதிகாரங்களில் வேற்றுமை கண்டால் இவற்றை இன்றைய மொழிவழிப்பகுப்பியலில் கிடைக்கும் உதவியைக் கொண்டும் ஆராய்ச்சி செய்வது நமது கடமையாகிறது.

இவ்வாறே நீத்தார் பெருமையையும் துறவையும் ஆராய்வது இன்றியமையாததாகிறது. துறவு நிலை கைவரப்பெற்றவர்களின் பெருமையைப் பேசுவது நீத்தார் பெருமை என்னும் அதிகாரமாகவும், துறவு நிலையில் ஈடுபாடு கொண்டு அதை மேற்கொள்ள ஊக்குவது துறவு என்னும் அதிகாரமாகவும் அமைந்திருக்கலாம் என்று கருதி இவ்வதிகாரங்களை மேலும் ஆராயலாம். குறிக்கோளை அடைந்தவர்கள் சித்தர்கள், குறிக்கோளில் ஈடுபாடு கொண்டு அதை அடைய முயல்பவர்கள் சாதகர்கள் என்று கொண்டு, மேலும் ஆராய்ச்சி செய்யலாம் என்று தோன்றுகிறது. செம்பொருளின் இருப்பிலோ துறவின் உயர்விலோ சிதம்பரனாருக்கு ஐயம் இருந்ததாகத் தெரியவில்லை. எனவே, இவரைப்போலவே நம்பிக்கையைக் கைவிடாமல் மேலும் ஆராய்வது இவருடைய உளப்பாங்குக்கு ஏற்றதெனக் கொண்டு தெளிவுகாண முற்படலாம்.

திருக்குறள் வாழ்க்கைக்குத் தேவையான நூல் என்பதை வற்புறுத்தும் வகையில் சிதம்பரனார் வாழ்ந்தது வியத்தற்குரியது— இயன்றவரையில் பின்பற்றத் தகுந்தது.

எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு (குறள்: 110)

என்னும் குறள் அறஇயல், சமய இயல், உள இயல் ஆகிய அனைத்திற்கும் முதன்மையானது. உளஇயல் வல்லுநர் உள அமைதிக்கு வழிகோலுவதில் மனக் கசப்பை நீக்குவதையும் மகிழ்ச்சியான நிலையைக் கடைப்பிடிப்பதையும் வற்புறுத்துகின்றனர்.

சிவஞானபோதம் பன்னிரண்டாம் சூத்திரத்தில் நன்றியுணர்வு வற்புறுத்தப் பெறுவதைப் பார்க்கிறோம். இறைவனை மறந்து இருளில் மயங்கிக் கிடந்த உயிரை மீட்டு இறைவன் அதனை ஒளிநெறியில் செலுத்துகிறான். அவனை மீண்டும் மறத்தல் அடாது என்கிறார் மெய்கண்டார். இதனை விளக்கும் சிவஞான முனிவர் உயிர் இறைவனை முன்னர் மறந்திருந்தது ஆணவத்தின் காரணமாக நிகழ்ந்தது. இறைவன் ஆணவத்தை நீக்கிய பின்னும் அவனை மறத்தல் கழுவாய் இல்லாத குற்றம் என்றுகூறி, 'எந்நன்றி கொன்றார்க்கும்' என்னும் குறளையெடுத்துக் காட்டித் தலைக் கட்டுகிறார்.

ஆங்கிலேயர் ஆட்சியை எதிர்த்துச் சிறைபுகுந்து கொடுந் துயருக்கு ஆளான சிதம்பரனார் உள்ளத்தில் ஆங்கிலேயர் மீது வெறுப்பும் பகைமையும் ஏற்பட்டிருந்தால் அது வியப்பாகாது. ஆனால், திருக்குறளிலும் சிவஞானபோதத்திலும் தோய்ந்த உள்ளத்தில் பகைமைக்கு இடம் இல்லை. அன்பே நிலைகொள்ளும் என்று எடுத்துக்காட்டும் வகையில் சிதம்பரனார் தம் மகன் ஒருவனுக்கு வாலீசன் என்னும் பெயர் கொடுத்தார்.

சமயம், மெய்யுணர்வியல், அறவியல் பற்றிய உண்மைகள் சிதம்பரனாரின் உள்ளத்தோடும் உயிரோடும் ஒன்றிவிட்ட காரணத்தால் அவர் சிறையிலிருந்தபோது, மற்றக் குற்றவாளிகளின் அவல நிலைக்குத் தாழ்ந்துவிடாமல் அவர்களையும் உயர்த்தும் பணியில் ஈடுபட முடிந்தது. சூழ்நிலை வாய்ப்பாக அமையும்போது அற ஒழுக்கத்தைக் கடைப்பிடிப்பதில் சிறப்பு இல்லை. சூழல் நேர்மாறாக இருப்பினும் அதனை அடுத்தூரும் வகையில் நடப்பதே ஒழுக்கத்திற்கும் பண்புக்கும் சான்றாகும். இவ்வகையில் சிதம்பரனார் இயற்றிய மெய்யறிவு என்னும் நூலைச் சற்று விரிவாகப் பார்ப்போம். இந் நூலில் தாம் கற்றுத்தேர்ந்து தெளிந்த சமய மெய்யுணர்வு அறஇயல் உண்மைகளை அவர் வடித்துத் தந்துள்ளார்.

தன்னையறிதல், விதியியல் அறிதல், உடம்பை வளர்த்தல், மனத்தையாளுதல், தன்னிலையில் நிற்றல், மறங்களைதல், அறம் புரிதல், தவஞ்செய்தல், மெய்யுணர்தல், மெய்ந்நிலையடைதல் என்னும் பத்து அதிகாரங்களைக் கொண்டது மெய்யறிவு என்னும் நூல். அறம், பொருள், வீடு என்பவற்றைப் பற்றித் தற்காலத்து மாந்தரிற் பலர் கொண்டுள்ள பொய்யறிவைப் போக்குகின்றமையால் இந் நூல்

'மெய்யறிவு' என்னும் பெயர் கொண்டது என்று இந் நூலுக்குச் சிறப்புப் பாயிரம் தந்த கலியாணசுந்தர யதீந்திரர் கூறுகிருர்.

நன்னிலேக்கண் தன்ஊ நிறுப்பானுந் தன்ஊ
நிலேகலக்கிக் கீழிடு வானும்—நிலேயினும்
மேன்மே லுயர்த்து நிறுப்பானும் தன்ஊத்
தலேயாகச் செய்வானும் தான் (நாலடி. 248)

என்னும் செய்யுளே நூல் முகத்தில் பார்க்கிருேம். முயற்சி, ஆள்விஊயுடைமை ஆகியவற்றை வற்புறுத்துகிறது இச் செய்யுள். எனவே, குடிப்பிறப்பு (Heredity) சூழல் (environment) வாய்ப்பாக இல்லேயெனினும் அவற்றையும் எதிர்த்துச் செய்ய வேண்டிய முயற்சி நமக்குக் கட்டாயமாகிறது. விதியியல் அறிதல் என்னும் ஓர் அதிகாரத்தை வகுத்து விதி என்பது யாது என்பதையும் அவர் விளக்குகிருர்.

விதிவிதியென் ருழ்கின்ருர் வீணுகத் துன்பில்
விதிவிதிக்கத் தம்மையன்றி வேறு—பதியொருவன்
உண்டென்று நம்பி யொருசிலரிங் கன்ருரிற்
கண்டறியேன் பேதையரைக் காண்.

அதனுல் பதி அல்லது இறைவன் இல்லேயென்பது சிதம்பரனுரின் முடிவன்று. செயற்படும் உரிமையைத் தவருகக் கையாண்டு ஒருவன் தன செயலின் தீய விளேவால் சிக்கிக் கொண்டு இறைவஊ நோவதில் பயனில்லே. அவ்வாறே நோதல் நேர்மையுமாகாது. தவறுணர்ந்து மீண்டும் தவறு நேராமல் நடப்பதே அறிவுடைமை. முன்ஊய தீவிஊகளால் துன்பம் நேர்ந்தால், அவற்றின் காரணத்தை உணர்ந்து அதஊ நீக்க வேண்டும்.

இம்மெய்யை நன்குணர்ந்தா ரின்றுவரும் தீயூழின்
வெம்மெய்யைத் துண்டுதுண்டா வெட்டிடுவர்—தம்மெய்
யறச்செயலான் முள்ஊ யரிவாள்கொண் டீர்க்குந்
திறச்செயலார் போலச் சிரித்து.

'இடுக்கண் வருங்கால் நகுக' என்னும் குறள் நிஊவுக்கு வருகிறதன்ருே?

நல்விஊ தீவிஊகள் நம் பண்பாட்டை உருவாக்கி ஊழாக மாறுவதை எளிய எடுத்துக்காட்டுகளால் இவர் விளக்குகிருர்.

வேலவிதை மாங்கனியை மேவச்செய் யாததுபோல்
பாவவினை இன்பத்தைப் பார்க்கவிடாது—
ஆ (பசு) இங்கு எருக்கிலையின் பாலைத் தராததுபோல
நல்வினையும் துன்பத்தைத் தராது.

மறவினைகள் வித்திட்டால் துன்பம். அறவினையின் வித்திட்டால் இன்பம். இப் பொருளில் நம் பண்புகளின் அடிப்படையில் அமையும் ஒழுக்கமே ஊழாகிறது (Characteris dyfing).

ஊழைப்பற்றி இவர் முடிவாகக் கூறுவது ஊழின் தன்மையை உணர்ந்து, 'இன்றுமுதல் நன்றுதரும் நல்வினையை நாடு'— என்பதாகும்.

ஆயின், கடவுளுக்கு இடம் இல்லையா என்னும் கேள்வி எழுகிறது. அதற்கு விடை,

ஆயின் கடவு ளிருப்பதிங் கென்னெனிற்
தாய்போல் வினையைத் தடிப்பித்துச்—சேயின்
பயனை யதற்கே பயக்கும் பிதாபோற்
பயனைப் பயக்கு முயிர்க்கு.

இனி, நாம் யார்? என்பது, நாம் விடைகாண வேண்டிய கேள்வியாகும்.

தன்னை யறிதல் தலைப்படுத்துங் கல்வியென
முன்னையவர் நன்கு மொழிந்திருந்தும்—என்னைகொல்
தன்னை யறியாது சார்ந்துபல கண்டறியப்
பின்னையவ ருன்னல் பிடித்து.

மேலை நாடுளிலும் நம் நாட்டிலும் ஏறத்தாழ நாலாயிரம் ஆண்டுகளாக இவ்வாராய்ச்சி வற்புறுத்தப் பெற்றிருக்கின்றது. 'உன்னை அறிந்துகொள்' (Know Thyself) என்பது பண்டைய கிரேக்க தத்துவத்தில் முதன்மையான இடம்பெற்றுள்ளது. 'நான் யார்? என் உள்ளம் ஆர்? ஞானங்கள் ஆர்?' என்பது மணிவாசகர் வாக்கு. 'நான் யார்?' என்னும் கேள்விக்குவிடை காண்பதால்பெறக் கூடிய விளக்கத்தை வாழ்ந்து காட்டியவர் அண்மையில் வாழ்ந்த இரமணர்.

'மீன்களைப் போல நீரில் மிதக்கலாம். பறவைகளைப் போலக் காற்றில் பறக்கலாம். ஆனால், தரையில் மக்கள் மக்களாக நடக்க மட்டும் தெரிந்துகொள்ளவில்லை' என்னும் குறை நீங்குவதற்குத் தன்னையறியும் ஆராய்ச்சி தேவையாகிறது.

தன்னியல்பைக் காணுந் தகுதியிலா ரிவ்வுலகின்
பொன்னியல்பைக் காணப் புகுவதென்றோ—உன்னியல்பைக்
கூறுகின்றே னென்மெய்க் குருவினடி போற்றியறத்
தேறுகின்றாய் கேட்பா யினிது.

உன்னுமிடத் துன்பா லுடம்புமன மன்னான்மா
என்னுமொரு மூன்றே யிருப்பனகாண்—மன்னும்
பிறவெல்லாம் மூன்றுள் பேணு மவற்றின்
உறவெல்லாஞ் சொல்வே னுருங்கு.

என்று உடல், உள்ளம், உயிர் என்னும் மூன்றின் சேர்க்கையாக நாம் உள்ளோம் என்று விளக்குகிறார். இவற்றுள் உடலை மட்டுமோ உடலுடன் உள்ளத்தைச் சேர்த்து உயிரை விலக்கியோ முடிவு காண்போரும் உண்டு. உடல்மட்டுமே உள்பொருள். உள்ளம், உயிர் என்பவை பொறியில் அலகை (Ghost in the Machine) என்னும் கொள்கையும் மறைவுக்குப் பின் மாந்தர் நிலையை ஆராயும் நிலையங்களும் இருவகையுமே மேலை நாடுகளில் காணப்பெறுகின்றன.

உடலுடன் உள்ளமும் உயிரும் ஏற்கப் பெறுகின்றன என்பதால் உடலைப் புறக்கணித்தல் தவறு. உடலின் சிறப்பை விளக்கி அதனைப் பாதுகாக்கும் முறையையும் சிதம்பரனார் தந்திருக்கிறார்.

மன்னுமிந்தப் பூவுலகின் மாண்புற்ற பல்பொருளு
முன்னுடம்பிற் கொப்பிலையா லாக்கியதைப்—பன்னும்
பிணியெஃதுஞ் சாராது பேணிவளர்த் தென்றும்
பணியுமா றுள்வாய் பரிந்து.

'விலை மதித்தற்கரிய கருவியாக உடம்பை ஓம்புக; ஆனால், அதன் அடிமையாகும் நிலைமையைத் தவிர்க்க' (Develop your body as a precious instrument and do not allow it to become your master) சிதம்பரனார் உடலை ஓம்பும் முறையில் பகற்பொழுதுக்கு அரிசிச் சோற்றையும் இரவுக்குக் கோதுமை உணவையும் பரிந்துரைக்கிறார் என்பது குறிப்பிடத்தக்கது.

உள உடல் (Psycho-Somatic) என்று இந் நாளில் மருத்துவத்துறையில் உடலையும் உள்ளத்தையும் இணைத்து ஆராய்கின்றனர்; உள்ளத்தின்நிலை உடலையும் தாக்கும் என்பதை ஆராய்ந்து கண்டுபிடித்து உள்ளத்தைச் செம்மையாக வைத்திருககவழி வகைகளை வகுத்திருக்கின்றனர். இதனை உளநலம் (Mental Hygiene) என்பர்.

உள்ளத்தின் தன்மையையும் ஆற்றலையும் சிதம்பரனார் விளக்கியுள்ளார்.

ஆக்க லளித்த லழித்த லிவைமூன்று
முக்கமொடு செய்யு முரங்கொண்டு—காக்கும்
அறம்புரிய முற்படா தைம்பொறியிற் சென்று
மறம்புரியும் சத்தி மனம்

என்னும் செய்யுளில் மனத்திற்குள்ள பேராற்றலைக் குறிப்பிடுகிறார். ஆக்கவும் காக்கவும் ஆற்றல் மனத்திற்கு இருக்கும்போது அழிக்கவே இவ்வாற்றல் பயன்படுத்தப்படுவதன் தீமையையும் புலப்படுத்துகிறார்.

தீநெறியை விட்டுத் திருப்பி மனமதனை
ஆநெறியிற் சேர்த்திங் கறஞ்செய்து—மோனத்
திடனுடைத்த வம்மனத்தைச் செற்றடக்கி யஃதன்
மடனுடைக்கும் வாலறிவான் மா.

மனந்தா னுனக்கு வசப்பட்ட டங்கும்
தினந்தா னுனக்குநலன் சேர்நாள்

என்று சிதம்பரனார் நல்லநாள் பிறக்கும் வழியையும் குறிப்பிடுகிறார்.

'மறங்களைதல்,' 'அறம் புரிதல்' என்னும் அதிகாரங்கள் விலக்க வேண்டுவன, செய்ய வேண்டுவன எவையெவை என்று விளக்குகின்றன.

நினைவும் சொல்லும் செயலும் நன்முறையில் இணைந்து இயங்குவதே சிறந்த ஆளுமையாகும் (Integrated Personality). சிதம்பரனார் இதனைப் பின்வருமாறு நினைவுபடுத்துகிறார்:

வாக்குமனம் காயமொத்து வாழ்ந்திடுவா யெஞ்ஞான்றுந்
தீக்குணமில் லாதனவே செப்பிடுவாய்—போக்குதரு
மெஃதற்கு முள்ளத்தை யேகவிடாய் சால்புதரு
மெஃதற்கு முள்ளத்தை யீ.

தவம் செய்ய வேண்டுமென்கிருர் சிதம்பரனுர். தவம் யாதெனில்,

இவ்வுலகில் வாழ்கின்ற எவ்வுயிர்க்கு மெஞ்ஞான்று
மெவ்விதவின் ருங்கு மியற்ருமை—செவ்வி
தினியமுகத் தோடின்ன வேற்றிடல் மெய்யுன்னித்
தனியிருத்தல் மூன்றுந் தவம்.

இனி வீடு என்பது யாது? மெய்ந்நிலேயை அடைதல் எங்ஙனம்? இவர் தரும் விடை வருமாறு:

நன்றறியு மாந்தரெலா நல்விணையைச் செய்துளத்தை
வென்றுநடு நின்றருளான் மெய்யுரை—என்றுலக
மேம்படுமோ வன்றே நீ மெய்ந்நிலேயை யெய்திநனி
மேம்படுவா யஃதேமெய் வீடு.

உலகம் மேம்படுநாளே நாம் வீடடையும் நாள் என்று பல்லுயிரணேத்தையும் உயர்த்தப் பாடுபடுபவரே சமயம், மெய்யுணர்வு, அற இயலாயவற்றின் விழுப்பொருளேத் தேர்ந்து தெளிந்தவர்கள் என்று கூறியதோடு அமையாது, அங்ஙனம் வாழ்ந்து காட்டிய வ. உ. சி.-க்கு நம் அஞ்சலி.

5

# தமிழ் இலக்கிய இலக்கணத் துறைகளுக்கு வ. உ. சி.யின் தொண்டு

டாக்டர் சி. பாலசுப்பிரமணியன்

*தமிழ்த் துணைப்பேராசிரியர்*

இந்த ஆண்டு, இந்திய விடுதலையின் வெள்ளி விழா ஆண்டாகும். 'தாழ்வுற்று வறுமை மிஞ்சி விடுதலை தவறிக் கெட்டுப் பாழ்பட்டு நின்றதாமோர் பாரத தேயம்' அண்ணல் காந்தி அவர்களால் வாழ்வு நிலைபெற்றது. அடிமைத்தளையில் விலங் கொடித்து அன்னைத் திருநாட்டை ஆங்கிலேய ஆட்சியினின்று மீட்ட—தியாகத் தீயில் புடம்போட்ட தங்கங்களாக வாழ்ந்த—பெருமககள் மிகப்பலர்; அவர்களுள் செந்தமிழ்நாட்டுப் பெருமக்கள் பலர் ஆவர். அவர்களிலும் முன்னணியில் வைத்துக் குறிக்கத் தக்கவர் 'கப்பலோட்டிய தமிழர்' என்று பெருமையோடு குறிப்பிடப் பெறும் தேசபக்தர் வ. உ. சிதம்பரம் பிள்ளை அவர்கள் ஆவர்.

சிதம்பரம் பிள்ளை அரசியல் துறைக்குத் தம் வாழ்வை நேரடி யாகத் தீவிரமாகப் பயன்படுத்திய ஆண்டுகள் ஏறத்தாழ இரண்டே ஆண்டுகள் எனலாம். 1906ஆம் ஆண்டு 'சுதேசிக் கப்பல் கம்பெனி' ஒன்றைத் தொடங்கினர் வ. உ. சி. 1907ஆம் ஆண்டில் சூரத் நகரில் கூடிய காங்கிரஸில் இவர் கலந்து கொண்டார். லோகமானிய திலகர் வ. உ. சி யின் அரசியல் குரு ஆவர். இவர் ஒரு தீவிரவாதி. எனவே, 1908ஆம் ஆண்டில் திருநெல்வேலியில் 'தேசாபிமான சங்கம்' வ. உ. சி. யின் முயற்சியால் நிறுவப்பெற்றது. சுப்பிரமணிய சிவா என்னும் பிறிதொரு தேசபக்தரோடு சேர்ந்து கொண்டு தம் சீரிய வீரப்பேச்சால் நாட்டுப்பற்றினை மக்கள் மனத்தில் கிளர்ந்தெழச் செய்ய, வ. உ. சி. 1908 ஆம் ஆண்டு மார்ச்சுத்திங்கள் 12ஆம் நாள் திருநெல்வேலி கலெக்டர் விஞ்ச் துரையால் சிறைப் படுத்தப்பட்டார். அந்த ஆண்டு ஜுலைத் திங்கள் 7ஆம் நாள் நீதிபதி

பின்ஹே வ. உ. சி. யின் பேரில் அரச நிந்தனைக் குற்றத்திற்காக இருபது ஆண்டு ஆயுள் தண்டனையும், சுப்பிரமணிய சிவாவிற்கு உடந்தையாக இருந்ததற்காக இருபது ஆண்டு ஆயுள் தண்டனையும் விதித்து, இரண்டு தண்டனைகளையும் ஒன்றன்பின் ஒன்றாக நாற்பது ஆண்டுகள் அனுபவிக்கவேண்டுமெனக் கூறினார். சென்னை உயர்நீதி மன்றத்தில் இத் தண்டனை ஆறாண்டுக் காலமாகக் குறைக்கப்பட்டது. பிரிவி கவுன்சிலுக்கு அவர் நண்பர்கள் விண்ணப்பித்தபோது அந்தமான் சிறைவாசத் தண்டனை ஆறு ஆண்டுக் கடுங்காவல் தண்டனையாகக் குறைக்கப்பட்டது.

பின்ஹே அளித்த தீர்ப்பில், 'பிள்ளை பெரிய ராஜத் துரோகி; அவரது எலும்புக்கூடு கூட ராஜ விசுவாசத்திற்கு விரோதமானது' என்ற குறிப்புக் காணப்படுகின்றது. மேலும் அவர், "பிள்ளையின் பேச்சையும் பாரதியாரின் பாட்டையும் கேட்டால், செத்த பிணம் உயிர்த்தெழும்; அடிமைப்பட்ட நாடு ஐந்தே நிமிடங்களில் விடுதலை பெறும்; புரட்சி ஓங்கியெழும்" என்றும் குறிப்பிட்டுள்ளார்.

வெள்ளையர் என்றால் விதிர்விதிர்த்துப் பயந்து நடுங்கிய காலத்தில் வ. உ சி. நாட்டுப் பற்றில் தலைசிறந்த தலைமகனாய்த் தம் வாழ்வையே பணயம் வைத்துச் செக்கிழுத்துச் சிந்தை நொந்து வாடிய ஆண்டுகள்—கோயமுத்தூர்ச் சிறையிலும் கண்ணனூர்ச் சிறையிலுமாகச் சேர்ந்து துன்பப்பட்ட ஆண்டுகள்—நான்கரை ஆண்டுகள் தாம் எனினுங்கூட, அவர் 'கப்பலோட்டிய தமிழர்' என்றும், 'செக்கிழுத்த செம்மல்' என்றும் தமிழ் மக்களால் போற்றப்படுகின்றார். சிறையிலே தொடங்கிய அவர் தாய்மொழிப் பணி அவர் இறக்குந் தருவாயிலும்—அதாவது 1936 ஆம் ஆண்டு வரை—ஏறத்தாழ இருபத்தெட்டு ஆண்டுகள் தொடர்ந்து நடைபெற்றது.

வ. உ. சி.யின் அரசியல் தொண்டுகள் நாட்டு மக்களால் நினைவுகூரப்படுகின்ற அளவிற்கு அவர்தம் செந்தமிழ்ப் பணிகள் மக்களால் அறியப்படமுடியாமல் உள்ளது. காரணம் அவர் தம் செந்தமிழ்ப் பணியினையும் மீறி அவர்தம் நாட்டுப் பணி ஒளிமிகுந்தாய் உளது எனலாம். மேலும் பாரதியார்,

"மேலோர்கள் வெஞ்சிறையில் வீழ்ந்து கிடப்பதுவும்
நூலோர்கள் செக்கடியில் நோவதுவுங்—காண்கிலையோ"

என்றும் பாடியுள்ளமை கொண்டு, வ. உ. சி.யைப் பற்றி எண்ணும் பொழுது பாரதியாருக்கு முதலில் நினைவிற்கு வருவது அவர்தம் அரசியல் தொண்டே எனலாம். இதனையே அவர் பிறிதோர் இடத்தில்,

‘வேளாளன் சிறைபுகுந்தான் தமிழகத்தார்
மன்னனென மீண்டான்’ என்றே
கேளாத கதைவிரைவிற் கேட்பாய்நீ
வருந்தலைஎன் கேண்மைக் கோவே!
தாளாண்மை சிறிதுகொலோ யாம்புரிவேம்
நீஇறைக்குத் தவங்கள் ஆற்றி,
வாளாண்மை நின்துணைவர் பெறுகெனவே
வாழ்த்துதிநீ வாழ்தி! வாழ்தி’

என்றும் பாடியுள்ளார்.

ஆயினுங்கூட அவராற்றிய செந்தமிழ்ப் பணிகள் நம் சிந்தை குடிகொள்ளத் தக்க சீரிய பணிகளேயாம் என்பது பின்வரும் சான்றுகளால் விளங்கும்.

வ. உ. சி. பிறந்த திருநெல்வேலிச் சீமை, இயல்பாகவே நாட்டுப் பற்றிற்கும் மொழிப்பற்றிற்கும் பிறப்பிடமாக என்றென்றும் விளங்கி வருவதோரிடமாகும். எனவே, தமிழ் மொழியினை விருப்போடும் ஆழமாகவும் இளமைதொட்டே பயின்ற செம்மல் சிதம்பரனார், அரசியல் ஆரவார வாழ்க்கையில் அவர் பெற்ற சிறைவாசத்தின்போது செந்தமிழ்ப் பணியில் தலைப்படலானார்.

அவர்தம் செந்தமிழ்ப் பணிகளை நான்கு வகைப்படுத்திக் காணலாம். 1. மொழிபெயர்ப்புப் பணி; 2. படைப்பிலக்கியப் பணி; 3. உரையாசிரியப் பணி; 4 பதிப்பாசிரியப் பணி.

முதலாவது மொழிபெயர்ப்புப் பணியினைக் காண்போம்:

### *1. மொழிபெயர்ப்புப் பணி*

ஜேம்ஸ் ஆலன் என்னும் மேனாட்டுப் பெரியாரின் கருத்துகள் சிதம்பரனாரின் நெஞ்சைப் பிணித்தன. ‘அகத்திலிருந்து புறம்’ (Out from the heart) என்னும் நூலைத் தமிழில் மொழி பெயர்த்துள்ளார். கோயமுத்தூர்ச் சிறைவாசத்தின்போது இந் நூல் மொழி

பெயர்க்கப்பெற்று, அவர் விடுதலை அடைந்த இரண்டு ஆண்டுகளில் அதாவது 1—4—'14 அன்று 'அகமே புறம்' என்ற தலைப்பில் வெளிவந்துள்ளது. நூலின் முன்னுரையில் வ. உ. சி. குறிப்பிடுவன வருமாறு :

"இந் நூலைத் தமிழறிந்த ஒவ்வொரு ஆடவரும் பெண்டிரும், சிறுவரும் சிறுமியரும் கற்க வேண்டுமென்பதும், இந் நூல் நமது நாட்டில் நிலவும் பல மொழிகளிலும் மொழிபெயர்க்கப்பட வேண்டுமென்பதும், இந் நூல் எஞ்ஞான்றும் நின்று நமது நாட்டில் நிலவ வேண்டுமென்பதும் எனது விருப்பம்" என்றும் குறிப்பிட்டுள்ளார்.

இந்நூலிற்கு சுவாமி சகஜானந்தன் என்பவர் அணிந்துரை வழங்கியுள்ளார். நூலின் முகப்பில் வ. உ. சி. குறித்துள்ள செய்யுளொன்று நம் சிந்தனையைக் கிளறுவதாயுளது.

"அறத்தைக் காணு அறிவே மரமாம்;
அறத்தைப் பிழைத்த அறிவே மிருகம்;
அறத்தைப் புரியும் அறிவே மனிதன்;
அறத்தைக் காக்கும் அறிவே கடவுள்."

அடுத்து, மனத்தின் தன்மையும் வன்மையும் பற்றி அவர் மொழிபெயர்ப்பில் குறிப்பிட்டிருப்பதாவது :

"மனம் தளர்ச்சியின்றி வாழ்க்கை நிலைமையாகிய வஸ்திரத்தை நெய்துகொண்டிருக்கிறது; நினைப்பு நூல்; நல்ல செயல்களும் தீய செயல்களும் பாவும் ஊடும்; ஒழுக்கம் வாழ்வாகிய தறியில் நெய்யப்படும் வஸ்திரம். மனம்தான் நெய்த வஸ்திரத்தால் தன்னை உடுத்துக்கொள்கிறது."

76 பக்கமே கொண்ட இந் நூலில் ஆலன் கருத்தை அரண் செய்யத் திருக்குறட்பாக்களை மேற்கோள் காட்டியுள்ளார். எட்டணு விலையில் இந் நூலின் இரண்டாம் பதிப்பு 1916ஆம் ஆண்டு சென்னை புரோகிரஸிவ் பிரஸ்ஸில் அச்சியற்றப்பட்டு வெளி வந்துள்ளது. இலக்கிய நூல்கள் ஆயிரம் படிகள் அச்சிட்டால் விற்பனையாக நானகைந்து ஆண்டுகள் பிடிக்கும் என்று பதிப்பாளர்கள் பயப்படும் நிலைமை இந் நாளில் இன்றும் நிலவ, வ. உ. சி. அவர்கள் இரண்டாம் பதிப்பின் பாயிரத்தில்—முன்னுரையில்— குறிப்பிட்டுள்ளன வருமாறு :

> "1914–ஆம் வருஷத்தில் வெளிவந்த இந் நூலின் முதற் பதிப்பில் ஆயிரம் பிரதிகள் அச்சிடப்பெற்றன. இந் நூலைத் தமிழ் மக்கள் பலரும் விரும்பியதால் அவ்வாயிரம் பிரதிகளும் விரைவில் செலவாய்விட்டன. அதனுல் இந் நூலை இரண்டாம் முறை அச்சிட்டு முடித்தேன்."

மேலும் அவர்,

> "இப் பதிப்பின் தமிழ் நடையைச் சென்னைப் பச்சையப்பன் கல்லூரி சுதேசபாஷா அத்தியக்ஷகர் ஸ்ரீமான் தி. செல்வக் கேசவராய முதலியார் (எம். ஏ.) அவர்கள் அழகுபடுத்தித் தந்தார்கள்"

என்றும் குறிப்பிட்டுள்ளது கொண்டு, திருமணம் செல்வக் கேசவராய முதலியார் அவர்களிடம் வ. உ. சி. கொண்ட மதிப்பும் நூல்களைத் திருத்தமுறப் பதிப்பிக்கவேண்டும் என்று அவர் கொண்ட ஆர்வமும் புலனுகக் காணலாம்.

அடுத்து இவர், ஜேம்ஸ் ஆலனின் மற்ற நூல்களைச் 'சாந்திக்கு மார்க்கம்,' 'மனம்போல வாழ்வு,' 'வலிமைக்கு மார்க்கம்' என்ற தலைப்புகளில் வெளியிட்டுள்ளார்.

பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்களைத் தமிழ் மொழியில் தகவுடன் தர வ.உ.சி. கொண்டிருந்த வற்றுத ஆர்வத்தினை இந் நூல்கள்வழிக் காணலாம்.

## (2) படைப்பிலக்கியப் பணி

அறத்தின் வழிப் பிறழாத நெஞ்சினர் வ. உ. சி. திருக்குறளில் நெஞ்சம் தோய்ந்தவர்; குறள் வழியே தம் வாழ்வை நடத்தி நின்றவர்; அறத்தான் வருவதே இன்பம் என்று நம்பியவர். எனவே, அறத்தின் ஆற்றலை அவனிக்கு உணர்த்த விரும்பி, 'மெய்யுணர்வு' என்னும் நூலினைக் கண்ணனூர்ச் சிறைவாசத்தின்போது எழுதினுர். அறத்தின்பால் நெஞ்சம் நெகிழும் ஓர் ஆண்மகனை ஓர் ஆசிரியன் உருவாக்கும் வகையில் இந் நூல் அமைந்துள்ளது. நூறு வெண்பாக்கள் கொண்ட இந் நூலில் வ. உ. சி.யின் கவிதை நலமும் கருத்து வளமும் பின்னிப் பிணைந்திருக்கக் காணலாம். வைகறைப் போதில் ஒருவன் செய்யத்தக்க பணிகளாக இந் நூலில் வ. உ. சி. குறிப்பிடுவன வருமாறு:

"வைகறையிற் கண்விழித்து மாசொழித்து மெய்யறங்கள்
கைவருதற் கீசனருள் கண்ணிமைப்பின் மையல்
அறுத்தற்கா நூனன்காய்ந்து யானைஉர மெய்யிற்
செறுத்தற்கா நற்சிலம்பம் செய்."

வைகறையிற் துயிலெழுந்து, காலைக் கடன்களை முடித்து, ஈசனருள் பேணி, நன்னூல்களை ஆராய்ந்து கற்று, உடல் வலிமை பெறச் சிலம்பம் பயிலவேண்டும் என்று குறிப்பிடும் இவ் அரிய நூலிற்கு அட்டாவதானம் கலியாண சுந்தர யதீந்திரர் என்னும் பெரியார் சிறப்புப் பாயிரமாம் அணிந்துரையினை வழங்கியுள்ளார்.

இவர் இயற்றியுள்ள 'சுய சரிதை' நூல் இவர் நுண்மாண் நுழைபுலத்தினை விளக்கும். மதுரைத் தமிழ்ச் சங்கத் தேர்வில் தேர்ச்சிபெற்ற வ. உ. சி. தம் முதல் மனைவி வள்ளியம்மை குறித்து எழுதுவன காண்க:

"என்னுடைய நேயர்களும் ஏழைபர தேசிகளும்
என்னுடைய வீடுவந்தால் ஏந்திழைதான்—தன்னுடைய
பெற்றோர்வந் தார்களெனப் பேணி உபசரிப்பாள்
கற்றோரும் உள்ளுவக்கக் கண்டு."

சிறையிலிருந்து கொண்டு தம் அன்னை, ஆருயிர்த் துணைவி, நணபர்கள் முதலியோருக்கு இவர் எழுதிய கவிதை மடல்கள் நெஞ்சையுருக்கும் நீர்மையன; செந்தமிழ் நலம் தோய்ந்த சீர்மையன.

'மெய்யறம்' என்னும் பெரிய நூல் மாணவவியல், இல்வாழ் வியல், அரசியல், அந்தணவியல், மெல்லியல் என்னும் ஐந்தியலும் நூற்றிருபத்தைந்து அதிகாரமுமாக முடிந்த நூலாகும். இந் நூலினைத் திருக்குறளின் வழிநூல் எனலாம். எண்வகை வனப்பில் 'தோல்' எனும் வனப்பு கொண்டு, முதுமொழிக் காஞ்சி போன்று திட்ப நுட்பஞ் செறிந்திலங்குவதாகும்.

இந் நூலினைப் பற்றித் திரு. தி. செல்வக்கேசவராய முதலியார்,

"தமிழ்ப் புலவரேயன்றி இங்கிலீஷ் படித்த புலவரிற் பலரும் இந்நூலின் திறத்தை மெச்சுவர் என்பது துணிபு. ஒரு முறை கண்ணுறுவோர்க்கு இந் நூலின் அருமை தானே

புலப்படுமாதலால், அதனை இங்கு விரிப்பது மிகையாம். இந் நூல் நின்று நிலவுக என்பது என் வேண்டுகோள் ”

என்று குறிப்பிட்டுள்ளார்.

‘பாடற்றிரட்டு’ என்னும் நூல் இரு பாகங்கள்கொண்டது; சிறை வாசத்திற்கு முன் பாடிய பாக்கள் முதற்பாகமாகவும், கோயமுத்தூர் கண்ணனூர்ச் சிறைவாச காலத்தில் பாடிய பல தனிப்பாக்கள் இரண்டாம் பாகமாகவும் சேர்க்கப்பட்டுள்ளன. பாடல்கள் எல்லாம் நவின்றோர்க்கினிய நன்மொழிகளால் விழுமிய பொருள் பயக்குமாறு இனிய ஓசை கொள்ள யாக்கப்பட்டுள்ளன. நீதி போதனைச் செய்யுள்கள் பண்டைக்கால நீதி நூற்களோடொப்பத் திட்ப நுட்பங் கொண்டுள்ளன.

தம் மனைவியார் வள்ளியம்மை குறித்து இவர் குறிப்பிடும் பகுதி வருமாறு :

“ மகராசி என்னும் வள்ளி யம்மையை
நன்மனை அறங்களை நன்கு வளர்த்திட
முன்மனை யாக மொய்ம்பொடு கொண்டேன்
.........................................................
எனதொரு வடிவும் எனக்குறு தொண்டுமே
கனவிலும் நனவிலும் கண்டவள் நின்றவள்
என்னைப் பெற்றோர், என்னொடு பிறந்தோர்
என்னை நட்டோர் யாவரும் தன்னுடை
உயிரெனக் கருதி ஊழியம் புரிந்த
செயிரிலா மனத்தள்; தெய்வமே அனையள்.”

இப் பாடல் வழி வ. உ. சி. யின் தெள்ளுதமிழ் அகவல் நடையின் அழகினையும் மாண்பினையும் உணரலாம்.

### (3) உரையாசிரியப் பணி

நாளும் தமிழ்ப் பணியில் கருத்தூன்றிய சிதம்பரனார் தம் வாழ்வின் இறுதிக்காலத்தில் சிவஞான போதத்திலும், கைவல்ய நவநீதத்திலும் பெரிதும் ஈடுபட்டார். சிவஞான போதத்திற்கு ஓர் உரை கண்டு வெளியிட்டார். சித்தாந்தப் புலமையும் வேதாந்த வித்தகமும் விளங்க அவர் கண்ட உரை, நயம் பயப்பதாகும். உரைப்பாயிரத்தின் இறுதியில்,

"இறைவனையும் உயிரையும் பற்றிப் பேசும் இவ் வருமையான நூலைத் தமிழ் மக்களெல்லாம் படித்தல்வேண்டும். படிக்க முன்வர வேண்டும் என்ற ஒரே நோக்கத்துடன் நான் இவ்வுரையை இயற்றியுள்ளேன். எனது நோக்கம் இனிது நிறைவேற எல்லாம் வல்ல இறைவன் துணை"

என்று குறிப்பிட்டுள்ளார். மேலும் இவர் 'விவேகபாநு' எனும் தமிழ் இதழின் ஆசிரியராக இருந்து பணியாற்றிப் பல்வேறு பயனுறு கட்டுரைகளை அதில் எழுதியுள்ளார் என்பது ஈண்டு நெஞ்சில் நிறுத்தத் தக்கதாகும்.

## (4) பதிப்புப் பணி

பழந்தமிழ் நூற் பதிப்புப் பணியில் தமிழில் முதலில் ஈடுபட்டவர் இச்சென்னைப் பல்கலைக்கழகத்தில் முதன்முதலில் இளங்கலை (பி. ஏ.) பட்டம் பெற்ற யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த சி. வை தாமோதரம் பிள்ளை அவர்கள் ஆவர். சங்க நூல் முதற் பதிப்பாசிரியர் என்று போற்றப் பெறுபவர் அவராவர். வ. உ. சி. தமிழ் இலக்கிய இலக்கணத்தை அடிநாள் தொட்டே நன்கு கற்றவர்; சங்க நூற்றேர்ச்சி மிக்கவர்; தொல்காப்பியத்தை நல்லாசிரியரிடம் தம் வாழ்நாள் எல்லாம் பாடங் கேட்டவர். பேராசிரியர் திருமணம் செல்வக்கேசவராய முதலியார், ச. சோமசுந்தர பாரதியார், எஸ். வையாபுரிப் பிள்ளை, சி. சுப்பிரமணிய பாரதியார், திரு. வி. க., மதுரைத் தமிழ்ச் சங்கப் புலவர் முதலியவர் களோடு நெருங்கிய தொடர்பு கொண்டவர். மதுரைத் தமிழ்ச் சங்கப் புலவர்.

வ. உ. சி. அவர்களுக்குத் தொல்காப்பியம், திருக்குறள், சிவஞான போதம், ஆலன் நூல்கள் முதலியவற்றில் நிரம்ப ஈடுபாடு உண்டு. தொல்காப்பியத்தை 1910ஆம் ஆண்டு சிறையில் படிக்கத் தொடங்கினர். வ. உ. சி. கூறுவன வருமாறு:

"அதன் பொருளதிகாரத்தை யான் படித்தபோது, அதில் வேறு எம்மொழி இலக்கணத்திலும் காணப்படாத நிலப் பாகுபாடு, நிலங்களின் மக்கள், ஏனைய உயிர்கள், மரங்கள், செடிகள், மக்கள், மக்களின் ஒழுக்கங்கள், பழக்கவழக்கங்கள் முதலியன கூறப்பட்டிருக்கக் கண்டேன். இவ்வொப்புயர்வற்ற நூலைத் தமிழ் மக்கள் படியாததற்கு ஒரு காரணம், இந் நூலிற்கு ஆன்ருேர் இயற்றியுள்ள உரைகளின் கடின நடை

யென்று உணர்ந்தேன். இந் நூலைத் தமிழ் மக்கள் யாவரும் கற்கும்படி எளிய நடையில் ஓர் உரை எழுதவேண்டுமென்று நினைத்தேன். உடனே எழுத்ததிகாரத்தின் முதற் சில இயல்களுக்கு உரையும் எழுதினேன்.......(பின்னர்) இளம் பூரணத்தை யான் படித்தபோது அதன் உயர்வும், சிறப்பும், எளிய நடையும் தொல்காப்பியத்திற்கு உரை எழுதுவது மிகையென்று நினைக்கச் செய்தன". *

இப் பகுதி கொண்டு வ. உ. சி. தமிழுக்கு-தமிழருக்குச் செய்ய நினைத்த தொண்டும் உரையாசிரியர் எனப் பண்டையோரால் சிறப்பித்துக் குறிப்பிடப்பெறும் இளம்பூரணரிடத்து அவர் கொண்டிருந்த மதிப்பும் புலனாகும். 1935ஆம் ஆண்டில் அதாவது தாம் இறப்பதற்கு ஓர் ஆண்டிற்கு முன்னர்த் தொல் காப்பியம்-இளம்பூரணத்தினை இவர் வெளியிட்டார். ஆயினும், 1920இல் இவர் தொடங்கிய தொல்காப்பிய அகத்திணையியல், புறத்திணையியல், இளம்பூரணர் உரைப்பதிப்பு 1928 ஆம் ஆண்டு கோவில்பட்டியில் இவர் இருந்தபொழுது வெளியிட்டுள்ளார். அடுத்து, 1933ஆம் ஆண்டில் இளம்பூரணம் களவியல், கற்பியல், பொருளியல் பதிப்பு வெளிவந்தது. இதனையடுத்து 15—1—1936 தேதியிட்டு இளம்பூரணம் மெய்ப்பாட்டியல், உவம இயல், செய்யுளியல், மரபியல்கள் பதிப்பு வெளியாகியுள்ளது. இப் பதிப்புப் பணிக்குப் பேருதவி புரிந்தவர் சென்னைப் பல்கலைக் கழகத்தின் முன்னாள் தமிழ்த்துறைத் தலைவர் பேராசிரியர் ச. வையாபுரிப் பிள்ளை என்பது,

"இவ்வேழு இயல்களுக்குப் பெயரளவில் பதிப்பாசிரியன் நான். உண்மையில் பதிப்பாசிரியர் திரு. வையாபுரிப் பிள்ளை அவர்களே. அவர்கள் செய்த நன்றி என்னால் என்றும் உள்ளற் பாலது"

என்று குறிப்பிட்டுள்ளமை கொண்டு அறியலாம்.

இதனால் வ. உ. சி. யின் செய்ந்நன்றியறிதலின் திறமும், அடக்கப் பண்பும் புலனாதல் காணலாம். இளம்பூரணத்தின் பெரும் பகுதியினைப் பதவுரையுடன் வெளியிட்ட சிறப்பு வ.உ. சி. யைச் சாரும்.

"The book represents the fruitful results of his (V. O. C.) ardous labours in the field carried on for more than three decades."

---

* சிதம்பரம் பிள்ளை, வ. உ., தொல். இளம்பூ. பொருள்; பதிப்புரை 1935. பக். 1.

என்று தொல்காப்பியம் மெய்ப்பாட்டியலின் பதிப்புரையின் நூல் வெளியீட்டு நிறுவனத்தார் திரு. வெங்கடேச சாஸ்துருலு குறிப்பிட்டுள்ளார்.

அடுத்து, பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்றுன ''இன்னிலே''க்கு எளிய இனிய உரையெழுதிப் பதிப்பித்துள்ளார்.

திருக்குறளில் நெஞ்சம் தோய்ந்தவர் வ. உ. சி. என்பதனை முன்னரே கண்டோம். 'அகமே புறம்' எனும் ஜேம்ஸ் ஆலன் நூலின் மொழி பெயர்ப்பில் திருக்குறளை மேற்கோள் காட்டியுள்ளார் என்பது எண்ணற்பாலது. திருக்குறள் மணக்குடவர் உரையை—அறத்துப் பாலிற்கு மட்டுமான உரையை—முதன்முதலில் பதிப்பித்த பெருமை வ. உ. சி. யைச் சேரும். அறப்பால், பொருட்பால், இன்பப்பால் என்றே இவர் வழங்குவர். பரிமேலழகர் உரையோடு இவர் பலவிடங்களில் மாறுபட்டு நிற்கின்றுர். மேலும், வ. உ. சி. அறத்துப்பாலின் சில பகுதிகளுக்குத் திண்மையாக உரைவிளக்கம் கண்டுள்ளார். இவ்வுரை நயம் போற்றத் தக்கதாம். பாயிரம் திருவள்ளுவரால் எழுதப்பட்டிருக்க முடியாது என்று இவர் முதல் முதலில் காரணங்காட்டித் தெரிவித்துள்ளார்.

இவ்வாறு வ. உ. சி. அவர்கள் அரசியல் வானில் ஒளி வீசும் சுடர்த் தாரகையாகத் திகழும் அதே நேரத்தில், தமிழ் மொழிக்குத் தம் வாழ்நாள் முடியும் எல்லே வரையில் பல்வேறு துறைகளிற் பாங்குற ஈடுபட்டு அயராது உழைத்த அறிஞர்-செந்தமிழ்ச் செம்மலார்-நூலோர் என்பது இதுகாறும் கூறியவாற்றுன் தாமே போதரும்.

---

## 6

# வ. உ. சி. வாழ்க்கைக் குறிப்பு

**மு. சண்முகம் பிள்ளை**

தமிழ் விரிவுரையாளர்,

திருக்குறள் ஆராய்ச்சிப் பகுதி,

சென்னைப் பல்கலைக் கழகம்.

1872 செப்டம்பர் 5, வியாழக்கிழமை, வ. உ. சிதம்பரம் பிள்ளை பிறப்பு.

முன்னோர் : பாட்டனார் கவிஞர் சிதம்பரம் பிள்ளை.

பெற்றோர் : உலகநாத பிள்ளை, பரமாயி அம்மையார்.

ஊர் : ஓட்டப்பிடாரம், பாண்டி நாட்டுச் சீமை—திருநெல் வேலி மாவட்டம்.

திண்ணைப் பள்ளிக்கூட ஆசிரியர் : வீரப்பெருமாள் அண்ணாவியார்.

ஓட்டப்பிடாரம் புதிய பள்ளியாசிரியர் : அறம்வளர்த்தநாத பிள்ளை.

1891 தூத்துக்குடி புனிதசவேரியர் உயர்பள்ளி—கால்டுவெல் கல்லூரியில் மெட்ரிகுலேசன் தேர்வு.

ஓட்டப்பிடாரம் தாலூகா அலுவலக எழுத்தர்பணி—சில மாதங்கள்.

1894 வ. உ. சி.—முதல் மனைவியார் வள்ளியம்மை திருமணம்.

1895 திருச்சியில் கணபதி ஐயர், அரிகர ஐயர் ஆகியோரிடம் சட்டம் பயிலுதல்—சட்டக்கல்வித் தேர்வு.
ஓட்டப்பிடாரத்தில் வழக்குரைஞர் பணி தொடக்கம்.

1900 தூத்துக்குடி வாழ்க்கை ; வழக்குரைஞர் தொழில்.

1901 மனைவி வள்ளியம்மையார் மறைவு—வ. உ. சி.—இரண்டாம் மனைவி மீனாட்சியம்மை—திருமணம்.

1901 சுவாமி சகஜானந்தரை ஆதரித்தல்.

1905 'விவேகபானு' எனும் தமிழ்த் திங்கள் இதழ் நடத்தியமை.

1906 அக்டோபர் 16—தூத்துக்குடியில் 'சுதேசிக்கப்பல் கம்பெனி' பதிவு.

,, சென்னையில் பாரதியாருடன் சேர்ந்து 'சென்னை மக்கள் சங்கம்' அமைத்தல்.

,, டிசம்பர் கல்கத்தா மாநகரக் காங்கிரசுக் கூட்டத்தில் கலந்து கொள்ளல்.

,, பம்பாய்க்குக் கப்பல் வாங்குதற்குச் செல்லல்.

1907 மே பம்பாயிலிருந்து 'காலியா,' 'லாவோ' என்னும் இரு கப்பல்களுடன் தூத்துக்குடி திரும்புதல்.

,, அக்டோபர் 11—சென்னை விவசாயக் கைத்தொழில் சங்கம் லிமிடெட்—சென்னையில் நிறுவுதல்.

1908 'நெல்லை தேசாபிமான சங்கம்' தொடக்கம்.

,, பிப்ரவரி 3—தூத்துக்குடி வருகை.

,, பிப்ரவரி 27—தூத்துக்குடி கொரல் மில் தொழிலாளர் வேலை நிறுத்தம்.

அரசுக்கெதிராக மக்களைத் தூண்டி விட்டதாகக் குற்றம் சாற்றப்பெறுதல்.

,, மார்ச் 14—நெல்லையில் விபினசந்திரபாலர் விடுதலை விழாவில் சிவாவுடன் கலந்து கொள்ளுதல். வ. உ. சி. சிறைப்படல்.

,, மார்ச் 15—நெல்லைக் கலகம்.

,, வ. உ. சி.-யைப் பாரதியார் பாளையங்கோட்டைச் சிறையில் சந்தித்தல்.

,, மார்ச் 26—வழக்கு விசாரணை தொடக்கம்.

,, சூலை 7—நடுவர் பின்கே தீர்ப்பு—வ. உ. சி.-க்கு 40 ஆண்டுகள் தீவாந்தரத் தண்டனை.

,, சூலை 9—கோவைச் சிறைக்கு மாற்றம்.

,, அக்டோபர் 13—சென்னை உயர்நீதி மன்றத்தில் வ. உ. சி.-யின் மேன்முறையீடு.

,, நவம்பர் 4—நடுவர்கள் மன்றோ, அர்னுல்ரைட் தீர்ப்பு—ஆறுண்டுகளாகச் சிறைத்தண்டனை குறைப்பு.

தொல்காப்பியப் புத்துரை, வ. உ. சி. சுயசரிதை—முதற் பகுதி, மெய்யறம், மெய்யறிவு முதலிய நூல்களின் ஆக்கம்.

'சுயசரிதை' எழுதத் தூண்டியவர் தேசத் தொண்டர், பரலி சு. நெல்லையப்பர் ஆவர்.

1911 கண்ணனூர்ச் சிறைக்கு மாற்றம்—தத்துவ அறிஞர் சேம்சு ஆலன் நூல்களை மொழியாக்கம் செய்தல்.

1912 டிசம்பர்—வ. உ. சி.-க்கு விடுதலை.

1913 குடும்பத்துடன் சென்னையடைதல்.

1914 'அகமே புறம்,' 'மெய்யறம்' நூல்கள் வெளியீடு.

1915 'மெய்யறிவு,' 'பாடற்றிரட்டு,' 'வள்ளியம்மை சரித்திரம்'—நூல்கள் வெளியீடு.

,, சென்னை வாழ்க்கை—மயிலாப்பூர், சிந்தாதிரிப்பேட்டை, பெரம்பூர் ஆகிய இடங்களில் வாழ்க்கை.

,, திருமணம் செல்வக் கேசவராய முதலியார், திரு. வி. கலியாண சுந்தரனுர் முதலிய அறிஞர் பெருமக்களின் தொடர்பு.

,, காந்தியடிகளோடு தொடர்பு.

1915 மனம்போல வாழ்வு, வலிமைக்கு மார்க்கம், சாந்திக்கு மார்க்கம்—நூல்கள் வெளியீடு. மற்றும் பேரின்ப மார்க்கம், ஊழை வெல்வதற்கு உபாயம், ஆகிய இரண்டும் மொழி பெயர்த்துள்ளமையைச் சாந்திக்குமார்க்கம் முகவுரை அறிவிக்கிறது. ஆனல், அவை வெளிவரவில்லை.

1917 திருக்குறள் மணக்குடவர் உரை—இன்னிலை விருத்தியுரை பதிப்பு.

1919 காந்தியடிகளாரைச் சென்னையில் வரவேற்றல்.

,, சுய சரிதை இரண்டாம் பகுதி—எழுதியது.

7-12-1919 திலகர் பெருமானைச் சென்னையில் சந்தித்து அளவளாவல். திரு. வி. கலியாணசுந்தரனாருடன் தேசியப் பணித் தொடர்பு.

1920 கல்கத்தா காங்கிரசில் கலந்துகொள்ளுதல் (கொள்கை மாறுபாடு காரணமாகக் காங்கிரசிலிருந்து விலகல்).

1924 வழக்குரைஞர் உரிமையைப் பெற்றுக் கோவில்பட்டிக்குச் செல்லல்.

1927 சேலம் மாவட்ட மூன்றாவது அரசியல்மாநாட்டுத் தலைமை.

இத் தலைமையுரை 'எனது அரசியல் பெருஞ்சொல்' என்னும் தலைப்பில் வெளியிடப்பெற்றது.

1928 சூன் 1—தொல்காப்பியம் எழுத்ததிகாரம்—இளம்பூரணம் பதிப்பு.

,, தொல்காப்பியம் அகத்திணையியல், புறத்திணையியல்.

1933 தொல்காப்பியம்—களவியல், கற்பியல், பொருளியல் வெளியீடு.

1934 'திருக்குறள் விருத்தியுரை' திருச்செந்தூரில் அரங்கேற்றம்.

1935 திருக்குறள் விருத்தியுரை நூல் வெளியீடு. மீண்டும் தூத்துக்குடியில் குடியேற்றம்.

,, பாபு ராசேந்திரபிரசாத் சிதம்பரனார் மனை வந்து நோய் நலம் உசாவுதல்.

1936 மெய்ப்பாட்டியல் உவமவியல், செய்யுளியல் மரபியல் நூல் வெளியீடு.

1936 நவம்பர் 18—பூத உடல் மறைவு ; புகழ் உடம்பு மலர்வு.

## வ. உ. சி. வாழ்கிறார்

தமிழ்நாட்டு நகர மன்றங்கள், ஊராட்சி மன்றங்கள் பல, பூங்காக்கள், சாலைகள், சோலைகள், குடியிருப்புகள் ஆகியவற்றிற்கு வ. உ. சி.-யின் பெயரிட்டு அவர் புகழ் போற்றுகின்றன.

**குடியிருப்புகள்**

தூத்துக்குடியில் சிதம்பரம் நகர், டெல்லியில் வி. ஓ. சி. புதுக் குடியிருப்பு உள்ளன. இவ்வாறே வேறு சில ஊர்களிலும் இவர் பெயர் நிலவுவது காணலாம்.

**பூங்காக்கள்**

பூங்காக்களுள் கோயம்புத்தூரிலும் ஈரோட்டிலு முள்ளவை பெரிய பூங்காக்கள்.

**வ. உ. சி. நகரமன்றம்**

வேலூர் நகரமன்றக் கவுன்சில் கட்டடம்.

**வ. உ. சி. நினைவு மண்டபம்**

ஒட்டப்பிடாரத்தில் உள்ளது.

**வ. உ. சி. உருவச்சிலைகள்**

முக உருவச்சிலை : சென்னை இராயப்பேட்டை காங்கிரஸ் மண்டபத்தின் நுழைவாயிலில் (1939).

முழு உருவச்சிலைகள்

1. பாளையங்கோட்டையில் நகரத்தின் புகுவாயில்.
2. 1968-ல் இரண்டாம் உலகத் தமிழ் மாநாட்டை ஒட்டிச் சென்னைத் துறைமுக வாயிலில் வ. உ. சி.யின் முழு உருவச்சிலை நிறுவப்பெற்றது. இதனைச் சென்னை மாநகராட்சி வழங்கியது.
3. 1972 செப்டம்பர் 5ஆம் நாள் வ. உ. சி. நூற்றாண்டு விழாவில், தூத்துக்குடித் துறைமுகத்தில் இந்தியப் பிரதமர் இந்திராகாந்தி, உருவச்சிலை திறந்து வைத்தார்.

**வ. உ. சி. உருவப்படம்**

சென்னை மாநகராட்சி மன்றத்தில் வ. உ. சி.யின் திருவுருவப் படம்.

மற்றும் பல மன்றங்களிலும் நூலகங்கள் முதலியவற்றிலும் இவருடைய உருவப்படங்கள் இடம்பெற்றுள்ளன.

தமிழ்ப்பண்ணை நூல் வெளியீட்டாளர் இவர்தம் முகவுருவ வண்ணப்படம் அச்சிட்டுப் பரப்பினர்.

**தபால் தலை**

நூற்றாண்டு விழா நாளில் நினைவுத் தபால்தலை தூத்துக்குடியில் வெளியிடப்பெற்றது.

**வ. உ. சி. நினைவு நாள்**

ஒவ்வோராண்டும் நவம்பர் 18ஆம் நாள் தமிழரசுக்கழகம் கொண்டாடி வருகிறது.

**வ. உ. சிதம்பரம் பிள்ளை கல்விக்குழு**

1947 ஆகஸ்டு 20-ல் தூத்துக்குடி திரு. ஏ. பி. சி. வீரபாகு அவர்கள் தோற்றுவித்தார்.

**கல்வி நிலையங்கள்**

தூத்துக்குடியில், வ. உ. சி. கல்லூரி, 1951. வ. உ. சி. ஆசிரியர் கல்லூரி, 1955. வ. உ. சி. மாதிரி உயர்நிலைப் பள்ளி, 1962.

**கப்பல்:** 1949-ல் வி. ஓ. சிதம்பரம் என்னும் கப்பலை கவர்னர் ஜெனரல் ராஜாஜி தூத்துக்குடியில் மிதக்கவிட்டார்.

**நூற்றுண்டு விழா**

1972-ல் தூத்துக்குடியிலே வ. உ. சி. நூற்றுண்டு விழாவில் இந்தியப் பிரதமர் இந்திராகாந்தியும் தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் கருணாநிதியும் கலந்துகொண்டு சிறப்பித்தனர். வ. உ. சி.யின் முழு உருவச்சிலையும் துறைமுகத்தில் திறக்கப் பெற்றது.

## நூல்களில் வ. உ. சி.-யின் வான்புகழ்

1. **கப்பலோட்டிய தமிழன்**

சிவஞானம், ம. பொ., இன்ப நிலையம், சென்னை, I 1944; III 1947.

**2. வீர சிதம்பரனுர்**

சுப்பிரமணிய பிள்ளை இ. மு., சிவகாமி பப்ளிஷிங் ஹௌஸ், ஸ்ரீ வைகுண்டம், I 1950.

**3. நம் நாட்டுத் தலைவர்கள்**

இரண்டாம் புத்தகம், வீர சிதம்பரனுர்—புலவர் அரசு, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, I 1951. மறு பதிப்பு 1970.

**4. வ. உ. சிதம்பரம் பிள்ளை மலர்**

பம்பாய்த் தமிழ்ச்சங்கம், மாதுங்கா, I 1951.

**5. வீர சிதம்பரனுர்**

சுப்பிரமணிய ஐயர், எம். எஸ்., ஆசிரியர் நூற்பதிப்புக் கழகம், சென்னை, I 1952. II 1954.

**6. செக்கிழுத்த சிதம்பரனுர்**

மன்னர் மன்னன், ப. க., (வரலாற்று நாடகம்) ப. மு. க. வெளியீடு, காவேரிப்பட்டணம், I 1955.

**7. தளபதி வ. உ. சிதம்பரனுர்**

முல்லை முத்தையா, இன்ப நிலையம், சென்னை I 1959.

**8. வீரத்தமிழன் வ. உ. சிதம்பரம் பிள்ளையின் வில்லுப்பாட்டு**

விக்டோரியா, புலவர் ஜே. எம்., தமிழர் முன்னேற்றக் கலா மன்றம், கொழும்பு, 1966.

**9. நாட்டுக்கு உழைத்த நல்லவர்**

வ. உ. சிதம்பரம் பிள்ளை—வெங்கட்ராம், பழனியப்பா பிரதர்ஸ், சென்னை, I 1968, II 1970.

**10. கப்பலோட்டிய சிதம்பரனுர்**

சிவஞானம், ம. பொ. சி., இன்ப நிலையம், சென்னை, 1972.

**11. வ. உ. சிதம்பரனுர் நூற்றாண்டு விழா மலர்**

தூத்துக்குடி, 1972.

**12.** விடுதலை வீரர் வ. உ. சி.

நூற்ருண்டு விழாச்சிறப்பு மலர் வ. உ. சி. நூற்ருண்டு விழாக் குழு, சைவப்பெருமக்கள் பேரவை, கோயம்புத்தூர், 1972.

**13.** வ. உ. சி. நூற்ருண்டு மலர்

சுரதா, 1972.

**14.** சிங்கத்தமிழர் சிதம்பரனுர்

சண்முக சுப்பிரமணியம், மா., சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, I 1972.

நாடக அரங்கில் வ. உ. சி.

தேசபக்தர் சிதம்பரனுர் : சித்தராசன், எஸ்., சேலம்.
இது நாடகமேடையில் அவ்வை டி. கே. சண்முகம் சகோதரர் களால் நடிக்கப்பெற்றது.

திரைப்படத்தில் தீரன் வ. உ. சி.

"கப்பலோட்டிய தமிழன்"—பத்மினி பிக்சர்ஸ்.

கதை வசனம் : கவிஞர் எஸ். டி. சுந்தரம்

நடிகர்கள் : வ. உ. சி.யாக நடிகர் திலகம் சிவாஜி கணேசன், சுப்பிரமணிய சிவாவாக அவ்வை டி.கே. சண்முகம் முதலியோர்.

நூற்ருண்டு கண்ட பெருமகன்

1972 நவம்பர் 18-ல் வ. உ. சி.யின் நூற்ருண்டு விழா நாடெங்கும் சிறப்பாகக் கொண்டாடப் பெற்றது. நாளிதழ்கள், திங்கள் இதழ்கள் முதலியன வ. உ. சி. பெயரால் சிறப்பு வெளியீடுகளும் வெளியிட்டுள்ளன.

வ. உ. சி.யின் புகழ் பாடிய புலவர் பெருமக்கள்

தேசிய கவிஞர் சுப்பிரமணிய பாரதியார், கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை, நாமக்கல் கவிஞர் வெ. இராமலிங்கம் பிள்ளை முதலியோர் பலர்; இந்நாள் இளங்கவிஞர் யாத்த பாமாலைகளும் பலவாம்.

## வ. உ. சி. நினைவு மலர்கள்

வ. உ. சிதம்பரம் பிள்ளை மலர்—
பம்பாய்த் தமிழ்ச் சங்கம்-1951
சுடர்-வ. உ. சி. மலர்
தில்லித் தமிழ்ச் சங்கம்-1964
வ. உ. சி. நூற்றாண்டுவிழா மலர்
வ. உ. சி. கல்லூரி, தூத்துக்குடி-1972
வ. உ. சி. நூற்றாண்டு மலர் சுரதா-1972.
விடுதலை வீரர் வ. உ. சி. நூற்றாண்டு
விழாச் சிறப்பு மலர்-1972
புத்தக உலகம், கோயம்புத்தூர்-641018.

## வ. உ. சி. தந்த தமிழ்ச்செல்வங்கள்

### செய்யுள் நூல்கள்

மெய்யறம்
மெய்யறிவு
வ. உ. சி. சுய சரிதை
எனது பாடற்றிரட்டு

### உரைநடை நூல்கள்

அகமே புறம்
மனம்போல வாழ்வு
வலிமைக்கு மார்க்கம்
சாந்திக்கு மார்க்கம்
['பேரின்ப மார்க்கம்,' 'ஊழை வெல்வதற்கு உபாயம்,' என்பனவும் இவ்வரிசை மொழி பெயர்ப்பே. ஆயின், அவை அச்சேறவில்லை.]
எனது அரசியல் பெருஞ்சொல்

### உரை நூல்கள்

திருக்குறள்—அறத்துப்பால் விருத்தி உரை.
சிவஞானபோதம்—தெளிவுரை.
இன்னிலை—உரை.

### பதிப்புகள்

திருக்குறள்—அறத்துப்பால்—மணக்குடவர் உரை.
தொல்காப்பியம்—எழுத்ததிகாரம்—இளம்பூரணம்.
,, —பொருளதிகாரம்— ,,

## வ. உ. சி. யின் கால்வழி*

வ. உ. சிதம்பரனார் — மீனாட்சி அம்மாள்
(1872-1936) ( -1951)




**ஆண்**

(1) வ. உ. சியின் தந்தை பெயர் சூட்டப்பெற்றவர்; 20ஆம் ஆண்டில் மறைந்தார்.

(2) தூத்துக்குடி வணிகர் சி. த. ஆறுமுகம்பிள்ளை நினைவாக இட்ட பெயர். கூட்டுறவு இலாகாவில் அலுவல் பார்த்தவர்; விளாத்திகுளம் சின்னூரில் வாழ்பவர்.

(7) கோவை. சி. கே. சுப்பிரமணிய முதலியார் நினைவாக இட்ட பெயர். அமெரிக்க அரசு தகவல் நிலையம், சென்னை பத்திரிகைப்பணி, தமிழ்ப்பணித் தலைவர்.

(8) நீதிபதி வாலேஸ் துரையின் நினைவாக இட்ட பெயர்.

**பெண்**

(3) கோவையை அடுத்த பேரூரில் பிறந்தவர். அத் தல அம்பிகையின் நாமம் பூண்டவர்.

(4) தில்லையாடி வேதியப்பிள்ளையின் நினைவாகச்சூட்டிய பெயர்.

---

★ 1964-ல் தில்லித்தமிழ்ச்சங்கம் வெளியிட்ட 'சுடர்—வ. உ. சி. மலரி'-ல் வ. உ. சி. யின் புதல்வர் திரு. வ. உ. சி. சுப்பிரமணியம் அவர்கள் எழுதிய 'எங்கள் குடும்பம்' என்னும் கட்டுரையைத் தழுவி அமைத்தது. திரு. வ. உ. சி. ஆறுமுகம் அவர்கள் அண்மையில் எழுதிய 'எங்கள் குடும்பம்' என்னும் கட்டுரையிலும் (வ. உ. சிதம்பரனார் நூற்றாண்டு விழா மலர்—தூத்துக்குடி, 1972) இச் செய்திகளைக் காணலாம்.

16 G. Chidambaram Pillay, Mylapore, Madras
[illegible] 26.11.64 309 22nd May 1915.

To

M. K. Gandhi Esquire,

Bar-at-Law,

S.N. 6192 [illegible] Ahmedabad.

Dear Sir, Ltr. 92 [illegible]

Many thanks for your kind letter of the 20th instant. I thought from your letter of the 21st ultimo that the money given to you to be remitted to me was spent towards the Passive Resistance cause of South Africa and that you wanted to pay me from your own pocket, which, I thought, would not be just. So I wrote to you that you need not trouble yourself any more about it. But now your letter of the 20th instant makes me understand that that money was not used for any other cause and that it is still with you for disposal. I will, at my present condition, be only glad to receive that money from you with my thanks to yourself, your good friend and to all those that subscribed it. I have already told you in person that I and my family are supported for the past two years or so by some South African Indians. Even too I have applied to them for pecuniary help. Such being the case there is no reason why I should say that the money intended for me and that is ready to be given to me is not wanted by me. Under my

present circumstances if I refuse that amount I'll be committing a wrong to myself and my family. So I request you will be kindly pleased to send me the money to the following address of mine at your convenience and also to let me know the address of your friend that gave you the money so that I may send him and, through him, the subscribers of the amount my Tamil publications as a price of my gratitude to them. Some of my friends are anxious if they could join your Institution. I shall show to them your letter of the 20th instant and then write to you what they say. Hoping this will find you and Mrs. Gandhi in good health,

Yours sincerely,
V.O. Chidambaram

My address

40, Peripperumal Vinayagar Koil Street, Mylapore,
Madras.

7

# காந்தி அடிகட்குக் கப்பலோட்டிய தமிழரின் கடிதம்

(டாக்டர் ந. சஞ்சீவி)

கப்பலோட்டிய தமிழர்—வ. உ. சி.—தமிழர் நெஞ்சில் குடியிருக்கும் குலதெய்வம்

இப் பெருந்தகையர் பிறந்து நூருண்டுகள் நிறைந்துள்ளன. சென்ற ஆண்டு 1972 செப். 5ஆம் நாள், அவர்தம் நூற்ருண்டு விழாவை அரசும் மக்களும் நன்றியுணர்வோடு நன்ருகக்கொண்டாடியமையை அனைவரும் அறிவர். இத்தகைய பெரியார் அண்ணல் காந்தி அடிகட்கு 55 ஆண்டுகட்கு முன்பு எழுதிய அரியதொரு கடிதம் – வரலாற்றுப் புதையல் – இப்போது கிடைத்துள்ளது. காந்தியடிகள் நூற்ருண்டை ஒட்டித் தமிழக அரசு அழகுற அமைத்துள்ள 'காந்தி இல்லத்'தில் இக் கடிதம் – வரலாற்றுப் புதையல் – தக்கவாறு பாதுகாத்துக் காட்சிப் படுத்தப்பட்டுள்ளது. காந்தி அடிகள் – கப்பலோட்டிய தமிழர் இருவரின் அரிய பண்புகள் பலவற்றையும் உள்ளங்கை நெல்லிக்கனியாய் விளக்கிக்காட்டும் அவ்வரிய ஆங்கிலக் கடிதத்தின் தமிழாக்கம் வருமாறு:

வ. உ. சிதம்பரம் பிள்ளை
மயிலாப்பூர், சென்னை.
மே. 22, 1915.

திரு. எம். கே. காந்தி அவர்கள்
பார்-அட்லா
அகமதாபாத்

அன்பார்ந்த ஐயா,

தாங்கள் 20-ஆம் தேதி எழுதிய அன்பார்ந்த கடிதத்திற்கு நன்றி பல. தாங்கள் சென்ற மாதம் 21-ஆம் நாள் எழுதிய கடிதத்திலிருந்து எனக்குத் தருவதற்காகத் தங்களிடம் தரப்பட்ட பணம் தென்னுப்பிரிக்க ஒத்துழையாமைப் போருக் காகச் செலவிடப்பட்டது என்றும் அந்தப் பணத்தைத் தாங்கள் தங்கள் கையிலிருந்து தரவிரும்புவதாகவும் அதுவும் முழுமையாக இராது என்றும் நினைத்தேன். அதனுல் அது குறித்து இனிமேல் தாங்கள் தொந்தரைப்பட வேண்டியது இல்லை என்று எழுதினேன். ஆனுல், இம் மாதம் 20-ஆம் தேதி தாங்கள் எழுதிய கடிதத்திலிருந்து அந்தப் பணம் வேறு எதற்கும் செலவிடப்படவில்லை என்பதும் அது இன்னும் எனக்குத் தரப்படுவதற்காகத் தங்களிடமே இருக்கிறது என்பதும் தெளிவாகிறது. என்னுடைய தற்போதைய நிலையில் தங்கட்கும் தங்கள் நல்ல நண்பர்க்கும் இன்னும் நன்கொடை தந்த எல்லோர்க்கும் நன்றி பாராட்டி அத் தொகையைப் பெற்றுக் கொள்ளவே அவாவுகின்றேன்

கடந்த இரண்டாண்டுக் காலமாகச் சில தென் ஆப்பிரிக்க நண்பர்கள் தயவே என்னையும் என் குடும்பத்தையும் காத்து வருகிறது என்பதை நான் ஏற்கெனவே தங்களிடம் நேரில் தெரிவித்துள்ளேன். இப்போதுகூட அவர்களிடம் சிறு உதவி வேண்டி விண்ணப்பம் செய்துள்ளேன். இந்த நிலையில எனக் காகத் தரப்பட்ட பணத்தை—எனக்காகத் தயாராய் இருக்கும் பணத்தை – எனக்கு வேண்டாம் என்று சொல்ல எக்காரணமும் இல்லை. இப்போது இருக்கும் நிலையில் அந்தப் பணம் வேண்டாம் என்று சொல்வேனுனல், அது எனக்கும் என் குடும்பத்திற்கும் நான் இழைத்த தவருகும். அதனுல் தங்கட்கு வசதிப்பட்டபோது அன்போடு அப்பணத்தைப் பின்வரும் என் முகவரிக்கு அனுப்பி உதவ வேண்டுகிறேன். அத்துடன் (என்னிடம் சேர்ப்பிக்க) தங்களிடம் அப்பணம் தந்த அன்பரின் முகவரியையும் தர வேண்டுகிறேன். காரணம் அப்போதே அவர்க்கும் அவர் வாயிலாக நன்கொடை தந்த நண்பர்கட்கும் என் நன்றியின் எளியதோர் அறிகுறியாக என்னுடைய தமிழ் வெளியீடுகளை அவர்கட்கு அனுப்ப இயலும். என்னுடைய நண்பர்கள் சிலர் தங்கள் அமைப்பில் சேரலாமா என்று எண்ணுகிருர்கள். அவர்கட்குத் தங்கள் 20-ஆம் நாள் கடிதத்தைக் காட்டுகிறேன். அதன்பின் அவர்கள் என்ன சொல்கிருர்கள் என்பதை எழுதுகிறேன். இக் கடிதம் தாங்களும் திருமதி காந்தியும் நலத்துடன் இருப்பதைக்காணும் என்று நம்புகிறேன்.

தங்கள் அன்புள்ள,

**வ. உ. சிதம்பரம்.**

என் முகவரி:
40, பரிபூர்ண விநாயகர் கோயில் தெரு,
மயிலாப்பூர், சென்னை.

அமில்டன் பாலத்தருகே - அடியேன் வீட்டிற்கு அடுத்த தெருவில் - ஒரு வீட்டிலிருந்து அரை நூற்று ஐந்தாண்டுகட்கு முற்பட்ட ஒரு நாளில் கப்பலோட்டிய தமிழர் காந்தி அடிகட்கு எழுதிய இந்தக் கடிதம் கல்நெஞ்சையும் உருக்கும். அரை நூற்றுண்டுக்கு முன்பு அந்த அரும்பெரு நாட்டுப் பற்றுளர் —தாய் நாட்டின் விடுதலைக்காகக் கண்ணனூர்ச் சிறையில் கல்லுடைத்தும் செக்கிழுத்தும் காலந்தள்ளிய கடமை வீரர்—எவ்வளவு வருந்தத் தக்க வறுமை நிலையில் வாடியிருக்கிறுர் என்பதை எண்ணும்போது எலும்பும் நிலைகுலைகிறது. தாயகத்தில் ஆதரிப்பார் அற்றுத் தென்னுப்பிரிக்கர் தயவில் வாழ நேர்ந்ததை அறியும்போது தலை குனிய வேண்டியுள்ளது.

மேலும், இக் கடிதம் திலகர் பெருமானின் அடியாராகிய சிதம்பரனுரிடம் அண்ணல் காந்தி அடிகள் வைத்திருந்த அன்பையும் மதிப்பையும் தெள்ளிதின் விளக்கும். அப் பெருந்தகை மகாத்மா வாகப் பட்டம் சூட்டப் பெருத நிலையிலேயே-கணக்குகளை வைப்ப திலும் நம்பிக்கைகளைக் காப்பதிலும் நண்பர்கட்கு உதவுவதிலும் சூரராய் இருந்தார் என்பதும் புலனுகும்.

நாற்பதுக்கு மேற்பட்ட வரிகளை உடைய இவ்வாங்கிலக் கடிதத்தில் ஓரிரண்டு இடங்களிலேயே அடித்தல் காணப்படுகிறது என்பதும் எவ்விடத்தும் எவ்விதத் திருத்தலும் இல்லை என்பதும் எண்ணற்குரியது.

இக் கடிதம் எழுதியபோது கப்பலோட்டிய தமிழருக்கு 43 வயது தான் என்பதும், இதற்கப்புறம் 21 ஆண்டுக் காலம் எப்படித்தான் வாழ்ந்தாரோ என்பதும் நினைந்துநினைந்து நெஞ்சம் நெகிழ வேண்டிய உண்மைகளாகும்.

The **Kural** is divided into 113 chapters, eacn containing ten couplets (**kural**) or distiches, each complete in itself. Tiruvalluvar sings of virtue, morals, love, happiness, prosperity and wealth from a high ethical standpoint in verses that have the beauty, brevity and finality of a Japanese **haikku** in which whole worlds of significant suggestion or pointed advice find their glittering place. Ethics, state craft, love, the art of life, all yield their secrets to Tiruvalluvar. His work is not, therefore, inaptly called "Veda in minature," "a mustard seed in which is comprehended the riches of the seven seas."

—K. R. SRINIVASA IYENGAR.
Indian Inheritance-Vol. I, Page 116-117
Bharatiya Vidya Bhavan,
Bombay-1957.

# மதிப்புரை மாலை

## புயலின் மையம்

காத்யா என்பவள் ஜூபிளி உயர்நிலைப் பள்ளியில் ஆசிரியை. அவள் அத்தை சற்று வசதி படைத்தவள். சிறு வயதிலேயே தாய் தந்தையரை இழந்த காத்யாவை அத்தையே வளர்க்கிருள். அவள் மகன் ராஜகோபாலனுக்கு மணமுடிக்கிருள். ராஜகோபாலன் நன்கு படித்தவன்; நல்ல சொற்பொழிவாளன்; தொழிலாளர் கூட்டங்களில் தேசிய உணர்ச்சி பொங்கப் பேசுவதில், அவ்வழியே செயலாற்றுவதில் வல்லவனுயிருந்தான். ஆனுல் எதிர்பாராத நிலையில் மூளை கலங்கி நிலைதிரிந்து, இருந்தும் மற்றவர்க்கு இறந்தவனுகிவிடுகின்ருன். இதனுல் காத்யா வாழ்வில் ஒரு சுகமும் காணுமல் வாழ்கிருள். இந்நிலையில் சுரேந்திர நகர் வானிலை ஆராய்ச்சிக் கூடத்தில் விஞ்ஞானியாகப் பணி யாற்றும் கேதாரி எனப்படும் கேதாரிநாத்தின் தொடர்பு ஏற்படுகிறது. ஒருமுறை அவள் வானிலை ஆராய்ச்சிக் கூடத்திற்குச் சென்று அவன் கணக்கறிவை வியந்து திரும்புகிருள். கேதார்நாத்தின் மனைவி அலமு கணவனை அடக்கி வாழ்பவள்; எடுத்ததற்கெல்லாம் கணவனேடு மல்லுக்கு நிற்பவள். அவளுக்கு இந்தச் செய்தி தெரியவருகிறது. வீடு இரண்டாகிறது. ஏற்கெனவே வீட்டில் புயல். இப்போது மேலும் கேட்க வேண்டுமா? இதனிடையில் தன் கீழ்ப் படிக்கும் மாணவியைக் கண்டித்த தற்காக வருத்தம் தெரிவிக்க வேண்டும் என்று நிர்வாகத்தினர் காத்யா வைக் கட்டாயப்படுத்த அவள் தன்மான உணர்வு வேலையை ராஜி நாமாச் செய்துவிட்டு வீட்டோடு நின்றுவிடவைக்கிறது. கேதாரி ராஜகோபாலனின் இளமை நண்பன். அடிக்கடி காத்யா வீட்டிற்கு வந்துபோகிருன். அத்தை காசி முதலிய வடநாட்டுப் புண்ணியத் திருத் தலங்களுக்குச் செல்ல முடிவு செய்கிருள். காத்யாவுக்குத் துணையாகக் கேதாரியைத் தன் குடும்பத்தோடு வந்து தன் வீட்டில் வாழுமாறு கூறு கிருள். அவன் பதினைந்து நாட்களாகியும் திரும்பாமற்போகவே, காத் யாவின் தோழி வசந்தி குடும்பத்தைக் காத்யாவுக்குத் துணையாக இருக்கவைத்துவிட்டுத் தன் புத்தி சுவாதீனமற்ற மகன் இராஜு எனும் இராசகோபாலனை அழைத்துக்கொண்டு வடநாட்டுப் பயணத்தை மேற் கொள்கிருள். ரயிலேற்றிவிட்டு காத்யா வீடு திரும்பியதும் கேதாரி வந்து நிற்கிருன். அவன் ஆராய்ச்சி அவனுக்கு வெற்றியை அளித்துள்ளது.

அதற்குக் காத்யா கொடுத்த உற்சாகமே காரணம். காத்யா அவனுக்கு இனிப்பு வழங்கி நிற்கிருள். "இனிப்பு அவன் நாவில் பட்டு நீர்சுரக்கும் தருணத்தில் அவளுடைய கண்களும் பனிக்கின்றன" என்று கதை முடிகிறது.

கோவாவின் விடுதலைப் போராட்டத்தில் பங்கெடுத்துக்கொண்டு, லூவாங்நாச் சிறையில் எட்டு மாதம் சூரியனையே காணுமல் சிறையிருந்த நண்பர் கூறிய கதை திருமதி ராஜம்கிருஷ்ணன் அவர்களைப் "புயலின் மையம்" எனும் நாவலை எழுதவைத்தது.

பாத்திரங்கள் பலவும் திறம்பட இந் நாவலில் படைக்கப்பட்டிருக்கின்றன. காத்யா—அவள் எதையும் மீறிப்போகாமலே பழகியவள். அலமுவுடன் குடும்பம் நடத்துவதே, அன்றுடம் திடீர் மர்மங்கள் செறிந்த புத்தகம் படிப்பதை ஒத்ததொன்று. அத்தை காசிக்குப் போகாமல், கயைக்குப் போகாமல், தன்னுடைய சுகங்களை எல்லாம் தியாகம் செய்கிருள்.

இவ்வாறு இந்நாவலில் இடம் பெறும் ஒவ்வொரு பெண்ணும் ஒவ்வொரு வகை.

இந்நாவலில் வருணனை ஏதும் கிடையாது. முழுக்க முழுக்க மனப் போராட்டங்களை இந்நாவல் சித்திரிக்கின்றது எனலாம். அகமனப் போராட்டங்களை, அகமனத்தின் ஆழத்தில் ஒளிந்து கிடக்கும் உணர்ச்சிகளை, எழும் சலனங்களைத் தீட்டிக் காட்டுவதில் ராஜம் கிருஷ்ணன் கைதேர்ந்தவர். ஆனந்தவிகடன் பரிசு பெற்ற நாவலான 'மலர்கள்' இத்தரத்தில் அடங்கும்.

ஆசிரியை சீரிய சிந்தனைகளை இந்நாவலில் விதைத்துள்ளார். எடுத்துக்காட்டுக்கு ஒரு பகுதி :

"எல்லோருமாக வாழ்க்கை என்ற புதிய களத்தைப் பற்றிச் சிறிதும் தீவிரமாகச் சிந்தித்திராத, அறிந்திராத அவனுக்குத் (கேதாரி) திரை போட்டு மறைத்துவிட்டார்கள். மேனி நிறத்தை, கூந்தலின் செறிவைப் பார்த்தவர்களுக்கு, உள்ளத்தின் நிறம் அறியவேண்டும் என்ற எண்ணமில்லை. அவனுக்காவது எண்ணச் சந்தர்ப்பம்கூடக் கொடுக்கவில்லை.

"ரொம்ப யோக ஜாதகமாக்கும்! இந்தப் பெண்ணைக் கைப்பிடித்தவனுக்கு எல்லா பாக்கியங்களும் கூடிவரும்" என்று ஜோசியர் எழுதித் தந்திருப்பதாகச் சொன்னர்கள்.

பாக்கியம் என்பது என்ன? பண வசதிகள்; ஒரு பெண்ணுக்கு ஒரு ஆண் என்று ஒருவர்க்கொருவர் தேவைகளை இட்டு நிரப்பிக் கொள்ளுதல்; அம்மட்டேதானு? வாழ்க்கையின் பேறுகள் இவை தாமா?" (பக்கம் : 99)

இவ்வாறு வரும் பகுதிகள் நம் சிந்தனையைத் தூண்டுவனவாகும்.

சிறைக் கொடுமைக்கு ஆளாகி, "சோதனையைத் தாங்காமல் பேதையாகிப்போன ஓர் இளைஞரைப் பற்றியும் அறிந்தேன். அகோதா கோட்டையில், அந்தத் தனிமைச் சிறை அறையை நான் பார்த்த போது, இந்தக் கதையில் வரும் ராஜகோபாலன் என்னுள் உருவானான். புயலுக்கு மையம் இந்தப் பாத்திரமே. இந்தப் புள்ளியைச் சுற்றி, பாரத நாட்டின் சிறப்பியல்பைத் தன் உணர்வாகக் கொண்ட ஒரு விஞ்ஞானி, ஒரு தாய், ஒரு மனைவியாய்ப் பழமைக்கும் புதுமைக்கும் இடையிலுள்ள சந்தியில் சிறகொடிந்து நிற்கும் பெண் ஆகியவர்கள் சுழலுகிறார்கள். புயலை அழிவுச் சக்தியாக மட்டுமே கொள்ளக்கூடாது என்பதே என் நோக்கம்; நாவல் இலக்கியத்தின் வாயிலாகப் புதிய புதிய செய்திகளைப் புதுமையாகத் தரவேண்டும் என்பது என்னுடைய மற்றொரு இலட்சியம். இந்த நோக்கங்களில் நான் வெற்றி பெற்றிருக்கிறேனா என்பதைத் தமிழ் வாசகர்களே கூறவேண்டும்" என்று ஆசிரியை தம் முன்னுரையில் கூறியுள்ளார். அவர் இலட்சியம் கைகூடியுள்ளது என்றே சொல்லவேண்டும். வழக்கமான நாவல் போக்கிலிருந்து விலகி, ஒரு புதிய வகையில் இந்நாவல் உருவாக்கப்பட்டுள்ளது. ஆசிரியைக்கு நம் பாராட்டுகள்.

புயலின் மையம்: ராஜம் கிருஷ்ணன்; வெளியிடுவோர்: தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கத்தார், 8 சின்னரெட்டித் தெரு, எழும்பூர், சென்னை-8 பக்கங்கள் 222; விலை ரூபாய் நான்கு.

— டாக்டர் சி. பாலசுப்பிரமணியன்

## சேக்கிழார்

ஒவ்வொரு நூற்றாண்டையும் எல்லையாகவைத்துத் தமிழ் இலக்கிய வரலாற்றை விரிவாக எழுதிவரும் ஆசிரியர், மு. அருணாசலம் அவர்களின் 12ஆம் நூற்றாண்டின் ஒரு பகுதியே இந்நூல். புலவர் ஒருவரின் தனிப்பெரும் வரலாறாகவும் அமைந்துள்ளமையினால் இதனைத் தனி நூலாகவும் அவர் வெளியிட்டுள்ளார். சேக்கிழார் வரலாறு பல்வேறு கண்ணோட்டத்தில் ஆக்கப்பெற்ற பெரியதொரு வரலாற்று நூலாக விளங்குவது இதன் தனிச் சிறப்பாகும்.

தமிழிலக்கிய வரலாற்றோடு சைவசமய வரலாறாகவும், அடியார்களின் அரும்பெருஞ் சிறப்புகளை எடுத்தியம்புவதாகவும் இது காட்சியளிக்கிறது. புலவர்தம் வாழ்க்கை நிகழ்ச்சிகளில் செவிவழிச் செய்திகளை மட்டும் கொள்ளாமல் சமய நூல்களின் சான்றுகளையும்—சிறப்பாகக் கல்வெட்டு ஆதாரங்களையும் எடுத்துக்காட்டி உண்மை வரலாற்றை விளக்க முற்படுவது இந் நூல்.

தெய்வச் சேக்கிழாரின் பெருந்தொண்டினை — அவர்தம் கல்வித் திறனை — ஆராய்ச்சிப் பாங்கினைப் பல்வேறு வகையாலும் தக்கபல சான்றுகளைத் தேடியளித்துத் திறம்பட ஆசிரியர் நமக்குத் தருகிறார்.

சேக்கிழாரின் பெரும்படைப்பாகிய பெரியபுராணத்தின் வழித் தெரிய வரும் சமய இயல், அரசியல், பொருளியல், சமூகவியல் ஆகியவையும் விரிவாக எடுத்தெழுதப்பட்டுள்ளன. காவிய நோக்கில் இப் பெருங் காவியத்தின் காப்பிய இயல், கவிதை இயல், கலை இயல் ஆகியவையும் நன்கு ஆராயப்பட்டுள்ளன. பெரிய புராணம் தமிழ் மக்களின் வாழ்க் கைப் பெருங்காப்பியம் என்பதை எடுத்துக்காட்டி, எல்லார்க்கும் வழி காட்டும் நல்லற நூலாகவும் இதுவுள்ளது என்பதனையும் நன்கு தெளிவு படுத்தும் திறன் வியப்புத் தருகிறது.

'இதனை இதனான் இவன் முடிக்கும் என்றாய்ந்து
அதனை அவன்கண் விடல்'

என்னும் வள்ளுவர் வாக்கிற்கு இலக்கியமாய்த் தமிழ் இலக்கிய வரலாற்று நூல்களை ஆக்கவல்லவராய் இவர் விளங்குகிறார். இவர்தம் பணிகளி னால் 'தமிழ் வரலாற்று பொற்காலம்' ஒன்று மலர்ந்துகொண்டிருக்கிறது என அறிஞர் மதிப்பிடும் பெருமைக்குரியவராயுள்ளார்.

சமய வரலாற்றோடு இயைபுறத் தோன்றிய பெரிய புராணத்தை வாழ்க்கை அனைத்தும் தழுவிய ஒரு விரிந்த கண்கொண்டு பார்த்து எழுதியுள்ளார். 'சமய வாழ்க்கையை ஆராயும்போது எதையும் அவரவர் கண்கொண்டு பார்த்தாலன்றி நம் கண்கொண்டு பார்த்தால் உண்மை விளங்காது' என (பக். 23) இவ்வாசிரியர் எடுத்துக்காட்டியதற்கு இலக் கியமாய் இவர்தம் ஆராய்ச்சிப் போக்கும் உள்ளது.

பெரிய புராணத்தையும் ஏனைய திருமுறைகளையும் சேக்கிழாரையுங் குறித்துத் தமக்கு முன்வந்த பலதிறப்பட்ட நூல்களையும் இவர் சீர்தூக்கி ஆராய்ந்து, ஒப்பு நோக்கித் தம் துணிவினை நிலைநாட்டுகின்றார். சேக்கிழார், சுந்தரர், நம்பியாண்டார்நம்பி ஆகியோரின் கால ஆராய்ச்சி கள் இந்நூலுள் குறிப்பிட்டுச் சொல்லத்தக்க பகுதிகளாம். ஆராய்ச்சி யாளர் ஒருசிலரின் பொருந்தாக்கூற்றுகளையும் எடுத்துக்காட்டி நாகரிக மாக இவர் மறுக்கின்றார். ஓரிடத்தில் ஓராசிரியரின் கூற்றைக் 'கற்றறிந் தோர் செய்யுங் குறும்பு' என்று குறிப்பிடுதல் காணலாம். பிறநூல் ஒற்றுமை, கவிதை இயல், சொல்லாட்சி என்னும் பகுதிகள் இவர்தம் நுட்ப ஆராய்ச்சிக்குச் சான்று பகர்கின்றன.

வரலாற்றைச் சிக்கறத் தெளிவுபடுத்தி மேலும்மேலும் வாசிக்கத் தூண்டும் இனிய எளிய உரைநடைப் பாங்கினை ஆசிரியர் பயன்படுத்தி யுள்ளார். சந்திப் பிணைப்புகளைப் பெரும்பாலும் தவிர்த்துச் செல்லும் பான்மையும் காலத்திற்கேற்ற தொரு நல்ல மாற்றமே.

நூலுள் பெரும்பான்மை இடங்களில் மேற்கோள் வருமிடம் சரிவரச் சுட்டப்பெறாமை இத்தகு வரலாற்று நூலுக்கு ஒரு பெருங்குறையாகவே தோன்றுகிறது. சிற்சில இடங்களில் நூற்பெயர் மட்டுமே தரப்பட்டிருக் கின்றது; உரிய பாடல் எண், பக்க எண் ஆகியவை சுட்டப்படவில்லை. ஒருசிறு சொற்றொடர்கூட எடுத்தாளப் பெற்ற மேற்கோளிடம் விடுபட வில்லை என்னும் வகையில் விடுபட்ட இடங்களையும் இனிவரும் பதிப்பில் நிரப்புதல் மிகமிக இன்றியமையாதது.

இவ்வாசிரியருக்குக் கிடைத்துள்ள சில அருமையான பழைய நூல்கள் எல்லாருக்கும் அத்தனை எளிதில் கிடைக்க வழியில்லை. நாள் செல்லச் செல்ல அந் நூல்கள் இருந்த இடம் தெரியாமல் மறைந்துவிடவும் கூடும். ஆகவே எல்லா நூல் மேற்கோளிடங்களையும் விடாது தருவதால் கற்பார்க்கு அந் நூல்களை ஆசிரியர் அறிமுகம் செய்து வைத்தவராகவும் ஆகிறார். எனவே, மேற்கோளிடம் சுட்டும் வகையில் இன்னும் தீவிரமான கவனம் வைத்தல் நன்றாம். எல்லா மேற்கோளிடங்களையும் ஒருப்போல அடிக்குறிப்பாகவே அமைத்துத் தருதலும் சிறப்பாக இருக்கும். நூலிறுதியில் தனிச் சேர்க்கையாக வரவேண்டிய புராண அட்டவணை நூலுள் இடையீடாக இரண்டு பங்கங்களுக்கு முன்னர் இடம் பெற்றிருப்பதும் பொருத்தமின்று.

ஆசிரியர் தந்துள்ள பொருளடக்கம் துணைத் தலைப்புகளையும் உள்ளடக்கியிருப்பது சிறப்பாக உள்ளது. மேற்கோள் செய்யுள் முதற்குறிப்புடனேயே வருமிடமும் சுட்டியிருந்தால் இன்னும் சிறப்பாகும். பெரியதொரு வரலாற்று நூலுக்கு இறுதியில் பொருட்குறிப்பு அகராதி ஒன்று இணைக்கப் பெறுவதும் மிகமிக இன்றியமையாததே. இவையெல்லாம் இத்தகு சிறந்த வரலாற்று நூலை மேலும் சிறப்புறச்செய்யும் என்பது திண்ணம்.

சேக்கிழார்: மு. அருணசலம், காந்தி வித்தியாலயம், திருச்சிற்றம்பலம், மாயூரம், *1972*. பக். 244, விலை ரூ. *5-00.*

—மு. சண்முகம் பிள்ளை

## நமது பண்பாடு

முப்பதாண்டுகளாகப் பல இதழ்களில் எழுதியும், வானொலியிலும் பிற இடங்களிலும் பேசியும் உள்ள, 26 கட்டுரைகளின் தொகுப்பு மாலையே ஆசிரியரின் இந்நூல். இந்நூற் கட்டுரைகள், இலக்கியத்தில் தோய்ந்த நெஞ்சத்தால் இலக்கியவுணர்வோடு தீட்டப்பட்ட இலக்கியக் கட்டுரைகளே எனலாம்.

இலக்கிய நயஞ்செறிந்த இக் கட்டுரைகள் ஆசிரியரின் தமிழ் உணர்வின் வெளிப்பாட்டையும், கவியரசர் பாரதியாரிடம் அவர் கொண்ட ஈடுபாட்டையும் ஆங்காங்கே வெளிப்படுத்துகின்றன.

இந்நூல் முழுமையும் ஆங்காங்கே கிடக்கும் பொருளழகுகள் கற்பார் உள்ளத்தைக் கவரும் தன்மை உடையனவாக விளங்குகின்றன. எடுத்துக்காட்டாக,

> ' கவிஞர் ஆவேசம் என்ற உணர்ச்சியை
> நீராக்கிக் காய்ச்சி நீராவியாகவும் செய்து
> விடுகிறார்" (பக். 103)

"கலங்கரை விளக்கமாகிய இலக்கணத்தின்
ஒளிகண்டு கவிதையென்ற மரக்கலங்கள்
செல்லவேண்டிய அறிவுப்பாதை மிக நெடிது.
கொந்தளிக்கும் கடலையும் சீறும் புயலையும்
சமாளிக்க வேண்டியது மரக்கலமே தவிர
விளக்கமல்ல" (பக். 107)

"ஜவஹர்லால் மொழி என்ற பாறையில்
சொல்என்ற உளிகொண்டு செதுக்கும்
சிற்பம் எழிலோவியங்களாய் இன்பநடம்
புரிகின்றன." (பக். 144)

என்பனவற்றைக் கூறலாம். மேலும், இந்நூலாசிரியரின் நடை, எளிமையும் இனிமையும் மிகுந்து விளங்குவதோடு எதுகையும் மோனையும் ஒன்றிக் கவியோட்டம் மிக்கு விளங்குகின்றது.

இதனை,

"அக்குதிரை (மானசீகம்) கரையில்லாத கடல்போலக்
கொந்தளிக்கிறது; குதிக்கிறது: திமிறுகிறது;
குமுறுகிறது. உணர்ச்சி வெள்ளம பொங்கிப்
பரவுகிறது" (பக். 101)

"கற்கோயில்கள் நிரம்பிய செந்தமிழ் நாட்டில்
பொற்கோயிலினும் அழகிய சொற்கோயில்கள்
சமைத்துத் தமிழணங்கின் தாள்பணிந்து
வருகின்றான் புலவன்" (பக். 94)

என்னும் வரிகளால் அறியலாம்.

எனினும், சில குறைபாடுகளும் காணப்படுகின்றன.

"ஆங்கிலப் பேராசிரியர் ஒருவர் 'கிரேக்க
மொழியும் தமிழும் கற்ற எவரும் கிரேக்க
மொழியினைக் காட்டிலும் தமிழே கவிதைக்
கேற்றது என்று கூறத் தயங்க மாட்டார்'
என்று சொல்லியிருக்கிறார்" (பக். 77)

என்று அதனைச் சொல்லியவர் யார் என்பதைக் கூறாது விடுதலும், மேற்கோள் பாடல்கள் எந்த நூலிலிருந்து எடுக்கப்பட்டவை என்பதைச் சுட்டாது விடுதலும் பெரும்போக்காக இக்கட்டுரைகளில் காணப்படுகிறது. மேலும், 'பாரதி தாசன் கவிதைச் செல்வம்' என்னும் கட்டுரையில் அவரின் புரட்சிக் கருத்துகளை மேற்போக்காகக் காட்டியதோடு அமைகின்றார். அதை இன்னும் சற்று ஆழ உணர்த்தியிருக்கலாம்.

சுருங்கக்கூறின், இலக்கியச் சுவைஞர்க்கு இன்பம் நல்குவதாக இந்நூல் அமைந்துள்ளது எனலாம்.

நமது பண்பாடு: க. சி. கமலையா, முதற்பதிப்பு 1973, விற்பனை உரிமை: தமிழ்ப் புத்தகாலயம், சென்னை-5; பக்கங்கள் 180; விலை ரூ. 5-00.

—கு. மோகனராசு

## கவிஞர் கண்ட கலைஞர்

களம் கண்ட காவலரையும், அன்போடு உளமகிழ்ந்து பொருளீந்த வள்ளல்களையும், மற்றோரையும் மனமகிழ்ந்து பாடியவர்கள் நம் பண்டைத் தமிழ்ப் புலவர் பெருமக்கள். அங்ஙனம் போற்றிப் புகழ்ந்து பாடுவது தொன்றுதொட்டு இருந்துவரும் இலக்கிய மரபுமாகும். அத்தகைய மரபினையும், இயல்பினையும் கொண்டு விளங்கும் இன்றைய கவிஞர் பெருமக்கள் தொடுத்துக் கோத்த முல்லைச் சரமே 'கவிஞர் கண்ட கலைஞர்' என்னும் இக்கவிதைத் தொகுப்பு நூல்; களம் வென்று, மக்களின் உளங்கனிந்த அன்பினைப் பெற்ற கலைஞரை—நம் தமிழக முதல்வரை—இந்நூலில் ஐம்பத்தைந்து பாமலர்களால் பாராட்டி மகிழ்ந்துள்ளனர் புலவர்கள்.

கவிஞனுடைய உள்ளத்தை நிழற்படம்போல் படம்பிடித்துக் காட்டும் ஆற்றல் பெற்றது கவிதைக் கலை. அக்கவிதையின் வழி கலைஞரின் உள்ளத்தையும், தெளிவாகப் படம் பிடித்துக்காட்டுகின்றனர். கவிஞர்கள் கலைஞரோடு கொண்ட நட்புறவை வியந்து பாடுகின்றார் கவிஞர் ஆனந்தம்.

'குன்றிலிட்ட விளக்காக இன்று நிற்போர்
குடத்திட்ட விளக்காக இருந்த நாளில்
ஒன்றிவிட்ட எம்முறவு, காலத்தாலே
ஓரணுவும் மழுங்கவில்லை; வியப்பே யாகும்.' (பக். 16)

'கலைஞர்' என்ற தலைப்பில் கவிஞர் முடியரசன் கலைஞர் பிறரோடு பழகும் இயல்பை இலக்கியநயத்தோடு எடுத்துரைப்பதும் குறிப்பிடத்தக்கது.

'பழகுகின்ற முறையினிலே கலையிருக்கும்
பழகியவர் தவறுசெயின் கடிந்தபோதும்
அழகொழுகச் சொலுமுறையில் கலையிருக்கும்
அவ்வை சொலும் நட்போல நின்று சுற்றம்
தழுவுவதில் கலையிருக்கும்.' (பக். 28)

"சிறைக்கஞ்சி நடுங்காத சிங்கக்குட்டி; சிறைக் 'கஞ்சி' சுவை கண்ட தியாகச் செந்தீ" (பக். 49) என்று கலைஞரின் வீரத்தையும்,

தியாகத்தையும் கவியாக்கி மகிழ்கிறார் கவிஞர் மணிமொழி. தலைவர், நண்பர், கலைஞர், தொண்டரின் தோழன், துயர்நீக்கும் துணைவன், அரசியல் ஞானி, மறவன், கவிதை ஊற்று, தமிழ்க் காவிரி, அருமருந்து, உழைக்கும் தேனீ, மொழிக்காவலர் என்ற பல்வேறு பொருள்களில் 'கலைஞரை'க் காண்கின்ற கவிஞர்களின் உணர்ச்சியும் சொல்லாட்சியும் இந்நூலில் சிறந்து விளங்குகின்றன.

'அடக்கமாய் நாட்டை ஆண்ட அண்ணாவின் நிழல்' என்கிறார் உவமைக் கவிஞர் சுரதா. கலைஞரின் எழுத்துக்கு 'இலக்கணம்' வகுக்கும் கவிஞர் தமிழன்பனின் பாடல் கலைஞரின் உணர்ச்சியையும் எடுத்தியம்புகின்றது :

துடிப்புள்ள உன்னெழுத்தோ உயிரெழுத்து!
துரோகிகளின் பொய்யெழுத்தை
அடித்தோட்டும் மெய்யெழுத்து! படிப்பவரின்
உயிர்மெய்யை ஆட்டி வைக்கும்
விடிவெழுத்து! தூயநெறிச் சார்பெழுத்து! (பக். 93)

'நல்ல உணர்ச்சிக்கும், கற்பனைக்கும் ஒப்பில்லாத
உவமைக்கும் கலைஞர் பேச்சே தொட்டில்'

என்கிறார் கவிஞர் முருகுசுந்தரம் (பக். 109)

மேலும் கலைஞரின் அரசியல், தமிழியல், உளவியல், உலகவியல், அறிவியல் முதலான அனைத்துத் துறைகளையும் இன்றைய முன்னணிக் கவிஞர் பலர், அழகுறப்புனைந்து பாடியுள்ளனர். இக்கவிதைத் தொகுப்பு நூல்வழி, கலைஞரின் பண்பு நலன்களைப் படம்பிடித்துக் காட்டும் பணியைச் செய்த தொகுப்பாசிரியர்கள் பெரிதும் பாராட்டுக்குரியவர்கள்.

கவிஞர் கண்ட கலைஞர் : கவிஞர் மணிமொழி, பி. எல். ராஜேந்திரன்; பூங்கொடி பதிப்பகம். சென்னை, 1970, பக். 136, ரூ. 3-00.

—இ. சுந்தரமூர்த்தி

## இராசாராம் மோகன்ராய்

அறியாமையும் மூடநம்பிக்கைகளும் மலிந்த சமுதாயத்தில் அறிஞர்களுக்கு வரவேற்பு இருந்திடாது என்றாலும் அளவற்ற வேலை உண்டு! பகுத்தறிவை வளர்த்துச் சமுதாயத்தைச் சீர்ப்படுத்திடப் பகல் இரவு பாராது உழைப்பு வேண்டும்! எதிர்ப்பும் இன்னலும் இடைவிடாது ஏற்படும் என்றாலும் எல்லாவற்றையும் எதிர்நோக்கியே சென்றிடவேண்டும். ஒரு சமுதாயத்தில் சிந்தனையை உருவாக்கி வளர்திடுவதுதான் ஒப்பற்ற பெரும்பணி! சாதி, சமயம், தாழ்வுயர்வு பற்றிய பிற்போக்குக் கொள்கைகளைத் தகர்த்தெறிந்திடச் சமுதாயச் சிந்தனை தளிர்த்தால்மட்டும் போதாது; கலையாத திறன் வேண்டும்.

இராசா இராம் மோகன்ராய் தலைசிறந்த பகுத்தறிவாளர்; இந்தியாவின் குழப்பம் மிகுந்து இருள் செறிந்திருந்த காலத்தில் தோன்றிய ஈடற்ற சமூகச் சீர்திருத்தர். கடவுளைப் பற்றிய பல்வேறு கருத்துகளையும் மறுத்து, 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்பதை நிலைநாட்டக்கடைசிவரை போராடியவர். உண்மையான சமயம் எது என்பதை உணர்ந்திருந்தார்: சாத்திரங்கள் சடங்குகள் பேரால் தலைவிரித்தாடிய கொடுமைகளைச் சமுதாயத்தில் இருந்து அறவே ஒழித்திட ஆங்கிலேய அரசுடன் போராடிச் சட்டமியற்றச் செய்தவர். உடன்கட்டை ஏறுதலை ஒழித்தவர் இராய் அல்லவா? கல்விச் சீர்திருத்தத்தை நடைமுறைப் படுத்திடக் கடுமையாகப் பாடுபட்டவர்; கண்டனக் கணைகளைப் பழமைப் பித்தரிடமிருந்து தாங்கிக் கொண்டவர்.

இந்த அளவிற்கே இராயைப் பற்றிப் பொதுவாக அறிவர். வங்க மொழிக்கு இலக்கணம் வரைந்தவர், பாரசீக, அரபிய மொழிகளில் புலமை பெற்றவர். மூன்று மொழிகளில் ஏடுநடத்திய இதழாசிரியர் ஐரோப்பிய நாடுகளின் வரவேற்பை அடைந்தவர் முதலான பல்வேறு அறிமுகங்களைத் தாங்கி எழுதப் பெற்றது இந்நூல். அளவிற் சிறியதெனினும் ஆழம் கொண்டது. அரிய ஆராய்ச்சி சாலையைப் போல் அமைந்துள்ளது. இராயின் கருத்துக்களை அவருடைய சொற்களிலே இடையிடையே அமைத்து எழுதப்பட்டுள்ள முறை கருத்துக்களுக்கு அரண் செய்து சிறக்கின்றது. மொழி பெயர்ப்பு எனத் தோன்ருத வகையில் தமிழாக்கம் செய்துள்ளார் திரு. க. த. திருநாவுக்கரசு. மூல நூல் போலத் தோன்றச் செய்திருக்கும் அவரது அரிய திறனைப் பாராட்டவே வேண்டும். சில செய்திகள் மீண்டும் மீண்டும் கூறப்படுகின்றன. மூல நூலாசிரியர் தவரு மொழிபெயர்ப்பாசிரியர் தவரு என்பது விளங்கவில்லை.

**இராசா இராம் மோகன் இராய்:** எழுதியவர்: சௌமியேந்திர நாத தாகூர்; தமிழாக்கம்: க. த. திருநாவுக்கரசு; வெளியீடு: சாகித்திய அக்காதமி; புது டெல்லி; பக்கம்: 86; விலை: ரூ. 2-50.

**—மா. செல்வராசன், எம். ஏ.**

## சுவர்க்க நீக்கம்

வேதாகமத்தின் தொடக்க நூலான ஆதியாகமம் 3-ம் அதிகாரத்தில் சொல்லப்படும் முதல் மாந்தரின் வீழ்ச்சியை ஆதாரமாகக் கொண்டு ஆங்கிலக் கவிஞன் ஜான் மில்டன் பதினேழாம் நூற்ருண்டின் பிற்பகுதியில் Paradise Lost என்ற பெருங்காப்பியத்தைப் பன்னிரு காண்டங்களில் இயற்றி உலகப் பெருங் கவிஞரானுர். இதே காலத்தில் Paradise Regained என்னும் காப்பியத்தையும் இயற்றினுர். பின்னது முன்னதின் ஓர் இயல்பான தொடர்ச்சியே. இலக்கிய வானில் பெருஞ் சிறப்பிற்குரியதாய் விளங்குவது முதற் காப்பியமே.

Paradise Lost என்ற காப்பியத்தினைத் தழுவி அருள்திரு. ஏ. வேதாசான் என்பவர் விருத்தப்பாவில் 'ஆதி நந்தவனப் பிரளயம்' என்ற தலைப்பில் காப்பியம் செய்துள்ளார். இதன் இரண்டாம் பதிப்பு 1868-ல் வெளிவந்தது. இவர் 'Paradise Regained' என்பதையும் தழுவி 'ஆதி நந்தவனப் பிரளய மீட்சி' என்ற தலைப்பில் காப்பியம் செய்துள்ளாா. அருள்திரு. இ. சார்ஜென்ட் என்பவர் 1880-க்கும் 1882க்கும் இடையில் Paradise Lost-ன் ஏழு காண்டங்களை மொழி பெயர்த்துள்ளார். 1895-ல் திரு. வெ. ப. சுப்பிரமணிய முதலியார் இதனுடைய முதல் காண்டத்தை அழகிய விருத்தப்பாவில் ஆக்கியுள்ளார். காப்பியத் தலைப்பை 'சுவர்க்க நீக்கம்' என்று மொழியாக்கம் செய்துள்ளார்.

அண்மையில் திரு. பி. பச்சையப்பன் அவாகள் இதே தலைப்பில் இந்நூலின் ஒன்பதாவது காண்டத்தை ஆசிரியப்பாவில் மொழியாக்கம் செய்துள்ளார்கள். காப்பியப்பொருளின் உச்சநிலை, ஈவோளும் ஆதமனும் சாத்தானுடைய வஞ்சகத் திட்டத்திற்குப் பிணைப்பட்டு, விலக்கப்பட்ட கனியை உண்டு, தங்கள் தூய முதல் நிலையிலிருந்து விழுதலாகும். ஒன்பதாம் காண்டத்தில் சொல்லப்படும் செய்தி இதுவே. இக் காண்டத்தைக் கற்றாலே முழுக் காப்பியத்தையும் கற்றதாகும் என்பது திறனாய்வாளர் கருத்து.

இருமொழிப் புலமை நிறைந்தவரும் மொழி பெயர்ப்புத் துறையில் அனுபவமிக்கவருமான திரு. பி. பச்சையப்பன் அவர்கள் எல்லார்க்கும் எளிதில் விளங்கும் ஆசிரியப்பாவில், இழுமென் மொழியில் தங்குதடையின்றிச் செம்மையாகச் செல்லும் நடையில், படிப்போர்க்கு இது மொழி பெயர்ப்பு என்ற உணர்வு தோன்றாதவாறு இதனைத் தமிழ் மொழியில் பாடியுள்ளார். ஆசிரியருடைய இத்தமிழ்த் தொண்டு பெரிதும் போற்றி வரவேற்கத்தக்கது. சுவர்க்க நீக்கத்தின் ஏனைய காண்டங்களையும் இவ்வாறே தமிழில் செய்வாராயின் அது தமிழ் இலக்கியத்திற்குச் செய்யும் பெருந் தொண்டாகும்.

**சுவர்க்க நீக்கம்:** பி. பச்சையப்பன், தமிழ் நூல் நிலையம், வில்வாரணி, N A., 1970; விலை ரூ. 5.00, விற்பனை உரிமை: பாரி நிலையம், சென்னை-1.

**—வி. ஞானசிகாமணி**

## நடந்தாய்; வாழி, காவேரி!

ஆசிரியர்கள்: சிட்டி, தி. ஜானகிராமன்; படங்கள்—ஓவியங்கள்: கலாசாகரம் இராசகோபால்; வெளியீடு: வாசகர் வட்டம்; ஆண்டு: 1971; விலை: ரூபாய் 10.00.

நடந்தாய்; வாழி, காவேரி!

(1)

தமிழும் தமிழரும் பெருமைப்படத்தக்க பயண இலக்கியம் 'நடந்தாய் ; வாழி, காவேரி!' ஆசிரியர்கள் சிட்டியும் தி. ஜானகிராமனும் தமிழ்நாட்டின் தலைசிறந்த—கலை சிறந்த—உயிராகிறுய (ஜீவ நதி) காவேரி ('காவிரி'யும் கூட—ஏன் இந்தப் பெயர் வேறுபாடு என்று ஆசிரியர்கள் ஆராய்ந்துள்ளனரோ ?—சரிபார்க்கப் பொருளடைவும் (Index) இல்லையே!) எங்கே—எவ்வாறு பிறந்து சிறந்து இறந்து அல்லது மறைந்து விடுகிறது என்று ஆற்றுவழியே பயணம் செய்து கண்டன, கேட்டன, கற்றன, கருதியன, கற்பனை செய்தன; களித்தன, பேசின, ஏசின, பாடின, ஆடின, வாடின, ஆய்ந்தன, பாய்ந்தன, தோய்ந்தன, சாய்ந்தன, தொட்டன, பட்டன முதலான எல்லாம் பற்றியும் படம் படமாகவும் பாடம் பாடமாகவும் வரையப்பட்ட உரை நடை ஓவியமே இந் நூல்.

(2)

ஆடிப் பதினெட்டு காவேரிக்கு அரும்புகழ். 'நடந்தாய் ; வாழி, காவேரி!'யும் (1) ஆவேசம் (2) அமைதி (3) அடக்கம் (4) அழகு (5) அணிநடை (6) ஆடுதாண்டும் (7) புதைதரும் புனல் (8) பொன்னி வளம் (9) புதுப்புகார் (10) கொள்ளிடம் தாண்டி (11) இசைவெள்ளம் (12) கழனி நாடு (13) ஆறிரண்டும்...... (14) அகண்டம் (15) காணிக்கை (16) நிறைவு (17) ஆலாபனை (18) பல்லவி ஆகிய 18 இயல்களாய் இயங்குகிறது.

1. சென்னை வரும் காவேரி

2. காவேரி நீர்ப்பங்கீடு ஆகிய இரு சிறு குறிப்பு இணைப்புகளும் உள்ளன.

பதினெட்டு இயல்களும், இரு சிறு குறிப்பு இணைப்புகளும் சேர்ந்து 291 பக்கங்கள். இந்நூல் எழுதப் பயன்பட்ட 3 தமிழ் நூல்களும் 14 ஆங்கில நூல்களும் ஒரு பட்டியலில் தரப்பட்டுள்ளன. இப்பட்டியலில் 'காவேரி' இதழ், திரு. கோ. வில்வபதியின் 'காவேரி' என்ற நூல் பற்றியும் History of the Cauvery—Mettur Project—C.Y. Barbar (1940) Madras Govt. Publication என்ற மேட்டூர் அணை பற்றிய மிகச் சிறந்த செய்திக் கருவூலம் பற்றியும் எக்குறிப்பும் (நூலுக்குள்ளும்) நம் கண்ணில் படாமல் வருத்தம் தந்தன.

Report on the Excavations in the lower Kavery valley (Tirukkampuliyur and Alagari valley) Dr. T.V. Mahalingam—Madras University என்ற புத்தகம் நூற்பட்டியலில் இல்லாமையும் இன்னுமையே.

தமிழ்நாட்டின் சில ஆறுகள் பற்றிப் பேராசிரியர் டாக்டர் மா. இராசமாணிக்கனுர் நூல்கள் எழுதியிருப்பினும் அவை ஆராய்ச்சிக் கட்டுரை நூல்களே. 'நடந்தாய் ; வாழி, காவேரி!' ஆராய்ச்சி ஆர்வமும் கரைபுரண்டு ஓடும் பயண இலக்கியம். ஆம். பயணக் குறிப்புகளையும் இலக்கியமாக்கக் கூடும் என்பதற்குச் சிறந்த எடுத்துக்காட்டு இந் நூல். காரணம் ஓர் இலக்கியத்திற்குரிய எல்லாச் சுவைகளும் இந் நூலுள் உள்ளன.

(3)

சிட்டி—ஜானகிராமன் காவேரிப் படைப்பைக் கலைவளம் மிக்கதாய்ச் செய்திருப்பது அவர்கள் எழுத்து வளம் மட்டும் இல்லை ; கலாசாகரம் இராசகோபாலின் பல்வகைப் படங்களும் என்பது கண்கூடு. புத்தகத்தின் உறைமுகம் தலைக் காவேரி (காவேரியின் பிறப்பிடம்) உறைமுதுகு காவிரி கடலுடன் கலக்கும் காட்சி. இவையிரண்டும் ஒளிப் படங்கள்.

முன்—பின் உள்ளட்டை: 1378 கி.மீ. உயரத்தில் ஜெமினி 11 விண்வெளிக் கப்பலிலிருந்து எடுக்கப்பட்ட ஒளிப்படம்.

இவ்வழகிய இந்தியப் படத்தில் காவேரியின் போக்கை ஓவியர் பொருத்தமாகப் பொருத்தியிருப்பது பார்த்துப் பாராட்டி மகிழத்தக்கது.

'நடந்தாய்; வாழி, காவேரி!' புத்தகத்தில் உள்ள 18 இயலின் தொடக்கத்திலும் காவேரியின் போக்கைக் காட்டும் ஒரு வரைபடம் பொதுவாகவும் அவ்வவ் வியலுக்கு ஏற்ற 18 சிறு படங்கள் மூலைப் படங்களாகவும் இருப்பது மூளைக்கும் மனத்துக்கும் உவகை ஊட்டும் உத்திகளாகும்.

1. பாயம் பள்ளி அகழ் ஆராய்ச்சி.
2. சிவசமுத்திரம்: பீர்கைப் சமாதி.
3. சிவசமுத்திரம்: ஸோமேஸ்வரர் ஆலயம்
4. மாதவமந்திரி அணைக்கட்டு.
5. கலைக்காடு: கீர்த்தி நாராயணர் கோயில்
6. சோமநாதபுரம்: சென்னகேசவர் ஆலயம்.
7. பிருந்தாவனம்: தோட்டத்திற்கப்பால் காவேரி.
8. சித்தாபூர்: காவேரிப் பாலம்
9. தலைக் காவேரி: அகத்தியர் ஆலயம்
10. தலைக் காவேரி: ஊற்றுநீர்த் தடாகம்
11. காவேரி பாயும் மூன்றுவது தொட்டி
12. சரிவில் புதர்களுக்கிடையே அந்தர் வாஹினி.
13. பாக மண்டலம்: வந்து கூடும் இடம்.
14. பெத்திரி: பாலம்
15. குடகு திருமண கோஷ்டி
16. குடகு மணமகன்

17. பிரேசேர் பேட்டை : பாலம்
18. பட்டுப்பூச்சிப் பண்ணை
19. அர்க்காவது: பண்ணை முதலாளியுடன் ராஜகோபால், சிட்டி
20. அர்க்காவது பண்ணை: லம்பாடி ஊழியர்கள்
21. மேகதாட்: மற்ெறாரு தோற்றம்
22. லம்பாடி மக்கள்
23. அர்க்காவது சங்கமம்
24. பெண்ணுகரம்: சந்தை
25. ஹெகனெக்கல்: நீர்வீழ்ச்சி
26. ராமநாதபுரம்: நதிக்கரைக் கோயில்
27. புகார்க்கரை கண்ணகி
28. மண்ணில் கிடக்கும் சிலை
29. காவேரி கடலுடன் கலக்கும் காட்சி
30. காவேரி சங்கமத்திற்கு முன் உள்ள கடைசிப் பாலம்
31. புகார்க் கடற்கரையில் மீனவர் குடிசை
32. ராஜகோபால் படம் வரைகிறார்
33. கடலுடன் கலக்க விரையும் காவேரி
34. கீழணை: யானைச் சிலை
35. கங்கை கொண்ட சோழபுரம்: கோயில் சிற்ப வரிசை
36. அகண்ட காவேரி: திருப்பராய்த் துறைக்கருகில்
37. அகண்ட காவேரி: மற்றொரு தோற்றம்
38. மயூரம்: துலா கட்டம்
39. திருச்சி மலைக்கோட்டையிலிருந்து காவேரியும் கொள்ளிடமும்
40. கருப்பஞ் சாற்றிலிருந்து வெல்லம் செய்தல்
41. கல்லணை: ஒரு தோற்றம்
42. கல்லணை: மற்றொரு தோற்றம்
43. திருவரங்கம் கோயில் (நூலில் விளக்கக் குறிப்பு இல்லை)
44. தொழில் பட்டறை
45. நெரூர்: சதாசிவப் பிரமேந்திரர் சமாதி
46. புகளூர்ப் பாலத்திலிருந்து
47. பவானி சங்கமம்
48. ஜமுக்காளம் நெசவுகூடம்
49. ஜேடர்பாளையம் ரெகுலேட்டர்
50. மாலைப் பொழுதில் காவேரி
51. காவேரியின் ஒரு தோற்றம் (நூலில் விளக்கக் குறிப்பு இல்லை)

இந்த 51 ஒளிப்படங்களிலும் உயிர்ப்படங்களாய் உள்ள ஓவியப் படங்கள் 41. அவை வருமாறு:

1. பார்சுக்கி, ககனசுக்கு நீர்விழ்ச்சி (விளக்கக் குறிப்பு இல்லை)
2. காவிரி (விளக்கக் குறிப்பு இல்லை)
3 ஸ்ரீரங்கப்பட்டணம் : கோட்டைவாயில்

4. தூரிய தௌலத்பாக்
5. ..... .........?
6. மொக்கார செல்லும் வழி : மூங்கில் புதர்
7. சித்தாபூர் : காவிரிப் பாலம்
8. ...............?
9 நாபோக்லுக்கு அருகில்
10. குடகு நாட்டுப் பெண்
11. ஸ்ரீ ரங்கலா
12 ராமநாதபுரம் : காவேரி ஸ்நான கட்டம்
13. ஜங்கமகட்டே : கட்டே புர
14. ஹன்னடு சக்ர
15. ...............?
16. .............. ?
17. அர்க்காவதி சங்கமம்
18. ஹெகனெக்கல்
19. ...............?
20. ...............?
21. கடற்கரை : பழைய கோயில்
22 புகார் : கடற்கரை
23. புகார்-கடற்கரை : மற்ளுெரு தோற்றம்
24. .............. ?
25. முதர் தேம்பழம் பகைமுட்டினும் முட்டும்
26. கல்லணை முகப்பு
27. உழவு?
28. .............. ?
29. ..............?
30. மலைக்கோட்டை
31. தொழிலாளர் படம்
32. ...... .........?
33 பெரிய அலை புரள்வது போல்
34. ............. ?
35. ..............?
36. மேட்டூர் அணையும் தேக்சமும்
37. ..................?
38. மேலணை
39. ..............?
40. ..............?
41. ....... .........?

இப்படங்கள் பற்றிய அட்டவணை ஏதும் நூலில் இல்லாததும் ஒளிப்படங்களுள் சிலவற்றிற்கும் ஓவியப்படங்களுள் பலவற்றிற்கும் அவற்றிற்கு அடியிலேயே குறிப்புகள் இல்லாமையும் வருந்தத்தக்கது.

இனி நீண்ட வரைபடம் ஒன்று காவேரி நடக்கும் வழியைக் காட்டு வதாய் உள்ளது. இப்படமும் மிகச் சாதாரணம். இயற்கை அமைப்பு களையும். மாவட்டப் பிரிவுகளையும் இணைத்து இப்படத்தில் அமைத்து வண்ணப்படுத்தியிருந்தால் இப்படம் இன்னும் அழகும் பயனும் உடைய தாய் இருந்திருக்கும்.

(4)

ஒட்டுமொத்தமாகக் கூறுமிடத்து 'நடந்தாய் ; வாழி, காவேரி!' காவேரி ஆற்றை மையமாகக் கொண்டு எழுதப்பட்ட மொழி—இலக்கிய —கலை — சமய — புவியியல்—நிலவியல் — மானிடவியல் — அரசியல் — பொருளியல் — சமூகவியல் — கல்வெட்டியல் — தொல் பொருளியல் — வேளாண்மையியல்—பாசனவியல் — இடப்பெயரியல் உள்ளிட்ட பெய ரியல் — தொழிலியல் குறிப்புகளைக் கொண்டது. இக் குறிப்புகள் வெறுமையாகப் பொறிக்கப்படாமல் சுவைபுறச் சமைக்கப்பட்டிருப்பதே இந்நூலின் சிறப்பு.

(5)

ஒரு முறையே படித்த நிலையில் இந்நூலில் என் கண்ணையும் கருத்தையும் கவர்ந்த சில சொற்கள், சொற்றொடர்கள், சொற்றொடர் நிலைகள் (பக்க வரிசைப்படி) வருமாறு :

அ. அ. ஒட்டுநர் (64, 65, 79, 247)
ஆ. ஆய்ச்சல் (97)
இ. தொளைந்தோம் (112)
ஈ. குஞ்சுக்கால் (127)
உ. செய்நேர்த்தி (128)
ஊ. உணர்க்கை (129)
எ. மதாளிப்பு (131)

ஆ. 1. பொய்யா இளமை (3)
2. காற்றுப் போக்கிகள் (20)
3. நடை விளைவுகள் (65)
4. இருள் பிரியாத நேரம் (72)
5. மலைப்பாதை கொக்கிகள் (79)
6. பாறை மடு (86)
7. பாறைப் பந்து (89)
8. கொம்பில் தெரியும் சீமை (93)
9. அழும் நிலவு (97)
10. கடற்கரைத் தமிழ் (129)
11. மாய்ந்து மாய்ந்து எழுதல் (198)
12. ஒக்கப் பண்ணல் (203)

13. செய் தோட்டங்கள் (212)
14. நருவிசு (212)
15. வெயிலின் வெள்ளை (260)
16. கிண்ணப் பரிசல்கள் (266)
17. வரலாற்றுத் தொட்டில்கள் (267)
18. தொலைகாணி (269)
19. நாற்காலி யாத்திரை (269)
20. டம்பக் கவிதை (278)

இ. (1) காவேரிக்கு பல உருவங்கள், பல நிலைகள் உண்டு. அதைக் காணும் நிலைகளும் பல—மொண்டு குடிப்பதிலிருந்து கரையிலமர்ந்து தவமியற்றி மனம் இழப்பது வரை. (முன்னுரை).

(2) சினந்தெழுந்து சீறிவரும் மக்களின் புரட்சிப் படைபோல் பாய்ந்து வரும் இந்த நீர்வீழ்ச்சி, காவேரியின் அடக்க முடியாத சக்தியை எடுத்துக்காட்டும் முறையில் அமைந்திருக்கிறது. (9)

(3) மொழி, பிராந்தியம் என்ற பெயர்களில் நம் நாட்டை இன்னும் சின்னபின்னப் படுத்திக் கொண்டிருக்கும் அறிவிலிகளைக் கண்டு, இந்த இந்திய உணர்வு ஊமை அழுகை போல் எங்களுக்கு ஒலித்தது. ஆற்று நீரும் மண்ணும், கன்னடம், மராட்டி, தெலுங்கு என்ற ஏதேதோ மொழி பேசுவது போலவும்,அந்தந்த மொழிக்காரர்களின் வயிற்றுக்குள்ளேயே புகுந்து கிடக்க வேண்டும் என்பது போலவும் மனதில் குட்டிச் சுவர்களை எழுப்பி வேராறுக்கும் அறிவிலிகளைக் கண்டு இந்தக் கிராம எழில் அழுகிறது. (69)

(4) இந்தியாவின் ஒருமையைக் காண, பல மாநிலத்து மக்கள் சேர்ந்து வாழும் பிலாய், டில்லி போன்ற நகரங்களுக்குப் போகவேண்டும். ஆனால் இந்தியாவின் பல்வேறு மூலைகளில் உள்ள கிராமங்களையும் பாருங்கள். அடிப்படையான இந்தியத்தன்மை இழையோடுவது தெரியும் (69)

(தெளிவின்மை காரணமாக நூலாசிரியர்களின் கருத்து முரண்பாடு ஒரே பக்கத்தில் அடுத்தடுத்துக் காணப்படுகிறது:'அறிவிலி'என்று ஏசும் நம்மையும் நம்மினும் அறிவுடையவர்கள் அவ்வாறு ஏசலாம் என்பதை நல்ல நூலாசிரியர்களும் சில நேரங்களில் மறந்து விடுவது காவேரியும் சிலபோது சாக்கடையாவது போலப் போலும்!)

(5) அவர்களும் பாட்டாளிகளை வைத்துக்கொண்டுதான் இதைச் செய்திருப்பார்கள், ஆனால் நடுவில் ஒரு காண்டிராக்டர் வயிற்றில் ஒட்டைக் குடத்தில் நீர் நிரப்புவதைப் போல, பாதி காசு அழிந்திருக்காது (71).

(6) மணம் பிறந்த இடத்தை மட்டும் சுருக்கென்று பிடிக்க முடியவில்லை. பொது மக்களின் அபிப்பிராயம் போல, இருக்கிற இடம் தெரியாமல், ஆனால் பரவியும் கொண்டிருந்தது அது (87).

(7) பாறைகளில் அரிக்கப்பட்ட துவாரங்களின் விந்தை வடிவங்களையும் பாறைகள் நீண்டும் குறுகியும் எதிர்பாராத உருவங்களில் வழிந்து கிடந்த விசித்திரங்களையும் பார்க்கும்பொழுது பிகாஸோ, மடிஸ்ஸே போன்ற நவீனக் கலைஞர்களுக்கெல்லாம் இந்த புவியியல் அதிசயங்கள்தான் ஆதி குருநாதர்களாக இருந்திருக்குமோ என நினைக்க வேண்டியிருந்தது. நவீனக் கலைஞர்களுக்கு இத்தகைய கோணங்களைக் கற்பனை செய்ய முடியாது. ஆயிரக்கணக்கான ஆண்டு காலமாக நீரும் காற்றும் தவம் செய்து செதுக்கிய கோணங்கள் இவை (89).

(மிகச் சிறந்த கருத்து.)

(8) நண்பர் ராஜகோபாலனுக்கு யாரைக் கண்டாலும் அவருடைய வாழ்க்கை விவரங்களைப் பற்றி பேட்டி காணும் வழக்கம் (112).

(படைப்பாளர் பற்றிய சிறந்த கருத்து.)

(9) அதுதான் அந்த நகரத்திற்கு நீர்வளம் கொடுக்காத திருமணிமுத்தாறு அல்லது சேலம் நதி எனப் பிரசித்தி பெற்ற நகர சாக்கடை. பெயரின் அழகுக்கும் நதியின் தோற்றத்திற்கும் மாடர்ன் ஆர்ட் மூலம் தான் சம்பந்தம் ஏற்படுத்த முடியும்.

(முற்றிலும் உடன்பாடு கொள்ள முடியாத கடுமையான கருத்து.)

(10) எல்லாவற்றுக்கும் அடிப்படை இயற்கை வளம் தான். அது பொய்த்தாலோ பற்றாமல் போனாலோ, அளவுக்கு மீறிய மக்கள் அதைச் சுரண்டினாலோ, வாழ்வில் கலகம் புகுந்து விடுகிறது. தேர்தல் இரைச்சல், கரகரவென்று மாவுமிஷின் குரலில் பேசும் அரசியல் வாதிகள், சுவர்க்கத்தை நாளைக்கே கொண்டு வந்து விடுகிற பொய் வாக்குகள் நினைவு இந்தக் காலத்திற்கு வந்துவிட்டது (133).

(11) அம்மனுக்கு வடுவகிற் கண்ணம்மை என்று அழகாகப் பெயர் சூட்டியிருக்கிறார்கள். காவிரிப் பகுதியின் பல கோவில்களில் இனிய தமிழில் பெயர் சூட்டப்பட்ட பல தெய்வ சன்னிதானங்கள் உண்டு. உதாரணத்திற்கு இந்தப் பெயர்களைக் கேளுங்கள்......(134).

(இவ்வளவு தமிழார்வம் உடைய நூலாசிரியர்கள் — ஓரிடம் தவறாமல் 'ஓட்டுநர்' என்று ஓட்டுபவர்கள்—சில இடங்களில் தேவை

யில்லா வடமொழிச் சொற்களைப் பயன்படுத்துவது இவர்கள் தமிழ்ப் பற்றை அரிக்கும் வேர்ப்புழு ஒன்று உள்ளதை விளக்கும் போலும்!)

(12) காவேரி நீரைப் பாதுகாத்து நாட்டுக்குச் செழிப்பு உண்டாக்கிய அந்தச் சோழமேதையின் பெயர் 'கரிகாலன்' என்று மட்டுமல்ல, 'கரை காவலன்' என்று கூட இருந்திருக்கலாம் என்ற புதிய சூத்திரமொன்றை நண்பர் தோற்றுவித்தார்.

(13) கரிகாலன் மாதிரி தட்டி அடிக்கிறவன் இல்லை. நம் நாட்டு தரிசுகளும் மனித வர்க்கமும் தண்ணீர்! தண்ணீர்! என்று தவிக்கிறது. தண்ணீரைக் கொண்டுவா, கொடுக்கிறேன் என்று கரம்பு மண்ணெல்லாம் காத்துக் கொண்டு கிடக்கிறது. கங்கையும், பிரம்மபுத்திராவும், கோதாவரியும், கிருஷ்ணாவும் முக்கால் நீரைக் கடலில் கொட்டுவதைத் தடுத்து இணைத்துப் போடாமல் வல்லடியும் வாய் வழக்கும் செய்துகொண்டு மக்கள் வயிற்றிலடிக்கும் ஜனநாயகனைத் தட்டி அடிக்க ஒரு கரிகாலன் இல்லையே என்று எரிகிறது (198).

(மிகச் சிறந்த கருத்து.)

(14) நினைவு நின்றால் காலமே நின்றது போன்ற பிரமை (199)

(பிரமை என்ன! உண்மைதான்! மிகச் சிறந்த எண்ணம்! ஆம் எண்ணம் பற்றிய எண்ணம்)

(15) ஏழ்மையின் எல்லைக் கோட்டில் நின்று தள்ளாடும் மக்கள் நிறைந்த கிராமம். இந்த மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தப் போவதாகச் சொல்லிக் கொண்டுதான் அரசியல்வாதிகள் பதவிக்குப் பாடுபட்டு, வீடுகட்டி, சொத்து சேர்த்துத் தங்கள் குழந்தைகளை வெளிநாட்டுக் கல்வி பயில அனுப்பி உழைக்கிறார்கள் (264).

(6)

நூலுள் அரிய செய்திகள் பல காணப்படுகின்றன. அவை என்றும் மறவாது இருக்கத் தக்கன—பல்வேறு நலன்கள் கருதி, சில எடுத்துக் காட்டுகள்:

(1) 1818ஆம் ஆண்டு இந்தப் பாலத்தை மைசூர் சமஸ்தான அதிகாரி திரு.ராமஸ்வாமி முதலியார் பழுது பார்த்துத் திருத்தியமைத்தார் என்று தெரிகிறது (7)

(2) அந்த ஊரில் சென்ற நூற்றாண்டின் பிற்பகுதியில் இயங்கி வந்த ஆலையில் உற்பத்தியான சர்க்கரைதான் 50 ஆண்டுகளுக்கு முன் 'அஷ்டகிராம ஜீனி' என்று தமிழ் நாட்டில் புகழடைந்திருக்கிறது (116).

(3) பிரெஞ்சுப் படைகள் திருவானைக்காவிலுள்ள ஜம்புகேசுவரர் ஆலயத்தில் தான் பிரிட்டிஷ் தளபதிக்குச் சரணடைந்தன. அதற்குப் பதினாறு ஆண்டுகளுக்கு முன் மலைக்கோட்டைக்கு அருகே உள்ள தாளவாய் மண்டபத்தில் ராணி மீனாக்ஷிக்கும் பொய் வாக்குறுதி அளித்து மோசம் செய்த சந்தாசாகிப் அதே மண்டபத்தில் கொல்லப்பட்டதைப் பற்றியும் நண்பர் குறிப்பிட்டார்.

பதினாறும் நூற்றாண்டு ஆரம்பத்தில் விசுவநாத நாயக்கனால் கொத்தளங்கள் அமைக்கப்பட்டு வலுப்படுத்தப்பட்ட மலைக்கோட்டை இருநூறு ஆண்டுக்காலம் பல போர்களுக்குக் கேந்திரமாக விளங்கிற்று. இறுதியில் பிரிட்டிஷ் படைகளுக்கு வெற்றி தேடிக் கொடுத்ததற்குச்சான்றாக மேஜர் லாரன்ஸ்நினைவுக்காக லண்டனில் West Minister கோயிலில்பொறிக்கப் பட்டிருக்கும் சின்னத்தில் திருச்சி மலைக்கோட்டையின் படம் வரையப் பட்டிருக்கிறது (200).

(7)

நூலுள் இறுதியில் 'பிழை—திருத்தம் ஒன்று ஒரு பக்கத்திற்கு உள்ளது. இதில் இடம் பெறாத பிழைகளும் இருக்கின்றன! எழுத்துப் பிழைகளோடு இலக்கணப் பிழைகளும் கருத்துப் பிழைகளும் உள்ளன. இங்கே இன்றியமையாமல் குறிப்பிடத்தக்கது, Human Geography போன்ற தொடரை ஆங்கிலத்திலேயே அமைக்கலாம் அல்லது தமிழாக்கம் செய்து தரலாம். இரண்டும் இல்லாமல் தமிழ் வரிவடிவில் ஆங்கிலத் தொடர்களை அதுவும் இதுபோன்ற நூல்களில் தருவது அடாது.

(8)

என்ன—எத்தனை குறை இருந்தாலும் ஆற்றையும் அதன் பேற்றையும் காட்டும் இது போன்ற 'வாசகர் வட்ட' நூல் முயற்சிகளால் தமிழக ஆறுகள் ஒவ்வொன்றும் தனிப்புகழ் பெறுவதாக!

—ந. சஞ்சீவி

## Preface in the Kural

This book "**Preface in the Kural**" is a comparative study of the first forty couplets of the *Kuṛaḷ* with English renderings of G. U. Pope, F. W. Ellis, W. H. Drew and C. J. Beschi and their commentaries and also the commentaries of Parimelalakar, Manakkudavar, Paritiyar, and Kalingar.

## PREFACE IN THE KUṚAḶ

The first four chapters in the Tirukkural "In Praise of God," "Excellence of Rain," "The Greatness of those who renounced" and "Emphasising the Efficacy of virtue" are considered to be the Prefece—Payiram—to Tirukkural. The author has made a critical and comparative study about these chapters with the help of all other commentaries and research sources available.

The English renderings of Tamil commentaries of earlier commentators like Parimelalakar, Manakkudavar and Kalingar and, commentaries of twentieth century writers like Thiru-vi-ka are also given. It is also to be noted that a considerable portion of translation from Tamil into English has been done by the author himself in a lucid manner.

In the first introductory chapter under the title "The Book of Universal Wisdom," the author points out the greatness of the *Kuṛaḷ*, thus:

> "Truth and Love are the two inevitable guidelights that shine throughout in the *Kuṛaḷ* and they are the two reliable companions to man on earth for leading a life of virtue beneficial to him as well as to the rest of Society. Whoever has come in contact with the *Kuṛaḷ*, he or she has been benefited beyond measure. There has been a distinct gain to mankind by the coming of the *Kuṛaḷ* into the world and countless pecple have drunk deep from it and seen in it the light that has made the sun, the moon and the stars paler, as here is the light that has lighted the horizon of the heart and helped man to shape his life and destiny in accordance with its teachings." (page. 20)

The succeeding four chapters deal with the first four chapters of the *Kuṛaḷ*. In order to explain all these treatises the author has given a large number of quotations from both Tamil and world literature.

The author asserts that there is not much of common ground between Tiruvalluvar and Kautilya and that even in the basic ideas, the two—the *Kuṛaḷ* and Arthasastra—do not meet. He elaborately describes the reasons for this view (Page 13).

## PREFACE IN THE KUṚAḶ

The appendices given at the end of the book (1) Transliteration of the couplets with word for word meanings and literal meanings for the couplets in Engish and (2) English meanings for Tamil words used in the couplets will be very useful to the foreign scholars who intend to study the Tirukkural.

On the whole this painstaking study has further enhanced the importance of the first four chapters of the *Kuṛaḷ*. The translation of the *Kuṛaḷ* and its thought into English are commendable and the author deserves our *Kudos* for his fine effort and useful contribution.

Preface in the Kuṛaḷ:

K. C. Kamaliah, M. Seshachalam & Co, Madras, 1973, Price Rs. 20. P. xxiii+192.

E. Sundaramoorthy.

**In Commemoration of the IV World Tamil Conference Held in Jaffna, January, 1974**

# THOUGHTS ON LANKOLOGY

by

**Dr N. SANJEEVI**

Translation

by

**V. JAYADEVAN**

## I. General

1.1 This is a garland of my thoughts conceived then and there, as a student of Tamilology, on Lanka which is like a pearl in Indian Ocean.

2.1 A great encyclopaedia on various aspects of Lanka is a desideratum.

2.2 Books that elucidate different aspects of Lanka are also essential.

## II. Lankology : Nature

3.1 Research study may be carried on under the following heads :—

3 2 Geology of Lanka

3.3 Geography of Lanka

3 4 Flora of Lanka

3 5 Fauna of Lanka

**III. Lankology: Race**

4.1 Races in Lanka
4.2 Tamils in Lanka
4.3 Sinhalese in Lanka
4.4 Other races in Lanka

**IV. Lankology: Language**

5.1 Tamil language in Lanka
5.1.1 Tamil as official and court language in Lanka
5.1.2 Written Tamil in Lanka
5.1.3 Spoken Tamil in Lanka
5.1.4 Dialects of the spoken Tamil in Lanka
5.1.5 Words of other origin, especially, Sinhalam in Lanka Tamil

**V. Lankology: Tamil and Sinhalam**

6.1 Relationship between Tamil and Sinhalam in Lanka
6.1.1 Transacts between Tamil and Sinhalam
6.1.2 Tamil words in Sinhalam
7.1 Relationship between Tamil and Sinhalam literature
7.1.1 Transacts between Tamil and Sinhalam literature
7.1.2 Sinhalam aspects in the literature of Lanka Tamil
7.1 3 Tamil aspects in the literature of Sinhalam
8.1 Relationship between Tamil and Sinhalam in the Folklore of Lanka

**VI. Lankology: Caste**

9.1 Caste in Lanka
9.1.1 Concord and contrast and transacts in the mode of the castes of Tamils and Sinhalese in Lanka

**VII. Lankology: Religion**

10.1 Religion in Lanka
10.1.1 Religious transacts between Tamils and Sinhalese in Lanka

**VIII. Lankology : Customs and Manners**

10.1.2 Customs and manners of the people of Lanka

10.1.3 Transacts between Tamils and Sinhalese in the customs and the manners of the people of Lanka

**IX. Lankology : Medium of Higher Education**

11.1 Tamil as medium of higher education in Lanka

**X. Lankology : Economy**

12.1 Economy of Lanka

12.1.1 The contribution of the Tamil race to the economy of Lanka

**XI. Names in Lanka**

13.1 Place names in Lanka

13.1.1 Names of the people in Lanka

**XII. Tamil culture in Lanka**

13.1.2 Tamil culture in Lanka which is not witnessed in Tamilnadu

**XIII. Great Tamil personage of Lanka**

13.1.3 Tamil poets of Lanka
13.1.4 Tamil artists of Lanka
13.1.5 Tamil leaders of Lanka
13.1.6 Tamil kings of Lanka
13.1.7 Tamil scholars of Lanka

**XIV. Tamil Books in Lanka**

14.1 Tamil books printed in Lanka

**XV. Tamil Journals in Lanka**

14.1.1 Tamil journals in Lanka

**XVI. The Religion of Tamils in Lanka**

14.1.2 The history of the religion of the Tamils in Lanka

**XVII. Relationship between Lanka and India**

15.1 History of the relationship between Lanka, India and Tamilnadu

**XVIII. Generology of Lanka**

15.1.1 Politics

15.1.2 Economics

15.1.3 Literature

15.1.4 Arts

15.1.5 Religion

16.1 Fine Arts in Lanka

**XIX. Lanka and Tamils**

16.1.1 Contribution of Tamils to the development of Arts in Lanka

17.1 Books by Tamils on Lanka

17.1.1 Books by the people of Lanka on India and Tamilnadu

*Total number of topics: 55.*

# நிகண்டடைவு

திரு. வ. செயதேவன், பி.எசி., எம்.ஏ., சான்றிதழ்–மொழியியல்.

| வரிசை எண் | நிகண்டு | படைத்தவர் பெயர் | காலம் | குறிப்புகள் |
|---|---|---|---|---|
| 1. | சேந்தன் திவாகரம் (திவாகர நிகண்டு)* | திவாகர | கி.பி. 8ஆம் நூற்றுண்டு* | திவாகரரைச் சேந்தனுர் ஆதரித்தமையால், 'சேந்தன் திவாகரம்' என்னும் பெயர் பெற்றது. ஒரு பொருள் பல் பெயர்த் தொகுதி; ஒருசொல் பல்பொருள் பெயர்த்தொகுதி; பல்பொருள் கூட்டத்து ஒரு பெயர்த் தொகுதி. |
| 2. | பிங்கல நிகண்டு (பிங்கலந்தை) | பிங்கல முனிவர் | கி.பி. 8—12 நூற்றுண்டுகளின் இடைப்பட்ட காலம். | ஒரு பொருள் பல்பெயர்த் தொகுதி; ஒரு சொல் பல்பொருள் பெயர்த் தொகுதி. |
| 3. | பெயர் தெரியா நிகண்டுகள் (சில பக்கங்கள் கிடைத்துள்ளன) | ... | கி.பி. 8—16 நூற்றுண்டுகளின் இடைப்பட்ட காலம். | ... |
| 4. | சூடாமணி நிகண்டு | மண்டல புருடர் | கி.பி. 1520 | ஒரு பொருள் பல்பெயர்த் தொகுதி; ஒரு சொல் பல் |

| | | | | |
|---|---|---|---|---|
| | | | | பொருள் பெயர்த் தொகுதி; பல்பொருள் கூட்டத்து ஒரு பெயர்த் தொகுதி. |
| 5. | அகராதி நிகண்டு | சிதம்பர இரேவண சித்தர் | கி.பி. 1594 | ஒரு சொல் பல்பொருள் பெயர்த் தொகுதி. |
| 6. | உரிச்சொல் நிகண்டு | காங்கேயன் | 17ஆம் நூற்றாண்டின் முற்பகுதி. | ஒரு பொருள் பல்பெயர்த் தொகுதி; ஒரு சொல் பல் பொருள் பெயர்த்தொகுதி; பல்பொருள் கூட்டத்து ஒரு பெயர்த்தொகுதி. |
| 7. | கயாதரம் | கயாதரர் | 17ம் நூற்றாண்டு | ஒரு பொருள் பல்பெயர்த் தொகுதி; ஒரு சொல் பல் பொருள் பெயர்த்தொகுதி. |
| 8. | பல்பொருள் சூளாமணி நிகண்டு | ஈசுவர பாரதியார் | கி.பி. 1700 | ஒரு சொல் பல்பொருள் பெயர்த் தொகுதி; பல்பொருள் கூட்டத்து ஒரு பெயர்த்தொகுதி. |
| 9. | கைலாச சூடாமணி நிகண்டு. | (கைலாசம் என்பவரா-யிருக்கலாம்) | 17ம் நூற்றாண்டின் பிற்பகுதி | ஒரு பொருள் பல் பெயர்த் தொகுதி; ஒருசொல் பல் பொருள் பெயர்த் தொகுதி; பல்பொருள் கூட்டத்து ஒரு பெயர்த் தொகுதி. |

| | | | |
|---|---|---|---|
| 10. பாரதி தீபம் | திருவேங்கட பாரதி (அ) பரமானந்த பாரதி | 17ஆம் நூற்றாண்டின் இறுதிப்பகுதி | ஒரு பொருள் பல் பெயர்த் தொகுதி; ஒரு சொல் பல் பொருள் பெயர்த் தொகுதி. |
| 11. ஆசிரிய நிகண்டு | ஆண்டிப் புலவர் | 17ஆம் நூற்றாண்டின் இறுதிப் பகுதி | ஒரு சொல் பல்பொருள் பெயர்த் தொகுதி. |
| 12. அரும்பொருள் விளக்க நிகண்டு | அருமருந்தைய தேசிகர் | 18ஆம் நூற்றாண்டு | பல்பொருள் கூட்டத்து ஒரு பெயர்த் தொகுதி. |
| 13. தொகை நிகண்டு | சுப்பிரமணியக் கவிராயர் | 18ஆம் நூற்றாண்டு | பல்பொருள் கூட்டத்து ஒரு பெயர்த் தொகுதி. |
| 14. பொருள் தொகை நிகண்டு. | சுப்பிரமணிய பாரதி | ? | பல்பொருள் கூட்டத்து ஒரு பெயர்த் தொகுதி. |
| 15. பொதிகை நிகண்டு | சுவாமிநாதக் கவிராயர் | 18ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி. | ஒரு பொருள் பல்பெயர்த் தொகுதி; ஒருசொல் பல் பொருள் பெயர்த்தொகுதி. |
| 16. நாமதீப நிகண்டு | சிவசுப்பிரமணியக் கவிராயர். | 19ம் நூற்றாண்டின் முற்பகுதி அச்சு | ஒருபொருள் பல்பெயர்த் தொகுதி. |
| 17. வேதகிரியார் சூடாமணி நிகண்டு. | வேதகிரி முதலியார் (பதிப்பித்தவர்) | கி.பி. 1842 அச்சு | ஒருசொல் பல்பொருள் பெயர்த் தொகுதி. |
| 18. கந்த சுவாமியம் | சுப்பிரமணிய தேசிகர் | கி.பி. 1844 அச்சு | ஒரு பொருள் பல்பெயர்த் தொகுதி; ஒருசொல் பல் பொருள் பெயர்த்தொகுதி. |

| | | | | |
|---|---|---|---|---|
| 19. | தொகைப்பெயர் விளக்கம் | வேதகிரி முதலியார் (பதிப்பித்தவர்) | கி.பி. 1849 அசசு | பல்பொருள் கூடடதது ஒரு பெயர்த் தொகுதி. |
| 20. | இலக்கத் திறவுகோல் | ? | 19ஆம் நூற்றுண்டு | பல்பொருள் கூட்டத்து ஒரு பெயர்த் தொகுதி. |
| 21. | நாநார்த்த தீபிகை | முத்துசாமி பிள்ளை | கி.பி. 1850 | ஒருசொல் பல்பொருள் பெயர்த் தொகுதி. |
| 22. | சிந்தாமணி நிகண்டு | வைத்தியலிங்கம் பிள்ளை | கி.பி. 1874 அச்சு | ஒருசொல் பல்பொருள் பெயர்த் தொகுதி. |
| 23. | அபிதானத் தனிச் செய்யுள் நிகண்டு | கோபாலசாமி நாயக்கர் | கி.பி. 1878 அச்சு | ஒரு பொருள் பல்பெயர்த் தொகுதி. |
| 24. | விரிவு நிகண்டு | அருணசல நாவலர் | 19ஆம் நூற்றுண்டின் பிற்பகுதி. | ஒருசொல் பல்பொருள் பெயர்த் தொகுதி. |
| 25. | ஆரிய நிகண்டு | ? | ? | ? |
| 26. | பொதிய நிகண்டு | ? | ? | ? |
| 27. | ஔவை நிகண்டு | ? | ? | ? |
| 28. | அகத்தியர் நிகண்டு | அகத்தியர் | ? | மருத்துவத் துறை |
| 29. | போகர் நிகண்டு | போகர் | ? | மருத்துவத் துறை |
| 30. | கால நிகண்டு | தில்லைநாயகர் | ? | கணிதத் துறை |
| 31. | காரக நிகண்டு | தில்லைநாயகர் | ? | கணிதத் துறை |

* சேந்தன் திவாகரத்திற்கும் முற்பட்டு 'ஆதி திவாகரம்' என ஒரு நிகண்டு இருந்ததாகக்கூறுப. ஆனல் அதற்கு ஆதாரமேதுமில்லை.

# செய்தித் திரட்டு

## சிறப்பு நிகழ்ச்சிகள்

(i) 10—2—72 அன்று ஆக்ராப் பல்கலைக் கழகப்பேராசிரியர் ந. வீ. இராசகோபாலன் அவர்கள் 'தொல்காப்பியப் பொருளதிகாரம்' பற்றித் தமிழ்த் துறையின் சார்பில் சிறப்புரை ஆற்றினார்கள்.

(ii) டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை வெள்ளி விழா நினைவுச் சொற்பொழிவுத் தொடரில், திருமதி அ. காமாட்சி குமாரசாமி 13-15—3—72 ஆகிய மூன்று நாள்களிலும் 'தமிழ் இலக்கியத்தில் தாய்மை' என்னும் பொருளில் ஆய்வுரை நிகழ்த்தினார்கள். அதை முன்னிட்டு அவர்களுக்குத் தமிழ்த் துறையில் ஆசிரியரும் மாணவரும் 15—3—72 அன்று விருந்தளித்தனர்.

(iii) அன்னை சொர்ணம்மாள் அறக்கட்டளைச் சொற்பொழிவுத் தொடரில் டாக்டர் தா.ஏ.ஞானமூர்த்தி அவர்கள் 22-24—2—72 ஆகிய மூன்று நாள்களிலும் 'தமிழ்க் காப்பியங்களில் அவல வீரர்கள்' என்னும் பொருள் பற்றி உரையாற்றினார்கள். அதை முன்னிட்டுத் தமிழ்த் துறை ஆசிரியரும் மாணவரும் 23—2—72 அன்று விருந்தளித்தனர்.

(iv) பாரதிதாசனின் 81-வது பிறந்த நாளை முன்னிட்டுத் தமிழ்த் துறையில் 29—4—72 ல் நடந்த சிறப்புக் கூட்டத்தில் ஆராய்ச்சி மாணவர் திரு. மா. செல்வராசன் 'பாரதிதாசன் பாதை' என்னும் பொருள் பற்றிப் பேசினார்.

(v) பாரதிதாசனின் 82-வது பிறந்த நாளை முன்னிட்டுத் தமிழ்த் துறையில் 29—4—73 அன்று நடந்த சிறப்புக் கூட்டத்தில் தமிழ்த் துறைத் தலைவர்—பேராசிரியர் டாக்டர் ந. சஞ்சீவி அவர்கள் 'பாரதியாரும் பாரதிதாசனும்' என்னும் பொருளில் கட்டுரை படித்தார்கள். ஆராய்ச்சி மாணவர் திரு. அ. நாகலிங்கம் 'பாரதிதாசனும் திரு.வி.க' வும் என்னும் பொருளில் பேச்சொன்றினை ஆற்றினார்.

(vi) திரு. வி. க. வின் 91 ஆம் பிறந்த நாளையொட்டித் தமிழ்த் துறையில்29—8—73 அன்று சிறப்புக் கூட்டம் ஒன்று நடந்தது. அதில்

ஆராய்ச்சி மாணவர் திரு. அ. நாகலிங்கம் "திரு.வி.க. வின் தேசபக்தன்" என்னும் பொருள் பற்றிப் பேசினர்.

## சிறப்புக் கருத்தரங்குகள்

1. கப்பலோட்டிய தமிழர்—விடுதலை வீரர் வ. உ சிதம்பரனரின் நூற்றாண்டு விழாவை ஒட்டித் தமிழ்த்துறை 'வ. உ. சி. நூற்றாண்டு விழாக் கருத்தரங்கு' ஒன்றை 5—10—72 அன்று சிறப்புற நடத்தியது. இதில் நிகழ்ந்த ஆய்வுரை நிகழ்ச்சியும் பிறவும் இத்தமிழாய்வு இதழில் வெளியிடப்பட்டுள்ளன.

2. ஊரன் அடிகள் எழுதிய 'இராமலிங்க அடிகள் வரலா'ற்று நூலின்மேல் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறை ஆசிரியர் கருத்தரங்கு ஒன்றை 25—11—72-ல் நிகழ்த்தினர். அதில் ஆசிரியரும் மாணவருமாக அறுவர் கட்டுரைகள் படித்தனர்.

இவை முற்றும் 'சன்மார்க்க விவேக விருத்தி' இதழில் வெளி வந்துள்ளன. இவற்றுள் ஒன்றாகிய 'இராமலிங்க அடிகள் வரலாறு காட்டும் அடிகளார் அருள் வாழ்க்கை' என்னும் கட்டுரை 'சத்தியகங்கை' இதழிலும் தொடர்கட்டுரையாக வெளிவந்துள்ளது.

3. 'இந்திய விடுதலை வெள்ளி விழாக் கருத்தரங்' கொன்று 26-28—10—73 ஆகிய மூன்று நாள்களிலும் தமிழ்த் துறையின் சார்பில் நிகழ்ந்தது. இதில் தமிழ்த்துறை ஆசிரியர் மாணவர் பேராளர்கள் 35 பேர் கலந்து கொண்டு ஆய்வுரைகளை வழங்கினர். 'இந்திய விடுதலையும் தமிழ் இலக்கியமும்' என்னும் பொதுப் பொருளில் பல்வேறு வகையிலும் இலக்கியம் வளர்ந்துள்ளமை குறித்து 40 கட்டுரைகள் படிக்கப்பட்டன. இவற்றைத் தனி நூலாகச் சென்னைப் பல்கலைக் கழகம் வெளியிட்டுள்ளது.

## பாராட்டு

(i) 29—4—72-ல் தமிழ்த் துறையில் நடந்த பாரதிதாசன் பிறந்த நாளில் சிறப்புக் கூட்டம் ஒன்றும் நடந்தது. அதில் தமிழ்த் துறைத் துணைப்பேராசிரியர் டாக்டர் சி.பாலசுப்பிரமணியன் அவர்களுக்குத் திருவண்ணாமலை குன்றக்குடி ஆதீனம் 'புலவரேறு' என்னும் பட்டம் அளித்துச் சிறப்பித்தமையை முன்னிட்டு அன்னாருக்குத் துறை சார்பில் பாராட்டுரையும் வழங்கப்பட்டது.

(ii) தமிழ்த்துறைத் தலைவர் — பேராசிரியர் டாக்டர் ந. சஞ்சீவி அவர்களுக்குத் திருவண்ணாமலை குன்றக்குடி ஆதீனம் 'நூலறிபுலவர்' என்னும் பட்டம் சூட்டிச் சிறப்பித்தது குறித்துத் துறைத் தலைவரவர்களுக்கு 18—4—73 அன்று பாராட்டுக் கூட்டமொன்று நடத்தப்பட்டது.

## 1972-73ஆம் ஆண்டுகளில் தமிழ்த்துறையில் நடைபெற்ற ஆசிரியர்-மாணவர் கருத்தரங்கு

| எண் | நாள் | கட்டுரையாளர் (ஆசிரியர்) | பொருள் | கட்டுரையாளர் (மாணவர்) | பொருள் |
|---|---|---|---|---|---|
| 1. | 18—8—72 | டாக்டர் ந. சஞ்சீவி | டாக்டர் மு.வ.வின் நாடகங்கள் | திரு. டி. ஆர். சனார்த்தனம் | தமிழ் நாடக உலகில் அறிஞர் அண்ணாவின் இடம். |
| 2. | *25—11—72 | டாக்டர் சி. பாலசுப்பிரமணியம் | இராமலிங்க அடிகள் வரலாறும் திருவருட்பாவும் | திரு. அ. நாகலிங்கம் | திரு. வி. க.வும் இராமலிங்கரும் |
| | | திரு. க. த. திருநாவுக்கரசு | இராமலிங்க அடிகள் வரலாறு காட்டும் காலநிலை | | |
| | | திரு. மு. சண்முகம் பிள்ளை | இராமலிங்க அடிகள் வரலாற்றில் சமயக் கருத்துகள் | | |
| | | | இராமலிங்க அடிகள் வரலாறு காட்டும் திருவருட்பா விளக்கம் | | |
| | | திரு. இ. சுந்தரமூர்த்தி | இராமலிங்க அடிகள் வரலாறு காட்டும் அடிகளார் அருள் வாழ்க்கை. | | |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 3. | 30—7—73 | திரு. வ. செயதேவன் | தொல்காப்பியரும் அகராதிக் கலையும் | திரு. மா செல்வராசன் | பாரதிதாசனின் முதல் மூன்று காப்பியங்கள்-ஓர் ஆய்வு |
| 4. | 9—11—73 | திரு. கு. மோகனராசு | கலைக்களஞ்சியத்தில் தமிழியல் பொதுக் கட்டுரைகள் | திரு. வீ. ஞான சிகாமணி | இரட்சணிய மனோகரம்-ஒரு திறனாய்வு. |
| 5. | 21—12—73 | திரு. இ. சுந்தரமூர்த்தி | 'நடைநலம்'—1 | திரு. அ. நாகலிங்கம் | திரு. வி க.வின் திருமந்திரப் பதிப்பு. |
| | | திரு. கு.மோகனராசு | 'திருக்குறளிலும் தொல்காப்பியத்திலும் அறம் பொருள் இன்பம் வைப்புமுறை' | திரு. வீ. ஞான சிகாமணி | இரட்சணிய யாத்திரத்தின் தோற்றமும் பதிப்பும். |

*25—11—72-ல் படிக்கப் பெற்ற ஆறு கட்டுரைகளும் தவத்திரு ஊரன் அடிகளார் நடத்திவரும் 'சன்மார்க்க விவேக விருத்தி' இதழில் வெளிவந்துள்ளன.

## சுற்றுலா

31—12—72 அன்று ஜீவபந்து டி. எஸ். ஸ்ரீபால் அவர்கள் வேண்டு கோட்கிணங்கத் தமிழ்நாடு ஜைன சங்கத்தாருடன் 'திருநறுங் கொண்டை' என்னும் சைனத்தலத்திற்குத் தமிழ்த் துறை ஆசிரியரும் மாணவரும் கல்விச் சுற்றுலா மேற்கொண்டனர். (தமிழ்த்துறை வெளியீடான 'தமிழாய்வு' முதல் தொகுதியில் திருநறுங்கொண்டை நாதரான அப்பாண்டை நாதர் பெயரிலுள்ள 'அப்பாண்டைநாதருலா' வெளிவந்துள்ளது.)

## தமிழ்த்துறையில் பணியாற்றுவோர்

டாக்டர் ந. சஞ்சீவி, தமிழ்த்துறைத்தலைவர், பேராசிரியர்.
டாக்டர் சி. பாலசுப்பிரமணியன், துணைப்பேராசிரியர்.
திரு. வ. செயதேவன், விரிவுரையாளர், அகராதிப்பணி.
திரு. மு. சண்முகம் பிள்ளை, விரிவுரையாளர், திருக்குறள் ஆய்வுப்பகுதி.
திரு. இ. சுந்தரமூர்த்தி, விரிவுரையாளர், திருக்குறள் ஆய்வுப்பகுதி.
திரு. கு. மோகனராசு, ஆய்வுத்துணைவர், திருக்குறள் ஆய்வுப்பகுதி.

## தமிழ்த்துறையில் ஆராய்ச்சி செய்வோர்

### டாக்டர் பட்டம் (Ph. D)

| அ. ஆசிரியர் | ஆய்வுப்பொருள் |
| --- | --- |
| திரு. புலவர் இ. சுந்தரமூர்த்தி, எம்.ஏ., டிப். மானிடவியல்., | பரிமேலழகர் உரைத்திறன —ஒரு திறனாய்வு" |
| திரு. வ. செயதேவன், பி.எசி., எம்.ஏ., சான்றிதழ்—மொழியியல் | "தமிழ் அகராதிக் கலை வளர்ச்சியும் வரலாறும்" |
| திரு. கு. மோகனராசு, பி.எசி., எம்.ஏ., | "திருக்குறளும் பழந் தமிழ் நூல்களும்" |

| ஆ. மாணவர் | |
| --- | --- |
| திரு. வி. ஞானசிகாமணி, எம்.ஏ., டிப். தெலுங்கு. | "ஏ.ஆ. கிருஷ்ண பிள்ளையின் நூல்கள்" —ஓர் ஆராய்ச்சி. |
| திரு. மா. செல்வராசன், எம்.ஏ., | "பாரதிதாசன் நூல்கள்" |
| திரு. அ. நாகலிங்கம், எம்.ஏ., | "திரு.வி.க. வின் நூல்கள்' |
| திரு. சு. சண்முகசுந்தரம், எம்.ஏ., | "திருநெல்வேலி மாவட்ட நாட்டுப் பாடல்கள்" |
| திரு. சி. நா. குமாரசாமி, எம்.ஏ., | "தமிழிலக்கியங்களில் நன்னாட்டுக் கோட்பாடு" |

**GANDHI VIDYALAYAM**

M. Arunachalam, M.A.,

Tiruchitrambalam,
(Via) Pandanallur,
Tanjavoor Dt.

*Date*: *25-5-73.*

அன்புடைய சஞ்சீவி அவர்களுக்கு,

நலம் பல நிறைக.

எல்லாப் பொருள்களையுமே தொகுத்து அட்டவணைகள் எழுதியிருக்கிறீர்கள். ஒன்றும் குறைவில்லை. முயற்சி பெரிதும் பாராட்டற்குரியது.

அன்பன்,
(ஒப்பம்) மு. அருணசலம்

(உண்மைப்படி)

## தமிழாய்வுக்குப் பாராட்டு

# மறைத்திரு. மாணிக்கவாசக ஞானதேசிக சுவாமிகள் சிவராஜயோகமடம்,

கா. மேலையூர் அஞ்சல், திருவெண்காடு வழி

இடம்: கா. மேலையூர்
தேதி 19-5-1973.

கொன்றை சூடி நின்ற தேவை
அன்றி ஒன்றும் நன்றி லோமே.
—திருஞானசம்பந்தர்.

டாக்டர். ந. சஞ்சீவி அவர்கள்
தமிழ்த் துறைத் தலைவர்,
சென்னைப் பல்கலைக் கழகம்

அன்புடையீர்,

திருவருள் முன்னிற்க. 'தமிழாய்வு' ஒரு சிறந்த தமிழ்ப்பணி. தமிழுக்கு ஆக்கம் தரும் இதுபோன்ற பணிகள் எண்ணிறந்தன சென்னைப் பல்கலைக் கழகம் செய்யவேண்டும் என்ற எனது பேரார்வத்தையும் முன்னோடியாக ஒரு பணியினைச் செய்து காட்டிய தங்கள் பல்கலைக் கழகத்திற்கு எனது உளமார்ந்த நன்றியையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

இங்ஙனம்
(ஒப்பம்) மாணிக்கவாச ஞான தேசிகர்

(உண்மைப்படி)